தங்க மோதிர தொடர் கதை

# சொல் சொல் என் உயிரே!

இந்த வாரம் முதல் தொடர்ந்து இந்தக் கதையைப் படியுங்கள். உங்கள் அபிமான எழுத்தாளர் ஒருவரின் அரிய படைப்பு இது! மற்ற விபரங்கள் அடுத்த இதழில் காண்க!

அஞ்சலி விசித்திரக் கனவுகளுக்குள்ளிருந்து திமிறிக்கொண்டு வெளிப்பட்டபோது தன் மெலிந்த உடல் குளிரைத் தாங்கச் சக்தியின்றி மெல்லிய கவுனுக்குள் வெடவெடத்துக் கொண்டிருந்ததை உணர்ந்தாள்.

கடியாரம் இனிய குரலில் ராக மிசைத்து, லண்டன் வெஸ்ட்மின்ஸ்டர் பாணியில் 'டாய்ங்ங்... டாய்ங்ங்' என்றது.

மணி ஏழா!

அஞ்சலி புரண்டு பார்த்தாள்.

இன்னும் விடியாத மாதிரி ஏன் இவ்வளவு இருட்டு?

கண்ணைப் பறிக்கும் மின்னல்கள் வெனீஷியன் ப்ளைண்ட்சில் வெளிச்ச



வரிகளை விட்டு விட்டுக் காண்பித்தன. தொலைதூர பீரங்கித் தாக்குதல் போல இடி முழக்கங்கள்.

மழையா! ய்ய்ய்யா!

அஞ்சலி குதூகலத்துடன் எழுந்தாள். மழையென்றாலே அவள் ஆனந்தத்தால் பொங்கி ஊற்றுவாள்.

மழையை அவள் நேசித்தாள்.

அதற்குக் காரணம் மழையின் குளிர்ச்சியும் ஓசையும் மணமும் அல்ல.

மழையினால் மாமூல் வாழ்க்கை பாதிக்கப்படுவதை அவள் விரும்பினாள். வரவேற்றாள். ஏனெனில்—

வாழ்க்கையின் சுவாரசியமற்ற இயந்திர மாமூல்கள் அவளுக்கு சுத்தமாகப் பிடிப்பதில்லை.

காலைநேர மழையின் தயவால் எத்தனை நாட்கள் கல்லூரியை அவள் 'கட்' அடித்திருப்பாள்! அந்த நாட்களில் கிடைத்த மகிழ்ச்சியை இனி அவள் எங்கே போய் கொள்முதல் செய்வாள்?

படுக்கையிலிருந்து அஞ்சலி இறங்கி நடந்தபோது இடுப்புப் பிராந்தியத்தில் எலும்பு முறிவு ஏற்பட்ட வேதனை. 'முரட்டுப் பயல்' என்று முணுமுணுத்தது அவள் மனம்.

முதல் வேலையாக விசையை அழுத்தி குளிர் பரப்பிக்கொண்டிருந்த கூரை விசிறியின் இறகுகளுக்கு ஓய்வு கொடுத்தாள்.

கண்ணாடிச் சுவர்ப்பக்கம் சென்று, திரைச் சீலையை விலக்கி, பத்தாவது மாடியிலிருந்து உலகத்தைப் பார்த்தாள்.

புதிய சென்னையின் பூதாகாரமான வான வரம்புக் கட்டிடங்களை சோப் இல்லாமல் குளிப்பாட்டிக் கொண்டிருந்தது அடைமழை.

கூவத்துக்கு அப்பால் எல்லோஸ்டோன் அபார்ட்மென்ட்சின் அநேக குடியிருப்புத் தட்டுக்களில் மின்வெளிச்சங்கள். ஏழாவது மாடியின் மூலையைக் கூர்ந்து பார்த்தாள். இருண்டிருந்தது. ஆனால் அங்கே வசிக்கும் குருநாதன் நிச்சயம் இந்த சுந்தர் போல உறங்கிக்கொண்டிருக்க மாட்டான். பி.பி.சி.யை அலற விட்டு விட்டு விளக்குகளைப் போடாமல் இருட்டிலேயே அமர்ந்து கேட்டுக் கொண்டிருப்பான். கஞ்சப்பயல். இலவசமாக ஈமச்சடங்கு என்றால் தன்னையே சுட்டுக்கொள்வான்.

அஞ்சலி கண்ணாடிச் சுவரில் நெற்றியைப் பதித்து எட்டிக் கீழே பார்த்தாள்.

வெகு ஆழத்தில் மரங்கள் சாமி ஆடின. ஈரச்சாலையில் வாகன வெளிச்சங்கள் அடிக்கடி தங்கம் வார்த்தன.

அழுக்குத் துணிகளால் முக்காடிட்டுக்கொண்டு கான்வாஸ் போர்த்திய கைவண்டியை இழுத்தும், தள்ளியும் சென்றவர்களுக்காக அவள் மனம் இரக்கத்தைச் சுரந்தது.

மறுகணம், 'இரக்கப்படாதே. அது பாவம். அடுத்தவர்களுக்காக இரங்கினால் நீ தொலைந்தாய். அப்புறம் உன்மீது இரக்கப்பட இந்த உலகில் யாரும் இருக்க மாட்டார்கள்' என்றாள், அஞ்சலிக்குள்ளிருந்த இன்னொரு அஞ்சலி.

திரும்பிப் பார்த்தாள்.

படுக்கையில் சுந்தர் எல்லாப் போர்வைகளையும், எல்லா விரிப்புக்களையும் வாரி தலை வழியாகப் போர்த்திக்கொண்டு முகத்தைக்கூட வெளியே காண்பிக்காமல் சலவை மூட்டை போலக் கிடந்தான்.

இரவில் என்னுடைய போர்வையை பறித்துக்கொண்டு, எனக்குக் கீழே இருந்த படுக்கை விரிப்பையும் உருவிக்கொண்டு என்னைக் குளிரில் உருட்டிவிட்டிருக்கிறான்! எவ்வளவு சுயநலம் இந்தப் பயலுக்கு!

சுயநலம் பாவமா?

இந்த நகரத்தில் ஆயிரக்கணக்கான ஏழைக் குழந்தைகள் ஒழுகும் ஓட்டைக் குடிசைகளில் முடங்கிக் கொண்டிருக்கும் இந்த மழைவேளையில் நான் மட்டும் 'குளிருக்கு அடக்கமாக இந்த மாடியறையில் எவ்வளவு சௌகரியமாக இருக்கிறேன். இது மட்டும் சுயநலமில்லையா? நான் சுவாசிப்பதும், உண்பதும், குளிப்ப

தும் சுயநலமில்லையா? சுயநலமென்பது தவிர்க்க முடியாத, மனிதனின் இயல்பான சுபாவமாயிற்றே. இயல்பானவை எப்படிக் குற்றமாகும்?

குளியலறைபுகுந்தாள். கண்ணாடி பார்த்து பல்வரிசையை பளபளப் பாக்கினாள். அங்கிருந்து வெளியேறி ஹாலில் நடந்தாள்.

தலைவாயிலைத் திறந்தாள். குளிர் காற்று முகத்தில் பல்லாயிரம் ஊசிகளை ஏற்றியது. பால் பாக்கெட்டையும், பத்திரிகைகளையும் எடுத்துக் கொண்டு கதவை மீண்டும் சாத்தித் தாழிட்டாள்.

பத்திரிகையின் முதல் பக்கச் செய்திகளை கடனுக்காகப் பார்த்து விட்டு, சுந்தர்மீது வீசிவிட்டு சமையற்கட்டு சென்றாள்.

'ஒருநாள்கூட சீக்கிரமா எழுந்திருச்சு காபி போட மாட்டேங்கறானே' என்று மனசுக்குள் சொல்லிக்கொண்டே ஸ்டவ் பற்ற வைத்தாள். 'என்னை கொத்தடிமைன்னு நினைச்சுக்கிட்டானா, இல்லே இன்னும் கேவலமா பெண்டாட்டின்னு முடிவு பண்ணிட்டானா இவன்?'

முழங்கைபட்டு அலமாரியில் இருந்த பாத்திரங்கள் 'கடாமுடா' வென்று உருண்டோடின.

அந்தச் சப்தத்தால் படுக்கையில் கிடந்த சலவை மூட்டை உயிர் பெற்று அசைந்தது.

அஞ்சலி காபியும், அவியல் முட்டையும் தயார் செய்தாள். கவுனைக் களைந்து போட்டுவிட்டு மார்புக்கு மேலே டவலை இறுக்கமாகக் கட்டிக்கொண்டாள்.

சுந்தர் போர்வையை விலக்கிக் கொண்டு அஞ்சலியைப் படுக்கையில் தேடினான்.

துண்டைக் கட்டிக்கொண்டு நின்ற அஞ்சலி சற்றுத் தள்ளி ஸ்டூல் மேல் பாதத்தை எடுத்து வைத்து சிங்கப்பூர் கிரீமை காலுக்குப் பூசிக்கொண்டிருந்தாள். குளியல் தொட்டிக்குள் விழப் போவதற்கு முன் தினமும் இந்தக் கிரீமை அவள் எதற்காகவோ பூசிக்கொள்ளுகிறாள்.

"குட் மார்னிங் பேபி."



"தீபாவளி ரிலீஸுக்கு ஒண்ணு ரெடின்றே. பொங்கல் ரிலீஸுக்கு ஒண்ணு ரெடின்றியே. எப்படி முடியும்?"

"தீபாவளி ரிலீஸ் பெரிய வீட்டோடது. பொங்கல் ரிலீஸ் சின்ன வீட்டோடது!"

–வெ. சீதாராமன்

"பாத்ரூம் போகணும்னா சீக்கிரம் போயிட்டு வாங்க. நான் உள்ளே போனேன்னா வெளிய வர நேரமாகும்" என்றாள் அஞ்சலி.

நெளித்துக் கொட்டாவியை வெளியேற்றிய சுந்தர் "நைட் நீ வர்றப்ப மணி என்ன இருக்கும்?" என்று கேட்டான்.

"டுவெல்வ் தர்ட்டிக்கே வந்துட்டேனே."

"லோன்லி லேடி படத்துக்கு மறுபடியும் போயிருப்பே."

"இல்லே. இனிமேத்தான் ஆறாவது வாட்டி பாக்கணும்."

"அப்புறம் ஏன் அவ்வளவு நேரம்?"

"எல்லோஸ்டோன்."

"குருகிட்டேர்ந்து அழைப்பு வந்துச்சா?"

"இல்லே. நானாத்தான் போனேன்."

"என்ன சொன்னான்?"

"நாங்க எங்கே பேசினோம்?" என்று சொல்லிவிட்டு ஓரக்கண்ணால் சுந்தரைப் பார்த்துச் சிரித்தவள், "நீ வரவர போரடிக்க ஆரம்பிச்சுட்டேப்பா. அதனால்தான் நேத்து நைட் அவனைத் தேடிப் போக

வேண்டிய அவசரம் ஏற்பட்டுருச்சு" என்றுவிட்டு மீண்டும் சிரித்தாள்.

"அவன்கிட்டே அப்படி என்ன ஸ்பெஷாலிட்டி?"

"நிறைய."

"நிறையன்னா?"

"வாத்ஸ்யாயனர்லேயிருந்து ஃப்ராய்ட், மாஸ்டர்ஸ் அண்ட் ஜான்சன், டாக்டர் ரூத் வரைக்கும் எல்லாரையும் அவன் கரைச்சுக் குடிச்சிருக்கான்."

"ஏட்டுச் சுரைக்காய் எப்படி கறிக்கு?"

"உதவுதே! செமத்தியா உதவுது. பேருக்கேத்த மாதிரி அவன் குரு தான். நுணுக்கமான டெக்னிக்குகளை பிரயோகம் பண்ணி உடம்புல இருக்கிற ஒவ்வொரு செல்லையும் நடனமாட வெச்சுடுவான்."

"அப்படீன்னா அவன் கூடவே நீ தங்கிக்கலாமே?"

"தங்கிக்கலாம்... சீய்! அவனோட குடியிருக்கிறது கஷ்டம்பா. ஒரு மாசத்துல நேத்து மாதிரி சில மணி நேரங்களை வேணா அவனோட செலவழிக்கலாம்."

'ஹ்ஹ்ஹஹ்ஹ' வென்று சுந்தர் தணிந்த முரட்டுக் குரலில் சிரித்தான்.

"என்ன சிரிக்கிறே?"

"ஒண்ணுமில்லே."

"ப்ளாக் காபி, பாயில்ட் எக் ரெடியா இருக்கு. போய் சமர்த்தா காலி பண்ணிட்டு, கம்பி நீட்டிடாதே. இன்னிக்கு ஞாயிற்றுக்கிழமை. வீட்டைக் கிளீன் பண்ணணும்."

"யார் நானா?"

"ஆமா. போன வாரம் நான் பண்ணினேன். மறந்துட்டயா?"

"சரி" என்று அலுப்போடு சொல்லிவிட்டு எழுந்தான் சுந்தர்.

"எனக்கு ஐநூறு ரூபாய் பணம் குடு சுந்தர்."

"எதுக்கு?"

"வேணும். அடுத்த வாரம் தந்துர்றேன்."

"தர்றேன். நீ எனக்குத் திருப்பித் தரவேண்டாம்."

"அப்படீன்னா வேண்டியதில்லே" என்றாள். மேசை டிராயரை இழுத்து குளியல் தொட்டிக்குள் போட நறுமண காப்ஸ்யூல் உருண்டையை எடுத்தாள். சுந்தர் குளியலுக்குள் நுழைந்து கதவை உட்பக்கம் தாழிட்டான்.

வாஷ் பேசினுக்கு மேலேயிருந்த முகம் பார்க்கும் கண்ணாடிக்கும் சுவருக்கும் இடையே மறைத்து வைத்திருந்த சின்ன குறிப்பேடு ஒன்றை எடுத்து அன்று செல்ல வேண்டிய இடங்களையும், சந்திக்க வேண்டிய நபர்களையும் தெரிந்துகொண்டான். முகச்சவரத்தை முடித்தான். குளிர் நேரத்தில் வெறும் டவல் மட்டும் கட்டிக்கொண்டு காத்திருக்கும் அஞ்சலியை வெளியே அதிக நேரம் காக்க வைக்க விரும்பாமல் ஷவருக்குக் கீழே குளியலை அவசரமாக முடித்தான்.

வெளியே வந்தவன் சற்று உரத்த குரலில், "அஞ்சலி நீ போகலாம்" என்று குரல் எழுப்பிவிட்டு சாப்பாட்டு மேசைக்குச் சென்றான்.

முட்டைகளை மேசையில் தட்டி தோல் நீக்கி உப்பு மிளகு தூளோடு விழுங்கி, கருப்புக் காபி பருகினான்.

படுக்கையறை சென்று பத்திரிகையை எடுத்துப் புரட்டினான்.

முதல் பக்க ஆயுத பேர ஊழலில் இருந்து கடைசிப் பக்க சப் ஜூனியர் கால் பந்தாட்டக்காரர்களின் ஊழல் வரை எல்லாவற்றையும் வாசித்து விட்டுத் தூக்கிப் போட்டான்.

"அஞ்சலி! அஞ்சலி!"

இன்னுமா குளிக்கிறாள்!

எழுந்து குளியலறையின் பக்கம் சென்றான்.

கதவு பாதி திறந்திருந்தது.

ஒருநாள் அவள் உள்ளே போய்க் கதவைத் தாழிட மறந்துவிட்டாள். சுந்தரும் அவள் உள்ளே சென்றதை மறந்துவிட்டு கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே போய் ஏகமாக வாங்கிக் கட்டிக்கொண்டான்.

எனவே—

கதவருகே ஜாக்கிரதையாகச் சென்று "அஞ்சலீ!" என்று கூப்பிட்டான். பதில் வரவில்லை.

உள்ளே அவள் குளிக்கிற மாதிரியும் சப்தங்கள் இல்லை.

வந்தது வரட்டும் என்று கதவைத் தள்ளிக்கொண்டு உள்ளே நுழைந்து திடுக்கிட்டு நின்றான்.

குளியல் தொட்டியில் நீர் தெளிவாக அசைவற்றிருந்தது.

அஞ்சலியைக் காணோம்.

குளித்திருந்தால் அவள் சுற்றிக்கொண்டிருந்த டவல் ஈரமாக இங்கே தொங்கிக்கொண்டிருக்குமே!

"அஞ்சலி! இன்னுமா நீ குளிக்கலே?" என்றவாறு வெளியேறினான்.

ஹாலில் அவள் இல்லை.

சமையற்கட்டிலும் ஸ்டோர் ரூமிலும் தேடிப் பார்த்தான். எங்கே போயிருப்பாள்!

குளியல்தொட்டிக்குள் போடுவதற்காக அவள் எடுத்த வாசனை வில்லை கோலிக்குண்டு போல படுக்கையறை மேசைமீதிருந்தது.

வீடெங்கும் தேடியும் அவள் மேனியைச் சுற்றிக்கொண்டிருந்த டவலையும் கண்டுபிடிக்க முடியவில்லை.

வீட்டின் தலைவாயிலுக்கு ஓடினான். கதவில் தாழ்ப்பாள் விலகியிருந்தது. குளிக்கத் தயாராக நின்றவள் கதவைத் திறந்துகொண்டு எங்கே போயிருப்பாள்?

கீழே இறங்கி ரொட்டி வாங்கச் சென்றிருப்பாளோ?

ரொட்டி வாங்க டவல் கட்டிக்கொண்டா செல்வாள்?

காரிடாரில் லிஃப்ட் வரை நடந்தான்.

விசையை அழுத்தினான்..

ஒருவேளை மொட்டை மாடிக்குப் போய் அங்கேயிருந்து குதித்து... சேசே! தற்கொலை செய்யும் அளவுக்கு அவளுக்கு எந்த வேதனையும் கிடையாது. அவள் கோழையும் அல்ல.

லிஃப்டில் பூமிக்கு இறங்கினான்.

மழை மேலும் வலுத்து கொட்டோ கொட்டென்று கொட்டிக்கொண்டிருந்தது. புகைமண்டலம் போல தூவானம்.



"ஏன் போஸ்ட்மேன் திடீர்னு சிரிக்கறீங்க?"

"நான் சிரித்தால் தீபாவளி!"

"ஓஹோ, தீபாவளி இனாமா?"

—வெ.சீதாராமன்

ரொட்டிக் கடை திறக்கவில்லை. அந்தக் கட்டிடத்தில் இருந்த எந்தக் கடையும் திறக்கவில்லை. எல்லாக் கடைகளும் எட்டரைக்கு மேலேதான் திறக்கும்.

சாலையோரம் ஒரே ஒரு ஆட்டோ டிரைவர் இல்லாமல் நின்றது.

மறுபடியும் பத்தாவது மாடிக்கு ஏறினான்.

ஒளிந்துகொண்டு விளையாட்டுக் காட்டும் பழக்கமெல்லாம் இவளுக்குக் கிடையாதே.

குனிந்து கட்டிலுக்குக் கீழே தேடினான்.

பீரோவுக்குப் பின்னே ஒளிய இடம் கிடையாது.

தொலைக்காட்சிப் பெட்டியை வெறித்தவாறு சுந்தர் கற்பனையில் மூழ்க—

அஞ்சலியின் புகைப்படம் தொலைக்காட்சித் திரையில் தோன்றியது. பளீரென்று பல்வரிசை காண்பித்து போதையூட்டும் சிரிப்பைச் சிரித்தாள்.

'காணாமல் போனவர்களைப் பற்றிய அறிவிப்பு' என்று தொலைக்காட்சி பேசத் தொடங்கியது.

'அஞ்சலி என்ற 21 வயது பெண்ணைக் கடந்த கால் மணி நேரமாகக்

37-ம் பக்கம் பார்க்க

திரை உலகில்
புதிதாக
மணமான
ஜோடிகள்
தங்கள் தலை
தீபாவளியை
எப்படிக்
கொண்டாடப்
போகின்றனர்?
அவர்களே
சொல்கின்றனர்.



ஹேமா - திலீப்

மீரா - ராஜ்குமார்

31-ம் பக்கத்தொடர்ச்சி:

காணவில்லை. நிறம் துருவேறிய ரோஜாப்பூ போன்ற ஒரு மாதிரியான சிவப்பு. உயரம் குருநாதனின் உயரம். அல்லது சுந்தரின் தோள் மட்டத்துக்கு இருப்பாள். காணாமல் போன சமயம் உடம்பில் ஒரே ஒரு டவல் மட்டும் கட்டிக்கொண்டிருந்தாள். இப்பெண்ணைப் பற்றித் தகவல் தெரிந்தால் தெரிவிக்க வேண்டிய முகவரி, காவல்துறை கட்டுப்பாட்டு அறை, காவல்துறை ஆணையர் அலுவலகம்... வேண்டாம் வேண்டாம். சுந்தருக்கு ஒரு போன் போட்டால் போதும்.'

கண்ணாடிச் சுவர் ஓரம் சென்றான் சுந்தர். எல்லோஸ்டோன் கண்ணில் பட்டது.

தொலைபேசியை எடுத்தான். குருநாதனுக்கு எண்களை அழுத்தினான்.

"குட்மார்னிங் குரு."

"என்னம்மா மெட்ராஸ் மழை எப்படியிருக்கு?"

"மழையைப் பத்தி சாவகாசமா முஷைரா நடத்துவோம். முதலில் அஞ்சலிய பேசச் சொல்லு."

"அஞ்சலி இங்கே இல்லையே!"

"வரலே?"

"வந்தா. நேத்து சாயந்தரம் வந்தா. நைட் பன்னிரண்டு மணி வரைக்கும் அழகா கம்பெனி குடுத்தா. சும்மா சொல்லக்கூடாது மச்சான். அஞ்சலி அஞ்சலிதான்."

"அவ குரு குருதான்ங்கறா. நீ அஞ்சலி அஞ்சலிதான்ங்கறே. எப்படியோ உடைஞ்சது ஒட்டிக்கிட்டா எனக்கு சந்தோஷம்தான். அங்கே வரலியா அவ?"

"நைட்டே இங்கேயிருந்து கிளம்பிப் போயிட்டா மச்சான். நாகூட இந்த ராத்திரியிலே ஏன் போறேன்னு கேட்டேன். சுந்தர் தேடுவான்னு சொன்னா. அவ நைட் வந்து சேரலேன்னா நீ தூங்காம துடிச்சுடுவியாமே. அப்படியா?"

"இப்ப அப்படித்தான் துடிச்சுக்கிட்டிருக்கேன். அவ எங்கே போயிருப்பாள்னு தெரியலே."

## திரைமணியங்கள்

"சாஞ்சா சாயற பக்கம் சாயிற செம்மறி ஆடுகளா" என்று பட்டுக்கோட்டை பாட்டெழுதியது தான் எத்தனை தீர்க்க தரிசனம்?

கரகாட்டக்காரன் வெற்றியைத் தொடர்ந்து சிலம்பாட்டக்காரன், நையாண்டிமேளக்காரன், தெம்மாங்கு பாட்டுக்காரன்... என்று ஒரே "காரன்" களும்,

புதியபாதை வெற்றியைத் தொடர்ந்து, புதிய மனிதன், புதிய பார்வை, புதியவர்கள் என ஒரே "புதிய" (?) சிந்தனைகளுமாய் படப் பெயர்களை பதிவு செய்துள்ளார்கள்.

படத்தின் டைட்டிலில் கூட ஒரிஜினாலிடி பஞ்சமாகிவிட்டதே!

— சூரன்

"அப்படீன்னா நைட் அங்கே வரலியா அவ?"

"நைட் வந்தாடா. பக்கத்துலதான் படுத்திருந்தா. கால்மணி நேரத்துக்கு முன்னால நான் பாத்ரூமுக்குள்ளே நுழைஞ்சப்ப அவ டவல் கட்டிக்கிட்டு குளிக்க தயாரா நின்னா. என்னை சீக்கிரமா குளிச்சிட்டு வெளியே வரச் சொன்னா. நான் அவசர அவசரமா ஷேவ் பண்ணிட்டு குளிச்சிட்டு வெளியே வந்து பார்க்கிறேன், கதவு திறந்து கிடக்கு. அவளையும் காணோம், டவலையும்

காணோம். ஏன் குரு, டவல் கட்டிக்கிட்டு மெட்ராசுக்குள்ளே அவ சுத்தறதுண்டா?"

"புதுசா போலிஷ் ஜோக் ஏதுனாச்சும் படிச்சியா மச்சான்?" என்று சிரித்தான்.

"சிரிக்காதே. சீரியசா சொல்."

"மேய்ல் ஷாவ்னிசத்தை எதிர்த்து போராட்டம் நடத்தப் போயிருப்பா சுந்தர்."

"இந்த மழைக்குள்ளேயா?"

"மழையில் நனையிறதுல கிடைக்கிற த்ரில்லை ஆண்வர்க்கம்கூட எனக்கு தந்ததில்லைன்னு பல தடவை. அவ எங்கிட்டே சொல்லியிருக்கா."

"எங்கே போனாலும் சொல்லிட்டுப் போகலாமே என்கிட்டே."

"புருஷன்கிட்டயே அவ சொல்லிட்டுப் போனதில்லயே."

"அவளுக்கு அந்த அளவுக்கு இடம் குடுத்தது உன் தப்பு."

"தப்பு ரைட்டுன்னு இந்த உலகத்துல எதுவுமே கிடையாது மச்சான். நாம செய்றதெல்லாம் ரைட்தான். நாம செய்றதெல்லாம் தப்புதான்."

"உன் தத்துவங்களை அப்பப் போஸ்ட் கார்டுல எழுதி ஐம்பது பேருக்கு போட்டு அந்த ஐம்பது பேர்களையும் அதே மாதிரி ஐம்பது பேர்களுக்கு எழுதிப் போடச் சொல்லு. அப்படி எழுதிப் போட்டா 'ஒரு லட்சம்' இல்லேன்னா 'சாவு'ன்னு மிரட்டு. நம்ப ஆளுங்க அதை நம்பி உன் தத்துவங்களை வேகமா உலகம் பூராவும் பரப்பிடுவாங்க. அது போகட்டும். உடனே நீ இங்கே வா. நாமு அவசரமா டிஸ்கஸ் பண்ணணும்."

"எதைப்பத்தி?"

"அஞ்சலியின் திடீர் மறைவைப் பத்தி."

"சும்மா அஞ்சலி - அஞ்சலின்னு சாகாதடா. அஞ்சலி போனா இன்னொரு கீதாஞ்சலி வந்து வீட்டு வாசலில் நிப்பா. பெண்ணுக்கா உலகத்தில் பஞ்சம். ஒரு ஆம்பிளைக்கு இரண்டரை பொம்பளை இருக்கிறதா லேட்டஸ்ட் புள்ளி விவரம் சொல்லுது."

"நீ இப்ப வரப்போறியா இல்லையா?"

"இன்னும் குளிக்கலே கொள்ளலே. ஏண்டா பிராணனை வாங்கறே."

"அதையெல்லாம் இங்கே வந்து செஞ்சுக்கோம்மா. அஞ்சலி மறைஞ்சதுல பெரிய பின்னணி இருக்கும்னு எனக்கு தோணுது."

"அதெல்லாம் ஒண்ணும் இருக்காது. நான் வர்றேன்."

தொலைபேசியை வைத்த சுந்தர் கடந்த மூன்று மாதங்களில் முதல் முறையாக அஞ்சலியின் சூட்கேசைத் திறந்து குடைய ஆரம்பித்தான்.

பாபி ஃபிஷர், ஸ்பாஸ்கி, கார்போவ், காஸ்பரோவ் போன்ற உலகப் புகழ் செஸ் ஆட்டக்காரர்களின் படங்களுடன் நிறைய செஸ் புத்தகங்கள் உள்ளேயிருந்தன.

நீல நிறத்தில் ஒரு டயரி.

டயரியை எடுத்துப் பிரித்து ஒரு பக்கத்தை வாசிக்க ஆரம்பித்தான்.

'இன்று மாலை கடற்கரையில் நடந்துகொண்டிருந்தேன். குருநாதன் ஒரு குதிரையுடன் நடந்து வந்தான். குதிரைக்கு குருநாதன் முகமும், அவனுக்கு குதிரை முகமும் இருந்தது. குரு குதிரையை என்னிடம் ஒப்படைத்து 'இது நம்முடைய இரண்டாவது கல்யாணத்துக்காக நான் உனக்கு தரும் கல்யாணப் பரிசு' என்றான். நான் குதிரைமீது ஏறி சவாரி செய்ய ஆரம்பித்தேன். குதிரை நாலு கால் பாய்ச்சலில் வேகமாக– மிக வேகமாக ஓடி.... ய்யோ! விமானத்தின் 'டேக் ஆஃப்' போல மேகம் நோக்கி எகிறிப் பறந்தபோது என் மனசெல்லாம் திரில். உடம்பெல்லாம் சிலிர்ப்பு. என் உடலின் ஒவ்வொரு செல்லும் மெல்ல அசைந்து நடனமாடத் தொடங்கியது. குதிரை சோழா ஓட்டலுக்கு மேலே பறந்து சோவியத் கலாச்சார மையத்துக்குள் ஹெலிகாப்டர் போல 'சொய்ங்' என்று இறங்கியது...'

சுந்தரின் தலை சுழன்றது.

–தொடரும்

# இசை மேதைகள்

## புதுக்கோட்டை தட்சிணாமூர்த்தி பிள்ளை



### சுப்புடு

கஞ்சிரா உள்ளளவும் அவர் பெயர் நிலைத்து இருக்கும். அந்த வாத்தியத்திற்கு அவர்தான் கடைசி வார்த்தை.

அவருக்கு மிருதங்கமும் தெரியும். ஆனால் அவருடைய லய கற்பனைகளுக்கு கஞ்சிராதான் ஈடு கொடுத்தது.

இது மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது வேடிக்கையாக இருக்கலாம். கொஞ்சம் விளக்கிச் சொல்லுகிறேன். மிருதங்கத்திற்கு இரண்டு பக்கங்கள் இருக்கின்றன. (ஆஹா! என்ன விஞ்ஞானக் கண்டுபிடிப்பு) இரண்டு கைகளும் உபயோகப்படுத்தப்படுகின்றன.

ஆனால் கஞ்சிராவில் இருக்கிற வசதி மிருதங்கத்திற்கு கிடையாது. ஏனெனில் மிருதங்கத்தின் தொப்பி, உடும்புத் தோலால் ஆன கஞ்சிராவுக்கு ஈடு கொடுக்கவே முடியாது. அதேபோல் ஃபரன்கள். கஞ்சிராவில் ஃபரன்கள் மின்னல் வேகத்தில் பேசும். ஏனெனில் உடும்புத் தோலில் Residuary Vibrations ரொம்ப எளிது.

பிள்ளைவாளை விட்டுவிட்டோமே! இவர் மிருதங்க மாமேதை மாண்பூடியாபிள்ளை அவர்களின் சீடர். அவர் அலங்கரிக்காத மேடையே கிடையாது. தாளப் பரிமாணங்களில் புகுந்து விளையாடக்கூடிய எந்த வித்வானின் கச்சேரியிலும் அவர் உண்டு.

அவர் உண்டு என்ன? அவர் இல்லாமல் நடக்காது. அபரிமிதமான வருமானம். அதை – அவ்வளவையும் தான தர்மம் செய்துவிடுவார். ஆறுபடை வீட்டுக்காரரின் அடிமை.

ஒவ்வொரு வருடமும் எந்த ராஜா எந்த பட்டினம் போனாலும் ஒரு ஆறுமுகன் சந்நிதியில் 45 நாட்கள் டேரா போட்டுவிடுவார். அவ்வளவு நாளும்மௌன விரதம், தியானம். அது முடியும் தருவாயில் இசைக் கச்சேரிகள், ஏழைகளுக்கு அன்ன தானம்..

"அந்த நாளும் வந்திடாதோ" என்று எனது மனம் ஏங்குகிறது. ஆலாய்ப்பறக்கிற இந்தக் காலத்திற்கும், இசையே இறைவன் என்று கருதிய அந்தக் காலத்திற்கும் என்ன வித்தியாசம் பாருங்கள்?

அவரது வாசிப்பின் தனிச் சிறப்பு என்னவென்றால் பாட்டுக்கு மெருகு ஏற்றுவார். குறுக்கே நுழைந்து குளறுபடி செய்யமாட்டார். பக்க வாத்யம் பாட்டுடன் இரண்டறக் கலந்துவிடும்.

அவருடைய அந்தி நாட்கள், அவருக்கு விரக்தியைத் தந்தன. அவருக்கு ஈடு கொடுத்துப் பாடி வந்த பெரிய மகான்கள் காலமாகி விட்டார்கள். "கூலிக்கு மாரடிக்க" அவர் மனம் இடம் தரவில்லை. அவருக்கு சன்மானம் பெரிதில்லை, தன்மானம்தான் பெரிது. அது அவர் கண்களில் வெறுமையைத் தோற்றுவித்துவிட்டது.

அது தவிர, இப்போது காலரா மாதிரி பரவியிருக்கும் ஜாதி, மத, மாகாணக் கட்சிகள் தலை தூக்க ஆரம்பித்துவிட்டன. இனி தனக்கு இடமில்லை என்று நிச்சயம் செய்துகொண்டு துறவறம் பூண்டு சின்மயானந்தா குருவாக மாறி விட்டார். பரிதாபம்.

# 2

## P-QB4

# சொல் சொல் ன் உயிரே!




### சென்ற இதழில்...

***அ***ஞ்சலி,மார்புக்கு மேலே டவல் கட்டிக்கொண்டு குளிக்கத் தயாராக நின்றாள். குளியலறைக்குச் சென்ற சுந்தரை சீக்கிரமாத வெளியே வரச் சொன்னாள். சுந்தர் அவசர அவசரமாக சவரத்தையும் குளியலையும் முடித்துவிட்டு வெளியே வந்தபோது அஞ்சலி இல்லை. வீடு திறந்திருந்தது. தன் நண்பன் குருநாதனுடைய இருப்பிடத்துக்கு அவள் சென்றிருக்கக்கூடும் என்று எண்ணும் சுந்தர் தொலைபேசியை எடுத்து குருவிடம் விசாரிக்கிறான். அஞ்சலி அங்கே செல்லவில்லையென்று தெரிகிறது. அந்த அடைமழை அதிகாலையில் அவள் எங்கே சென்றிருக்க முடியும்! ஒரு டவல் மட்டும் சுற்றிக்கொண்டு!!

**அ**ஞ்சலியின் டயரியை மேலும் புரட்டினான் சுந்தர்.

பக்கங்கள் புரளப் புரள அவன் தலை மேலும் குழம்பியது.

அநேகமாக எல்லா பக்கங்களிலும் கட்டவிழ்த்து விடப்பட்ட ஒரு குதிரை காட்டுத்தனமாக சவாரி செய்தது.

சவாரியை விசித்திரமாக விவரித்திருந்தாள், அஞ்சலி.

'இன்று சோழவரம் பந்தய மைதான வெளியில் சவாரி செய்தேன். என் புதிய புரவி புழுதி வாரிப் பரப்பிக்கொண்டு புகைப் படலத்துக்குள் பிடுங்கிக்கொண்டு ஓடியது. குரு மைதான விளிம்பில் நாற்காலியில் அமர்ந்து அடிவானத்தில் சாய்ந்து 'கெக்கே கெக்கே'யென்று சிரித்தான். 'நான் பரிசளித்திருக்கும் இந்தக் குதிரை சாதாரணக் குதிரையல்ல. ஐமாய்' என்றான். நான் காட்டாற்றில் அடித்துச் செல்லப்படும் துரும்பாகி...ய்ய்யா! எங்கேயோ இழுத்துச் செல்கிறதே! கூந்தல் ஷாம்பூ விளம்பரம்போல் பின்னால் அலையடிக்கிறது. முகத்தில் மேகங்கள் மோதி நைந்து, பஞ்சு பஞ்சாக அவசரத்துடன் அவிழ்ந்து வழிவிடுகின்றன. உடம்பு, அடிக்க அடிக்க மேலே எழும்பும் பந்துபோல குதிரையின் மீது குதி யாட்டம் போட....என் எடை இல்லாமல் போக....விழிகள் செருக... மலையேறியின் சுவாசம் போல் என் மூச்சு கனமாக, 'ஹ்ஹ...ஹ்ஹ...ஹ்ஹ' என்று இயந்திரகதியில் வெளியேற... எங்கேயோ எங்கேயோ பறக்கிறேன். சூன்யவெளிக்கு பிய்த்துக் கொண்டு எகிறுகிறதே! ராக்கெட் மூக்கு சவாரியா இது? ஆழங்களின் ஆழங்களை நோக்கி கீழே கீழே கீழே போய்க்கொண்டிருக்கிறதே! முடிவில்லாத பாரசூட் பயணமா இது! கண் கூசுகிறதே. ஏன் இவ்வளவு வெளிச்சம். சூரியனுக்குள் கலந்துவிட்டேனோ! ஏன் இவ்வளவு குளிர்ச்சி! ஏர் கண்டிஷன் செய்யப்பட்ட சூரியனோ? கோரஸ் அதிர்கிறது. பிரபஞ்சமே அதிர்கிறது. 'மோகன தர்ஷணம்... மோக பிரதாயகம்... மோக வினாஷகம்...ஜீவன சங்கமம்' என்று பீதோவன், மொசார்ட், பாக், இளையராஜா எல்லாரும் பாடுகிறார்கள் . கோடி கோடி மடங்கு உயரமாய். கோடி கோடி மடங்கு ஆழமாய் . இது என்ன அனுபவம்! அனுபவிக்க நபர் இருந்தால்தானே அனுபவம் என்பது உருவாகும். நான்தான் உருகிக் கலைந்து அழிந்து இல்லாமல் போய் விட்டேனே. இது அனுபவம் அல்ல. மகாமுத்ரா. உருகி உயிர் நிலைக்கு கலந்துவிடும் முழுமையான Orgasm பிரபஞ்சத்துடன் உயிர் நிலையை ஐக்கியமாக்கும் திருவிழா.' Total orgasm with the universe 'இதை விவரிக்க மொழிகள் இல்லை. இதை விவரிக்க கோட்பாடுகள், சித்தாந்தங்கள் எதுவுமே பயன்படாது...'

மேலும் வாசித்தால் குர்த்தாவைக் கிழித்துக்கொண்டு நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலையில் ஓடவேண்டிய நிலை ஏற்படலாம் என்பதை உணர்ந்த சுந்தர் டயரியை அஞ்சலியின் சூட்கேசுக்குள்ளே எறிந்தான். எழுந்து போய் படுக்கையில் சாய்ந்து தீவிர சிந்தனையில் மூழ்கினான்.

**சு**ந்தரின் வாழ்க்கையில் அஞ்சலி ஊடுருவல் செய்து ஏறத்தாழ நான்கு



"ஜோசியரே! இந்த மாசத்திலே ஒரு நல்ல நாளாப் பார்த்துச் சொல்லுங்க."

"எதுக்குங்க?"

"என்னோட பிறந்த நாளைக் கொண்டாடத்தான்."

– கோபிகா எஸ்.முரளி

மாதங்கள் ஆகின்றன.

குருநாதன்தான் அவளை சுந்தருக்கு அறிமுகம் செய்து வைத்தான்.

குருநாதன் சுந்தரோடு லயோலாவில் படித்தவன்.

இருவரும் ஒரே விடுதியறையைப் பகிர்ந்து கொண்டவர்கள், காசினோவில் ஞாயிறு ஞாயிறு ஆங்கிலப் படம் பார்த்துவிட்டு அமிஞ்சிக்கரை போய் காபரே அழகிக்கு நாடி பிடித்துப் பார்த்தவர்கள். சுந்தர் பீஸ் கட்டத் தவறிய சந்தப்பங்களில் குருநாதன் அவனுக்காக பீஸ் கட்டினான். சுந்தருக்கு காமாலை கண்டு முண்டா பனியனெல்லாம் மஞ்சளாகி உடல் நிலை கவலைக்கிடமாகி விட்டபோது குருநாதன் அவனை விட்டு கணப்பொழுதும் விலகாமல் கிரீம் போக மோர் வடிகட்டிக் கொடுத்து இளநீர் வாங்கி சீவிக்கொடுத்து தாயின் பாசத்தைப் பொழிந்து கவனித்துக் கொண்டான். சுந்தரைப் போல குருவும் அசைவம் விலக்கி தாளிக்காத எண்ணெய் இல்லாத பத்தியச் சாப்பாட்டையே மாசக் கணக்கில் சாப்பிட்டான். கல்லூரியின் பெர்ட்ரம் செஸ் கிளப்பில் சுந்தர் நாள் தவறாமல் குருநாதனைத் தோற்கடித்தான்.

ஆளுக்கொரு எம்.ஏ. பட்டத்துடன் கல்லூரியை விட்டு வெளியேறிய போது உத்தியோகம் சுந்தரை வடக்கே அழைத்தது. குருநாதனை விட்டு அவன் விலகிப் போய்விட்டான்.

ஐந்தாண்டுகள் காலண்டரிலிருந்து உதிர்ந்தன. நான்கு மாதங்களுக்கு முன் ஒரு நாள் மாலை சுந்தர் தாடி மண்டிய முகத்துடன் சென்னையின் சென்ட்ரலில் ரயிலைவிட்டு இறங்கினான். சி.இன்.சி. சாலையில் ஒரு ஓட்டலின் லிஃப்டில் ஒன்பதாவது மாடிக்குச் சென்றான்.

ஓட்டல் விஷயத்தில் சென்னை வயசுக்கு வந்துவிட்ட மாதிரி சுந்தருக்கு தோன்றியது.

பெல்பாய் சுந்தரின் சூட்கேசையும் பயணப்பைகளையும் அறைக்குள்ளே வைத்துவிட்டு வெளியேறியதும் சுந்தர்



## தங்க மோதிரம்

*சென்ற இதழில் இந்தத் தொடரின் முதல் அத்தியாயத்தில், இருந்த விறுவிறுப்பு காரணமாக தொடர்ந்து படிக்க வேண்டுமென்று சுறுசுறுப்பு அடைந்திருப்பீர்கள். அத்துடன் எங்கேயோ பலமுறை படித்துப் பழகிய பிரபல எழுத்தாளர் ஒருவரின் எழுத்து நடை போல் இருக்கிறதே என்ற நெருடல் உங்கள் நெஞ்சில் முளைவிடத் தொடங்கிவிட்டதல்லவா? தொடர்ந்து படியுங்கள்... பரிசு பெறுவதற்கான முயற்சிகளில் முனைந்து செயல்படுங்கள்... மேலும் விபரங்கள் அடுத்த இதழில்.*

கர்ட்டனை விலக்கினான். மாலை வெய்யிலில் சென்னையின் மேனியைப் பார்த்தான். கட்டிடங்களில் வளர்ச்சி தெரிந்தது. வானத்தில் அதிக அழுக்கு. இந்த நகரத்தில் இன்னும் எத்தனை மாதங்கள் தங்க வேண்டும் என்று அவன் ஒரு கணம் எண்ணியபோது—

பஸ்ஸர் ஒலித்தது.

கதவைத் திறந்தான்.

வெளியே—

டிஸ்கோ வெட்டுடன் மீசை மழித்து ஒழுக்கமாக நின்ற குருநாதன், "புருஷன் இல்லே?" என்று கேட்டான்.

"இங்கே புருஷனுமில்லே பெண்டாட்டியுமில்லே...ஏண்டா! கண்ணில கொழுப்பேறிடுச்சா? என்னை அடையாளந் தெரியல உனக்கு?" என்று கேட்டான் சுந்தர்.

உடனே குருநாதன் ஊடுருவும் பார்வையால் சுந்தரின் முகத்தை ஆராய்ந்துவிட்டு, சந்தேகத்தோடு, "சுந்தரா?!" என்றான்.

சுந்தர் சிரித்தான்.

"சுந்தர்!" என்று பாய்ந்த குருநாதன் சுந்தரைக் கட்டித் தூக்கி ஒரு சுழற்று சுழற்றி கீழே போட்டான். "எங்கே மச்சான் காணாம போயிட்டே! உயிரோடதான் இருக்கியா? ஒரு போஸ்ட்

கார்டு...கேவலம் ஐம்பது பைசா நான் பெற மாட்டனா?" என்றான்.

"உதைப்பேன். உன் அட்ரஸ் எனக்கு எப்படித் தெரியும்?" என்றான் சுந்தர்.

"எம்பேரு டெலிபோன் டைரக்டரியில இருக்கு. முயற்சி பண்ணியிருந்தேன்னா கிடைச்சிருக்கும். சரி அது போகட்டும். எங்கே இருக்கே. என்ன பண்றே?"

"டெல்லி டெலிவிஷன்லே இருக்கேண்டா. நீ?"

"மெட்ராஸ் மெய்ல்னு வாரப்பத்திரிகை பார்த்திருக்கியா மச்சான்?"

"பார்த்திருக்கேன். காசு கொடுத்து வாங்கினதில்லே."

"நான் தான் மச்சான் நடத்தறேன்."

"எப்படி நல்லா ஓடுதா?"

"ஓடலே. நொண்டியடிக்குது."

"அப்புறம் ஏன் நடத்திக்கிட்டிருக்கே?"

"கௌரவப் பிரச்னைதான்."

"ஆபீஸ் எங்கே?"

"எடிடோரியல் வீட்லேயே வெச்சிருக்கேன்."

"வீடு?"

"நுங்கம்பாக்கத்துல எல்லோஸ் டோன் அபார்ட்மென்ட்ஸ். நம்ம பத்திரிகையின் திருவனந்தபுரம் நிருபர் புருஷோத்தமன் இந்த ரூமில் தங்கியிருந்தார். இன்னும் ரெண்டு நாள் இருக்கப் போறேன்னு நேத்து சொன்னார். அவரைத் தேடித்தான் வந்தேன். காலி பண்ணிட்டுப் போயிட்டார் போல இருக்கு. எவ்வளவு நாள் மெட்ராசில் இருப்பே?"

"வேலை முடியறவரைக்கும்."

"என்ன வேலை?"

"ஒரு ஐம்பத்திரண்டு வார டி.வி. சீரியலுக்காக ஸ்க்ரிப்ட் தயாரிக்க வந்திருக்கேன்."

"நல்ல நேரத்துல வந்திருக்கே மச்சான். எனக்கு ஒரு ஹெல்ப் பண்ணுவியா?"

"சொல்லு"

"ஒரு பெண்ணை..."

"கொலையா ரேப்பா என்ன பண்ணணும்?"

"அதெல்லாம் வேண்டாம். அவளைப் பழிவாங்கணும்."

"யார் அந்தப் பெண்? எதுக்காக அவளைப் பழிவாங்கணும்? எப்படி பழிவாங்கணும்?"

"சித்தார்த்த பாசு கெட்டான். உன் எல்லா கேள்விகளுக்கும் தவணை முறையில் உனக்கு பதில் கிடைச்சுக்கிட்டேயிருக்கும். இன்னிக்கே இன்னும் ஒரு மணி நேரத்தில நீ ஆக்ஷன்லே குதிக்கப்போறே. வெற்றிகரமா அஞ்சலிய பழிவாங்கப் போறே."

"அவ பேரு அஞ்சலியா?"

"ஆமா. அவளைப் பழிவாங்க தகுதியான ஒரே நபர் நீதான். சீக்கிரமா குளிச்சுப் புறப்படு."

**சோ**வியத் கலாசார மையம். மாலை ஆறு மணி.

மிகயீல் டால் செஸ் கிளப்பிலும் பக்கத்திலிருந்த எக்ஸிபிஷன் ஹாலிலும் ஆணும் பெண்ணுமாக ஏகக் கும்பல்.

இந்திய சோவியத் நட்புறவு ஒப்பந்தத்தைக் குறிக்கும் வகையில் ஆண்டுதோறும் நடைபெறும் மதன் வெள்ளிச்சுழல் கோப்பை சதுரங்கப் போட்டியின் முதல் சுற்றில் கலந்து கொள்ள எல்லா மாநிலங்களிலிருந்தும் வந்திருந்த ஆட்டக்காரர்கள் ஃபிஷர் ரேட்டிங்கை காஸ்பரோவ் தாண்டியது பற்றியும், செஸ் ஒலிம்பியாட் பற்றியும் கலையம்புத்தூர் வெற்றி தோல்விகள் பற்றியும் கலகலப்பாக பேசிக்கொண்டிருந்தனர்.

போர்ட்டிகோவில் வந்து நின்ற பச்சை ஃபியட்டிலிருந்து குருவும் சுந்தரும் இறங்கினர்.

சுந்தரை குரு அந்த சதுரங்கப் போட்டியை நடத்தும் டோர்னமென்ட் டைரக்டரிடம் அழைத்துச் சென்றான்.

"எனக்கு செஸ்ட் பெய்ன் அடிக்கடி வருது சார். அதனால் இந்த வருஷம் நான் கலந்துக்கலே சார். என் பேரை அடிச்சுட்டு சுந்தர்னு எழுதிக்

"வர வர எனக்கு ஞாபக மறதியாவே இருக்கு டாக்டர்..."
"பார்த்தாலே தெரியுது... பத்து வீடு தள்ளிப் போங்க டாக்டர் வீட்டுக்கு...!"
– தேனி எஸ். மாரியப்பன்



கோங்க."

"யார் சுந்தர்!"

"இவன்தான். என் ஃப்ரெண்ட். டெல்லி டி.வி.யில இருக்கான்."

"மாட்ச் ஆடியிருக்காரா?"

"நாலஞ்சு வருஷத்துக்கு முன்னால டிஸ்ட்ரிக்ட்டுக்கு ஆடியிருக்கேன்" என்றான் சுந்தர்.

சுந்தரின் பெயர் குருநாதனுக்குப் பதிலாக ஆட்டக்காரர் பட்டியலில் இடம் பெற்றது.

அவனை எக்ஸிபிஷன் ஹாலுக்குள் அழைத்துச் சென்றான் குரு.

தூரத்து மூலையில் பகலைப் பொழிந்த கூரை விளக்கிற்குக் கீழே வைர மூக்குத்தி சுடர்விட நின்றவளைக் காண்பித்த குரு, "அவதாண்டா அஞ்சலி" என்றான். சுந்தர் அவனையறியாமல் மூச்சைப் பிடித்துக்கொண்டு, நெஞ்சு படபடக்க அவளைப் பார்த்தான்.

அஞ்சலி இளசாக, சேப்பாக, இப்ப பறித்த மிளகாப்பழம் போலத் தோன்றினாள். மெலிவான உடல்வாகு. மார்புகள் மட்டும் சீமைப் பசுபோல அலாதி வளர்த்தியாய் இருந்தன. சூழ்ந்து நின்ற இளைஞர்களுடன் பல்வரிசை பளிச்சிட அட்டகாசமாகச் சிரித்து, அரட்டையடித்துக்கொண்டிருந்தாள் திராட்சையின் பர்ப்பிள் நிறத்தில் பருத்திப் புடவை, பிளவுஸ். "மூணு வருஷமா இந்தப் போட்டியில அவதான் ஜெயிச்சுக்கிட்டிருக்கா. அவகிட்ட இருக்கிற சுழல் கோப்பையை எப்படியாவது நீ பறிச்சிடணும். அவ தலைக்கனம் அப்பத்தான் இறங்கும்."

"முடிஞ்சவரைக்கும் ட்ரை பண்றேன்."

"ட்ரை பண்ணாதே, முறியடிச்சுக்காட்டு."

"அவகிட்டே என்னை அழைச்சுக்கிட்டுப் போய் இன்ட்ரட்யூஸ் பண்ணிவை."

"நீ முதல்ல கோப்பையை பிடுங்கு. அப்புறம் அவளை உன்கிட்ட அழைச்சுக்கிட்டு வந்து நான் அறிமுகம் பண்ணி வைக்கிறேன்."

அஞ்சலி சிவப்பு எலி போல இருந்தபோதிலும் அவளிடம் அசாத்திய கவர்ச்சி இருந்ததை சுந்தரின் மனம் பதிவு செய்யத் தவறவில்லை.

"அவ வர்றாடா. நான் அந்தாண்டை போயிடறேன் நீ என்னோட ஆளுங்கறதை இப்ப அவ தெரிஞ்சிக்க வேண்டாம்" என்று விலகினான் குரு.

"இந்த வருஷமும் அஞ்சலி தாண்டா. பாவநாசம் வேற வரலே" என்று எவனோ எவளிடமோ சொன்னான்.

கர்வத்துடன் இங்குமங்கும் நடை போட்ட அஞ்சலியை வீழ்த்தியே தீர வேண்டுமென்ற வெறி சுந்தரின் மனதில் முளைவிட்டபோதிலும் ஐந்தாண்டு காலமாக செஸ் போர்டையே பார்க்காமல் திடீரென்று களத்தில் குதித்து ஜெயிக்க நினைப்பது பேராசை நிறைந்த மடத்தனமாக அவனுக்குத் தோன்றியது.

அன்று நடந்த முதல் சுற்றிலும் அப்புறம் வரிசையாக நாள்தோறும் நடந்த எல்லா சுற்றுக்களிலும் அஞ்சலியும் சுந்தரும் வெவ்வேறு மேசைகளில் அமர்ந்து வெவ்வேறு நபர்களைத் தோற்கடித்தனர்.

எல்லா நாட்களிலும் குரு வந்

திருந்தான். அஞ்சலியிடம் போய் நிறைய பேசினான். ஆனால் சுந்தரை அவளிடம் அறிமுகம் செய்து வைக்க வில்லை.

ஒன்பதாவது நாளன்று யாருக்கு வெள்ளிக்கோப்பை என்பதை நிர்ண யிக்கும் இறுதிச் சுற்றில் அவர்க ளிருவரும் டாப் போர்டில் எதி ரெதிரே அமர்ந்தனர்.

'யார் இந்த அந்நியன்' என்கிற தோரணையில் எதிரே அமர்ந்த சுந் தரே ஏறிட்டு சிரிப்பில்லாத முகத் துடன் பார்த்தாள் அஞ்சலி.

சுந்தர் வெள்ளை ஆடினான்.

அஞ்சலி கருப்பு ஆடினாள்.

குரு கும்பலோடு நின்று வேடிக்கை பார்த்தான்.

சுந்தர் சிஸிலியன் டிஃபென்சில் ஆரம்பித்து பால்சென் வேரியேஷனில் புகுந்து அட்டாக்கிங் ஸ்டைலில் தாண்டவம் நிகழ்த்தினான்.

அஞ்சலி நுணுக்கமாக டிஃபென்ஸ் ஆடி சாமர்த்தியமாக ஈடு கொடுத்தாள்.

ஒன்றரை மணி நேர ஆட்டத்தில் சுந்தர் வேட்டி சட்டையெல்லாம் இழந்து அவன் பக்கம் மிஞ்சியது, ராணியைத் தவிர ஒரே ஒரு குதிரை.

அஞ்சலி எல்லாவற்றையம் வெட் டிச் சாய்த்து விட்டாள். அவள் பக்கம் அமோகமாக ராணி, 3 பான்கள், 1 பிஷப், ஒரு ரூக்.

ஆட்டம் முடிவடையும் வினாடி வேகமாகநெருங்கி வந்தது.

நரம்புகள் முறுக்கேறிப் போன நிலையில் குரு பரபரப்புடன் போர் டையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அஞ்சலிக்குத்தான் வெள்ளிக் கோப்பை என்பது உறுதியாகிவிட்ட நிலையில் அஞ்சலி பான் ஒன்றை ஒரு கட்டம் மேலே தள்ளிவிட்டு எழுந்து அலட்சியமாக எக்ஸிபிஷன் ஹாலுக் குள் உலவத் தொடங்கினாள்.

சுந்தர் குனிந்த தலை நிமிராமல் படு தீவிரமாக மூளையைக் கசக்கிக் கொண்டு சிந்தித்தான். குதிரையை தூக்கிப்போட்டு மூலையில் நின்ற அஞ்சலியின் ராஜாவுக்கு 'செக்' சொன்னான். அஞ்சலி தன் ராஜாவை பக்கவாட்டில் வெள்ளைக் கட்டத் துக்கு நகர்த்தி ஆபத்திலிருந்து தப் பித்தாள்.

சுந்தர் இனி ஜெயிக்க வாய்ப் பில்லையென்பது எல்லாருக்கும் தெளிவாகிவிட்டது. 'ரிசைன் பண் ணிட்டு எழுந்திரிச்சிப் போறதை விட்டுட்டு வெட்டியா கிடந்து போறா டிக்கிட்டு கிடக்கானே' என்று அனு தாபப்பார்வையால் சுந்தரைப் பார்த் தனர்.



# ஆச்சி...

மனோரமா தொலைக்காட்சித் தொடர் ஒன்றை இயக்கப் போவதின் மூலம் 'டைரக்டராக' அறிமுகமாக இருக்கிறார். முதலில் 'அன்புள்ள ஆச்சி' என்று தொடருக்குப் பெயர் வைத்திருந்தார். ஆச்சி என்று குறிப் பிட்ட இனத்தார் மட்டுமே அழைக்கப்படுவதால் 'அன்புள்ள அம்மா' என்று இப்போழுது பெயர் மாற்றியிருக்கிறார்.

—பவளக்கொடி

## துணிச்சலுக்கு ஒரு சித்ரா சுப்ரமணியம்

'போபர்ஸ்' பற்றி பேசுமளவிற்கு தெரிந்து வைத்திருந்தாலும் சித்ராவைப்பற்றி வெளியில் தெரிந்த விபரங்கள் மிகக்குறைவே. இவரது தந்தையும், பிரபல இந்தி நடிகை மீனாட்சி சேஷாத்திரியின் தந்தையும் தனியார்துறை நிறுவனமொன்றில் சேர்ந்து பணியாற்றியவர்களாம். மீனாட்சியும் சித்ராவும் சிறு வயதுமுதல் ஒன்றாக உயிருக் குயிராகப் பழகியவர்கள். மீனாட்சி திரைப்பட உலகில் நுழைந்த உடனே, 'விரைவிலேயே நீ மிகப் பெரிய நடிகையாவாய்' என்று சித்ரா சொன்ன வாக்கு இன்று மீனாட்சியைப் பொறுத்தவரை பலித்துவிட்டது. இன்று நாடு முழுவதும் பரபரப்பை ஏற்படுத்தியுள்ள 'ஸ்டார்' ரிப்போர்ட்டரும் மீனாட்சியும் நெருங்கிப்பழகிய தோழிகள்.

'என்னுடைய கணவருக்குத் தெரியாமலோ' அவருடைய உதவியில்லாமலோ நான் இந்த விவகாரத்தில் இறங்கவில்லை. 'இந்து' ராம், என்னுடைய கணவர் இருவரும் எனக்கு ஆதரவாக இருக்கிறார்கள். இதனால் இனி இந்தியாவிற்கு திரும்பமாட்டேன் என்று அர்த்தமல்ல. இன்றைய தினம்வரை என்னுடைய இதயத்திலிருந்து இந்தியாவை விட்டு பிரிந்திருக்கவில்லை. ஆனால் நாளை என்ன நடக்குமென்பதை யாரால் தீர்மானிக்க முடியும்? என்று, 'இந்தியன்' போஸ்ட் இவருக்கு போன் செய்து விசாரித்த போது சொன்னாராம்!

–அ.குமார்.

சுந்தர் தன்னம்பிக்கையை இழக்க வில்லை. குதிரையை வேறு பக்கம் தூக்கிப்போட்டு மறுபடியும் செக் சொல்ல, அவனுடைய ராணியின் நேரடிப்பார்வையும், அஞ்சலியின் ராஜாவைத் தாக்க அஞ்சலி டபிள் செக்கில் சிக்கிக் கொண்டு திண றினாள். ராஜாவை பழைய மூலைக்கே நகர்த்தினாள்.

சுந்தரின் ராணி தாமதிக்காமல் 'சர்'ரென்று பாய்ந்து அஞ்சலியின் ராஜா செய்த கட்டத்தைக் கைப் பற்றியது.

'இவ்வளவு முட்டாள் தனமாக ராணியைக் கொண்டு வந்து வெட் டுக்கு கொடுக்கிறானே' என்ற எண் ணம் எல்லாருடைய மனதிலும்.

அனைவரும் எதிர்பார்த்த பிர காரம் அஞ்சலி இன்னொரு மூலை யில் நின்ற தன் ரூக்கினால் சுந்தரின் ராணியை வெறியுடன் வெட்டி வெளியே தூக்கி வைத்தாள்.

அப்புறம்தான் அவள் செய்தது இமாலயத் தவறு என்பது அஞ்சலிக் கும் சூழ்ந்து நின்றவர்களுக்கும் உறைத்தது. அஞ்சலி தன்னையறி யாமல் தன் ராஜாவுக்கு தன் காய் களாலேயே சமாதி கட்டியிருந்தாள். எல்லாருடைய முகத்திலும் பரபரப்பு.

சுந்தர் மீண்டும் குதிரையைத் தூக்கிப் போட்டு 'செக்' சொல்ல அஞ்சலியின் ராஜா நகர இடமில் லாமல் 'செக் மேட்' ஆகி.....

அஞ்சலி தோல்வியை ஒத்துக் கொண்டு கையெழுத்திட்டபோது அவள் விழிகள் கலங்கி ஸ்கோர் ஷீட்டில் 'பொட்'டென்று கண்ணீர் முத்து சிதறியது.

–தொடரும்

"அந்த நடிப்பை கலைச்சிடலாம். நீங்க இவ்வளவு உறுதியா இருக்கறப்போ உங்களை மீறி எதுவும் நடந்துடாதுங்க. தைரியமா இருங்க. அசோக்கிட்டே பேசிட்டு நல்ல முடிவோட போன் செய்றேன்."

நிம்மதியுடன் ரிசீவரை வைத்தாள் உஷா.

"எங்கே போறோம் ஜனா?" என்றான் ஓடிக் கொண்டிருந்த மோட்டார்பைக்கின் பின்சீட்டில் அமர்ந்திருந்த அசோக்.

"சொல்றேன்" என்று நிதானமாகச் செலுத்தினான் ஜனார்த்தனன்.

மாலை வெளிச்சத்தில் கொஞ்சமாக இருட்டு கலப்படமாகியிருந்தது. சாலையில் வாகனங்களின் எண்ணிக்கை அதிகமாயிருந்தது. பஸ் ஸ்டாப்புகளில் களைத்த முகத்துடன் கும்பல் கும்பலாகக் காத்திருந்தார்கள். சுவர்களில் தேர்தல் சினிமாவைப் புறந்தள்ளி ஆக்கிரமித்திருந்தது. "நீங்கள் ஓட்டுப் போடவேண்டிய சின்னம்..." என்று அலறிக்கொண்டு ஆட்டோ ஒன்று கடந்தது.

காந்தி மண்டபம் வாசலில் பைக்கை நிறுத்தினான் ஜனா.

"எதுக்கு ஜனா இங்கே அழைச்சிட்டு வந்தே?"

"உண்மை பேசறதோட மகத்துவம் தெரிஞ்ச மகாத்மா முன்னிலைல பேசினாலாவது நீ உண்மை பேசறியான்னு பார்க்கத்தான். வா."

உள்ளே சிமெண்ட் படிகளில் ஒன்றில் இருவரும் அமர்ந்த பிறகு..

"அசோக், இன்னைக்கு உஷா எனக்கு போன் செஞ்சி பேசினா, அவளுக்கு கல்யாணம் நிச்சயமாகியிருக்கு. முசிறி மாப்பிள்ளை. வர்ற இருபத்தேழாம் தேதி கல்யாணம்."

அசோக் வெகுவாக அதிர்ந்து போனது அவன் முகத்தில் அப்பட்டமாகத் தெரிந்தது. முனகல் போல மெதுவாகக் கேட்டான், "நிஜமாத்தான் சொல்றியா?"

—தொடரும்.

Kt - KB3

# சொல்! சொல்!



நினைவிருக்கிறதல்லவா?
இந்தத் தொடர்கதை வாசிப்பவர்களுக்குத் தங்கமோதிரம் பரிசு காத்திருக்கிறது!
– விவரம் அடுத்த இதழில்

**அ**ஞ்சலி சுந்தரிடம் பரிதாபமாகத் தோற்றுப் போனாள், அந்தச் சதுரங்கப் போட்டியில் மட்டும்.

அதை யாரும் எதிர்பார்க்கவில்லை – சுந்தர் உட்பட.

தோல்வி கண்டு அஞ்சலி கண் கலங்குவாள் என்பதையும் யாரும் எதிர்பார்க்கவில்லை. குருநாதன் உட்பட.



சுந்தருக்கு சந்தோஷம் தலைகால் தெரியாத அளவுக்கு அல்ல. ஓரளவுக்கு.

அஞ்சலியின் கண்ணில் நீர் வழிந்ததும் சுந்தரின் நெஞ்சம் உதிரம் சொட்டவில்லை. நெகிழ்ந்தது. ஓரளவுக்கு.

வெள்ளிக் கோப்பையுடன் அவனால் ஆடிட்டோரியம் விட்டு வெளியேற முடியவில்லை. பெருங்கூட்டம் அவனைச் சுற்றிச் சூழ்ந்து வளைத்துக்கொண்டது.

தேர்ந்த ஆட்டக்காரர்கள் இறுதி நிமிட அபார ஆட்டத்திற்காக சுந்தரை வானம் வரை தூக்கினர். திடீர் விசிறிகளும் பத்திரிகைகளும் கேள்விகள் எறிய, சென்னைத் தொலைக்காட்சி விளக்கு பிடித்தது. குருவுக்கு ஏக மகிழ்ச்சி. முகத்தை சோகமாகச் சுருக்கிக்கொண்டு அஞ்சலிக்கு ஆறுதல் வார்த்தைகள் வழங்கினான். கும்பலில் நீந்தி சுந்தரை அடைந்தான். கட்டிப் பிடித்தான். 'ம்ச்' என்று தன் வாயால் அவன் கன்னத்தில் முத்திரை குத்தினான். "கங்க்ராட்ஸ்டா மச்சான். எண்ட் கேம் தூள் மச்சான். கடைசி ரெண்டு நிமிஷத்தில் அசத்திட்டே அசத்தி" என்றான். கும்பலைப் பிளந்து இரண்டாக வகிர்ந்து சுந்தர் வெற்றி நடை போட வழியமைத்துக் கொடுத்தான்.

கார் பார்க் நோக்கி குருவும், சுந்தரும் நடந்தனர்.

சுந்தர் கேட்டான்.

"ஜெயிச்சதும் அஞ்சலிய உன் கிட்டே அழைச்சுக்கிட்டு வந்து அறிமுகம் செஞ்சு வைப்பேன்னு சொன்னியே?"

"மாட்டேன்."

"ஏன்?"

"திரும்பிப் பார்."

சுந்தர் திரும்பிப் பார்த்தான்.

தூரத்தில் அஞ்சலி சில சுடிதார்களைப் பார்த்து கையசைத்தவாறு கார் பார்க் நோக்கி வந்துகொண்டிருந்தாள்.

"தேங்க்ஸ்டா மச்சான்."
"எதுக்கு?"
"அஞ்சலிய அழவெச்சதுக்கு."
"அதில் உனக்கு என்ன லாபம்?"
"லாபம் எதுவும் கிடையாது."
"அப்புறம்?"
"அவள் அழுது நான் பார்த்ததில்லே. பார்க்கணும்கறது ரொம்ப நாள் ஆசை."
"பார்த்திட்டயா?"
"ம்! அழறச்சே அவ அழகா இருக்கா மச்சான். தூறல் விட்டப்பறம் நீர் சொட்டுக்களை உதிர்க்கிற காலை ரோஜாப்பூ மாதிரி" என்றான் கவித்துவமாக.
அஞ்சலி அவர்களை நெருங்கினாள். சுந்தரைப் பார்த்துக் கேட்டாள்– "உங்களை நான் இதுக்கு முன்னால் இந்த டால் கிளப்பில் பார்த்ததேயில்லையே!"
குரு முந்திக்கொண்டு, "அஞ்சலி! இவன் சுந்தர். என் பழைய நண்பன்" என்றான்.
"இப்ப எதிரியா?" என்று அஞ்சலி சிரிப்பில்லாத முகத்துடன் கேட்டாள்.
"நாலஞ்சு வருஷம் நாங்க சந்திச்சுக்காததினால் அப்படிச் சொன்னேன். லயோலாவில் சுந்தர் எனக்கு காலேஜ் மேட். ஹாஸ்டல் மேட். ரூம் மேட். இவனும் பெர்ட்ரம் தயாரிப்புதான்."
"விஸ்வநாதன் ஆனந்த் மாதிரியா?" என்றாள் அஞ்சலி. கிண்டல் தொனித்தது.
"ஆனா என்னால் கிராண்ட் மாஸ்டர் ஆக முடியாது. ஐ.எம். கூட ஆக முடியாது."
"நீங்க ட்ரை பண்ணினா ஆகலாம்னு எனக்கு தோணுது. கடைசி நிமிஷத்தில் நீங்க பண்ணின 'குய்ன் ஸாக்ரிஃபைஸ்' என்னை ஏமாத்திடுச்சு" என்றாள் அஞ்சலி.
'இந்த குய்னை ஸாக்ரிஃபைஸ் பண்ணவே முடியாது' என்றது சுந்தரின் மனம்.
"என்னைப்பத்திச் சொன்னது போதும்டா. அவங்களைப்பத்திச் சொல்லு" என்றான் சுந்தர்.



"இவ, மிஸஸ் அஞ்சலி குருநாதன், கடந்த ஜனவரி 18 வரை."
சுந்தர் ஆர்ப்பரித்தெழுந்த அலைகளை சிரமத்துடன் அமுக்கிக்கொண்டு, தொனியில் இயல்பைக் காட்டி, "புரியல. ஜனவரி 18 என்ன கணக்கு?" என்று கேட்டான்.
"சென்னை மாநகர உரிமையியல் நீதிமன்றம் எங்களுக்கு விவாகரத்து வழங்கிய நாள். இப்ப அஞ்சலி என் பத்திரிகையில் மட்டும் வேலை பார்க்கிறா. நல்ல ஜர்னலிஸ்ட். நல்ல செஸ் ப்ளேயர்."
"நல்ல செஸ் ப்ளேயர்ங்கறதைத் தான் பொய்யாக்கிட்டாரே உங்க நண்பர்."
ஃபியட் நகர்ந்தது.
கதீட்ரல் சாலைக்கு குரு செலுத்தினான். அவனருகே சுந்தர், வெள்ளிக் கோப்பையை மடியில் வைத்து அணைத்துக்கொண்டு. அவன் மனதில் வருத்தம். குழப்பம். 'அழகும் மூளையும் நிறைந்த இந்த அஞ்சலியை எதற்காக இந்த மடையன் டிவோர்ஸ் பண்ணியிருக்கிறான்! யாருக்கு யாரோடு வாழ விருப்பமில்லை?'

கார் வலமாகத் திரும்பியது. பின் சீட்டில் சாய்ந்திருந்த அஞ்சலி கேட்டாள். "எங்கே போகிறாய்?"
"உனக்கும் சுந்தருக்கும் பார்ட்டி தரப் போகிறேன்."
"ஐ டோண்ட் ஃபீல் லைக் டேக்கிங் எனிதிங்."

ஏ.வி.எம். சரவணன் வீட்டு முன் அறையில் ஒரு பெரிய சேவல் பொம்மை இருக்கிறது. "சோம்பல் இல்லாமல் இருக்க, குறிப்பிட்ட நேரத்தில் பணிகளைச் செய்ய அந்தச் சேவல்தான் தனக்கு ஊக்கம் தரு கிறது" என்கிறார் அவர்.

"வருத்தப்படாதே அஞ்சலி. வெள்ளிக்கோப்பை உனக்குத்தான் அடுத்த வருஷம். என்ன மச்சான் நான் சொல்றது சரியா?"

"இந்தத் தடவைகூட எனக்கு குருட்டு யோகம்தான். அஞ்சலி பிர மாதமா ஆடினாங்க. என்னை இந்த அளவுக்கு யாரும் மிரட்டினதில்லே, செஸ்ஸில்."

சிக்னலைக் கடந்த கார் இடப்புற மிருந்த ஓட்டல் வளாகத்தினுள் பிர வேசித்தது.

மறுநாள் காலை.

சுந்தர் ஓட்டல் படுக்கையில் புரண்டுகொண்டிருந்தான். தொலை பேசி கிணுகிணுத்தது. சத்தியது குரு.

"மச்சான்! நீ நிஜமாலுமே யோகக் காரன் மச்சான்."

"என்னடா காலங்கார்த்தாலே கரடி விடறே?"

"உனக்கு இன்னிக்கு நைட் விருந்து."

"எங்கே?"

"நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை யில் விம்பிள்டன் கோர்ட் பத்தாவது மாடியில்."

"யார் இருக்கிறது அங்கே?"

"அஞ்சலி. சதுரங்கத்தில் மட்டும் அவளை நீ வீழ்த்தலே மச்சான். சக லத்திலயும் அவளை நீ வீழ்த்திட்டே போலத் தெரியுது. நீ ஜெயிச்சதுக் காக இன்னிக்கு உனக்கு அவ விருந்து கொடுக்கப் போறாளாம். சரியா ஏழு மணிக்கு ஆஜராயிரு."

"எனக்கு நேரமில்லடா."

"இந்த பிகுதானே வேணாங்கறது. உன்னை எனக்குத் தெரியாதா? நீ கட்டாயம் வந்து நிப்பே. ரெண்டு தடவை குளிச்சு மூணு தடவை ஷேவ் பண்ணி நாலு தடவை தலை வாரி பெண் பார்க்க வர்ற மாதிரி வந்து நிப்பே."

"நீ சொல்றபடியே வந்து நிக்க றேன். அதுக்கு முன்னாடி சில விஷ யங்களை நான் தெரிஞ்சுக்கணும்."

"என்ன தெரிஞ்சுக்கணும்?"

"டிவோர்சுக்கு காரணம்?"

"ப்பூ! இதையா கேக்கறே?"

"ஆமா."

"அவளுக்கு நான் கைதியா இருக்க விரும்பலே. அவ எனக்கு கைதியா இருக்க விரும்பலே. வண்டலூர் கூண்டுக்குள்ளே அடைபட்டுக் கிடக்கிற குரங்குகள் மாதிரி வாழ் நாள் பூராவும் ஒர்த்தரையொர்த்தர் பார்த்துக்கிட்டிருக்க நாங்க விரும் பலே."

"ரெண்டு பேரும் ஒர்த்தரை யொர்த்தர் விரும்பலே. அப்படிச் சொல்லிட்டுப் போ."

"அப்படிச் சொன்னா அது தப்பு. அதிகமா விரும்பறோம். அதனால் தான் அவ சுதந்திரத்துக்கு நானும், என் சுதந்திரத்துக்கு அவளும் இடைஞ்சலா இருக்க விரும்பலே. ஜனவரி பதினெட்டாம் தேதி எங் களுக்கு கிடைச்ச சுதந்திரம் எங்க ளுக்கிடையே அதிக ஈடுபாட்டை ஏற்படுத்தியிருக்கு மச்சான்."

"குழப்பறே."

"நான் தெளிவாத்தான் இருக் கேன். அஞ்சலியும் தெளிவாத்தான் இருக்கா. பன்னிரண்டாம் நூற் றாண்டு ஆசாமிங்களால் எங்களைப் புரிஞ்சுக்க முடியாது. சாயந்தரம் எல்லோஸ்டோன் வந்துரு. அங்கே யிருந்து விம்பிள்டன் கோர்ட் பக்கம் தான்."

"தண்ணி பார்ட்டியா?"

"தண்ணி, சிகரெட் வாசனையே அஞ்சலி பக்கத்துல வரக்கூடாது

அவளைப் புரிஞ்சுக்கறதுக்கு உனக்கு ஆயுசு பத்தாது. நீ ரெண்டு மூணு ஜென்மம் எடுக்கணும்."

சுந்தரும், குருவும் விம்பிள்டன் கோர்ட் சென்றபோது அஞ்சலியின் இருப்பிடத்தில் ஏற்கனவே மூன்று இளைஞர்கள் ஆஜராகி அரட்டையில் இருந்தனர்.

சுந்தரையும், குருவையும் பார்த்ததும் மூவரும் எழுந்து நின்றனர்.

குரு சுந்தருக்கு அவர்களை அறிமுகம் செய்து வைத்தான்.

"மிஸ்டர் பாண்டியன், சப் எடிட்டர். மகேஷ், போட்டோகிராபர். ராஜேந்திரன் சர்க்குலேஷன். இவன் சுந்தர். என் தோஸ்த். செஸ் டோர்னமெண்ட்டில் நேற்று சில்வர் கப் பரிசு பெற்றவன். உத்தியோகம் டெல்லி டி.வி.யில்."

வரவேற்ற அஞ்சலி வியர்வையில் குளித்திருந்தாள். கலைந்த கூந்தல். அழுக்குப் படிந்த ஹவுஸ் கோட். துணைக்கு யாருமில்லாமல் சமையலறையில் தன்னந்தனியாக அவள் சிரமப்பட்டிருக்க வேண்டும்.

ஐந்து நிமிடங்கள்கூட அவர்கள் காத்திருக்கவில்லை.

அஞ்சலி அவசரக் குளியலை முடித்து கைநெசவுப் புடவையும், பார்டர் ரவிக்கையும் அணிந்து ஈரக் கூந்தலில் அடிமுடிச்சிட்டு மிகவும் மாறுபட்ட தோற்றத்துடன் பரிமாற வந்துவிட்டாள்.

அவள் ஒரு தேர்ந்த சமையற்காரி என்பதை நிரூபிக்கும் வகையில் ஐந்து நட்சத்திர ருசியுடன் ஏகப்பட்ட ஐட்டங்கள். சூப், பைனாப்பிள் புடிங், எறா கட்லட், ஃபிஷ் ரோல்ஸ், வெஜ் புலவு, இடியாப்பம் சம்பல், சிப்ஸ், ஐஸ்க்ரீம்... திணறடித்துவிட்டாள்!

"புது டி.வி. சீரியலுக்கு ஸ்கிரிப்ட் எழுதறீங்களாமே?" கொறித்துக் கொண்டே மகேஷ் கேட்டான். குறுந்தாடி வைத்து மூக்குக் கண்ணாடி. குர்த்தா ஜீன்ஸ். மெல்லிசான கலை வாசனைகள் கொண்டவன் போலக் காணப்பட்டான்.

"ஆமா. தூர்தர்ஷனுக்காக. ஷியாம் பெனகல் பண்ணிக் கொடுக்கிறார்."

"டிஸ்கவரி ஆஃப் இண்டியா மாதிரியா?" பரிமாறிக்கொண்டே அஞ்சலி கேட்டாள். புடவை பூணூல் மாதிரி அவளுடைய நடுமார்பில்.

"அது ஹிஸ்டரி. இதில் இதிகாசம், புராணம், இலக்கியம், நாடோடிக் கதை, கர்ண பரம்பரைக் கதை எல்லாம் கலந்திருக்கும். ஆனா சத்தியம் இழையோடும். 'இந்திய மகளிர்–நேற்று இன்று நாளை' என்கிற தலைப்பில் ஐம்பத்திரண்டு வார சீரியல்" என்றான் சுந்தர்.

கை கழுவியதும் பாண்டியன், மகேஷ், ராஜேந்திரன் மூவரும் வெளியேறிவிட்டனர், நன்றியும் குட்நைட்டும் சொல்லிவிட்டு.

சுந்தர், அஞ்சலி, குரு மூவரும் கண்ணாடிச் சுவர் ஓரமாகப் போய் சோபாக்களில் சாய்ந்தனர். வெளியே வைரச் சிதறல்போல் நகர விளக்குகள்.

அங்கேயே தங்கிவிடவேண்டும் போல இருந்தது சுந்தருக்கு.

"டி.வி. ஸ்கிரிப்ட் எழுதி முடிக்க உனக்கு இன்னும் எவ்வளவு நாளாகும் சுந்தர்?" குரு கேட்டான்.

"ஆறு மாசமாகலாம்."



"உங்க பெயர் சொல்லி ஒரு லட்சம் பெற்றெடுத்தீங்களே ஜோக்கைப் பற்றி... என்ன பண்றான்?"

"ஒவ்வொரு போலீஸ் ஸ்டேஷன்லேயும் என் பெயரை சொல்லிக்கிட்டிருக்கான்."

–எஸ்.ராகவேந்திரா

"ஆறு மாசமா?"
"ஆமா."
"அப்படி என்னடா ஸ்கிரிப்ட்?"
"ரிசர்ச் ஒர்க் நிறைய இருக்கு. தமிழ்நாட்டிலுள்ள கலெக்டர் ஆபீசுகளுக்கெல்லாம் போய், பழைய கெஸட்டியர், ரிக்கார்டுகளை புரட்டிப்பார்த்து குறிப்பெடுக்கணும். என்னை மாதிரி இன்னும் ரெண்டு பேர் வடமாநிலங்களில் சுத்திக்கிட்டிருக்காங்க."
"நீ எங்கேயும் போற மாதிரியே தெரியலையே. வந்த நாளிலேயிருந்து அந்த ஒட்டல் ரூமுக்குள்ளயேதான் முடங்கிக் கிடக்கே."
"யார் சொன்னது? டெய்லி எக்மோர் ஆர்க்கிவ்ஸ் போய் பழுப் பேறின பத்திரிகைகளையும், பிஸ்கெட் மாதிரி நொறுங்கிப்போகிற காகிதங்களையும் புரட்டிக்கிட்டிருக்கேன். முந்தா நாள் ஃபோர்ட் செயின்ட் ஜார்ஜ் மியூசியம் போனேன்."
"இந்தியப் பெண்கள் பற்றி என்ன சொல்லப் போறீங்க உங்க டி.வி. சீரியலில்?" என்று அஞ்சலி கேட்டாள்.
"இந்தியத் தாய்க்குலத்தின் பெருமைகளையும், பெண்கள் இங்கே தெய்வமாக மதிக்கப்பட்டு பூஜிக்கப்பட்டதையும் உலகத்துக்கு எடுத்துச் சொல்றதுதான் இந்த டாகுமெண்டரியின் நோக்கம்."
"எதுவும் விடுபட்டுராம பார்த்துக்கோங்க" என்றாள் அஞ்சலி.
"ஆடை, அணிகலன், பண்பு, கலாச்சாரம், கற்பு எல்லாமே அதில் இடம்பெறும்ங்க."
"அவ்வளவுதானா?"
"வேற என்ன சொல்லணும்?"
"உனக்கு ஐடியாஸ் இருந்தா சொல்லு அஞ்சலி. சுந்தருக்கு உபயோகமா இருக்கும்."
அஞ்சலி சுந்தரை கூர்மையாக ஒருகணம் பார்த்தாள். பிறகு பேச ஆரம்பித்தாள்.

"பெண்களுக்கு நாம நிறையவே செஞ்சிருக்கோம் மிஸ்டர் சுந்தர். பெண்ணை வித்திருக்கோம். அடகு வெச்சிருக்கோம். பெட் கட்டி சூதாடியிருக்கோம். சபையில் நிக்க வெச்சு புடவை உரிஞ்சிருக்கோம். குழந்தை உற்பத்திக்காக அடுத்தவன் பெண்டாட்டியை இரவல் கேட்டிருக்கோம். முலையைத் திருகி மதுரை மேல் எறிஞ்சிருக்கோம். விஷயம் தெரியாத குழந்தைப் பிராயத்தில் மிலேச்சத்தனமாக தாலியைக் கட்டி, விஷயம் தெரியற பருவத்தில் தாலியை அறுத்து வாழ்நாள் பூராவும் விதவையாக்கியிருக்கோம். மொட்டையும் மூளியுமா ஆக்கிப் பார்த்து மகிழ்ந்திருக்கோம். செத்த புருஷனோட கட்டி வெச்சுக் கொளுத்தி, அப்புறம் சாம்பலுக்கு சதிமாதா கோயில் கட்டி சாமி கும்பிட்டிருக்கோம் இந்த கம்ப்யூட்டர் காலத்தில் கூட. எல்லாம் வரணும் உங்க டாகுமெண்டரியில். செத்துப்போன முத்துப்பட்டன்ங்கற அந்தணனுக்காக, உயிரை விட்ட அரிஜன பொம்மக்கா, திம்மக்கா கதையும், விஜய நகர மன்னருக்காக உடன் கட்டையேறின பத்தாயிரம் பெண்களின் ஓலங்களும், மராத்திய பிராமணச் சிறுமி கிளாவரிந்தா ஸதித் தீயிலிருந்து தப்பித்த கதையும், ஆடைகளை உதறி அம்மணமாக புரட்சிக் கொடி பிடித்த சமணப் பெண் மல்லிபாயின் சரித்திரமும் எல்லாமே வரணும். எதையும் விட்டுராதீங்க."

"அஞ்சலிக்கு மூட் அவுட்" என்றான் குரு.

"இல்லே இல்லே. ஐ'ம் ஓகே."

> **காரணமின்றி கோபப்படுவது,**
> **பலன் இன்றிப் பேசுவது,**
> **முன்னேற்ற அறிகுறி இல்லாமல்**
> **மாற்றங்கள் செய்வது,**
> **நோக்கமின்றி விசாரணை செய்வது,**
> **புதியவர்களிடம் நம்பிக்கை வைப்பது,**
> **எதிரிகளை, நண்பர்கள் என நம்புவது**
> **– இவை முட்டாளின் குணங்கள்.**
> **–முத்து / அராபியப் பழமொழி**

சுந்தர் நீ [illegible]

இங்கேயே நீ தங்கிக்கோ. அஞ்சலிகிட்ட ஏகப்பட்ட ஐடியாக்கள் இருக்கு."

"தாராளமா தங்கிக்கோங்க. எனக்கு ஆட்சேபணை இல்லே. நானும் ஒரு நல்ல ரூம்மேட்தான் தேடிக்கிட்டிருக்கேன்."

"நோ, நோ. நான் இங்கே இருந்தா உங்களுக்கு இடைஞ்சல். நான் ஓட்டல்லயே தங்கிக்கறேன்."

"ஏன் பயப்படறீங்க? இந்தியப் பெண் பத்தி டாகுமெண்டரி எடுக்கப் போறீங்க. ஒரு இந்தியப் பெண்ணோடு தங்கறதுக்கு இந்தப் பயம் பயப்படறீங்க. எனக்கு நீங்க வாடகை தரவேண்டாம். ஏன்னா நான் யாருக்கும் கொடுக்கலே. இந்த பிளாட் குருவின் பத்திரிகைக்குச் சொந்தமானது. நாளைக்கே மூட்டை முடிச்சுக்களோடு வந்துருங்க."

பஸ்ஸர் ஒலித்தது.

எண்ணங்களுக்குள் புதைந்து கிடந்த சுந்தர் 'தடபுட'வென்று எழுந்து கதவை நோக்கி ஆவலோடு ஓடினான்.

அஞ்சலியா? குருவா?

அஞ்சலியாக இருக்க வேண்டும். அஞ்சலியாகத்தான் இருக்க வேண்டும். நெஞ்சில் டவல் கட்டிக் கொண்டா நிற்பாள்? அல்லது வேறு உடையிலா?

இதயம் படபடக்க தாழ்ப்பாளை விலக்கி பின்னுக்கு இழுத்தான்.

மடக்கு குடையுடன் குரு.

நனைந்திருந்தான் தோள்பட்டைகளில்.

"குளிக்கறதுக்காக டவல் கட்டிக்கிட்டு நின்னவ எங்கே மச்சான் போனா?"

"எல்லா ரூமிலேயும் தேடிப் பார்த்திட்டயா?"

"கிண்டலா இருக்கா? நீ வேணா தேடிப்பாரு."

"நீ ஏன் இவ்வளவு பதட்டப்படறேன்னு எனக்குப் புரியலே. எங்கேயாவது அவசர வேலையா போயிருப்பா. மந்தைக்குபோன மாடு

"நம்ம சங்க ஆண்டு விழா போட்டியிலே கலந்துக்க எல்லா உறுப்பினரும் சம்மதிச்சாங்க. ஆனா ஒரே ஒரு போட்டியிலே மட்டும் யாருமே கலந்துக்கலேன்னு சொல்றியே.. என்ன போட்டி அது?"

"அரை மணி நேரத்திலே ஒரு புடவையை செலக்ட் பண்ணுற போட்டிங்க அது..."

—எஸ்.ராகவேந்திரா



தொழுவத்துக்கு திரும்பறாப்பல கொஞ்ச நேரத்தில வந்து சேரப் போறா."

"அவ வருவாள்னு எனக்குத் தோணலே."

"ஏன் தோணலே?"

"இதில் ஏதோ ஒரு பின்னணி இருக்கிறதா நினைக்கிறேன்."

"பின்னணியும் இருக்காது, முன்னணியும் இருக்காது."

"உன் பத்திரிகையில் ஏடாகூடமான சமாச்சாரம் எதையாச்சும் எழுதியிருப்பா."

"என் பத்திரிகையிலயா?" என்று கையை நீட்டி குரு சிரித்தான். "ஜாதி மத வித்தியாசமில்லாம கட்சி வித்தியாசமில்லாம நாட்டில் இருக்கிற எல்லா பிரமுகர்களுக்கும், எல்லா சினிமாக்காரர்களுக்கும் சோப் அடிச்சு துதி பாடற ஒரே விளக்கெண்ணெய் பத்திரிகை நம்ம பத்திரிகை. பத்து பைசா கைநீட்டி வாங்கறதில்லே, யார்கிட்டேயிருந்தும். விளம்பரம் போட்டதுக்கே பாக்கி வெளியில நிறைய நிக்குது. பிரச்சினைக்குரிய விஷயங்களை அஞ்சலி ஆரம்பத்தில் நிறைய எழுதித் தந்தா. ஆனா நான் எதையும் போட்டதில்லே. நான் ஒரு ஐடியா சொல்றேன். கேக்கறியா."

"சொல்லு."

"சாயங்காலம் வரை பார்த்துட்டு போலீஸ் கம்ப்ளெய்ண்ட் குடுத்துரலாம்."

"வேண்டாம் வேண்டாம்."

"ஏன் போலீஸ்னதும் பதர்றே?"

"போலீசுக்கெல்லாம் போக வேண்டாம்."

"பின்னணி இருக்குங்கறே. திரும்பி வருவாள்னு தோணலேங்கறே. போலீஸ் கம்ப்ளெய்ண்ட் கொடுக்க வேண்டாங்கறே. எனக்கு ஒண்ணுமே புரியலே சுந்தர். என்கிட்டேர்ந்து எதையோ நீ மறைக்கிற மாதிரி தோணுது."

சுந்தர் மௌனம்.

"போலீஸ் உதவியில்லாம என் லோக்கல் செல்வாக்கை வெச்சு அஞ்சலியைக் கண்டுபிடிச்சிரலாம். ஆனா உண்மைகளை நீ என்கிட்டே சொல்லணும்னு எதிர்பார்க்கிறேன். என்கிட்டே எதையும் நீ மறைக்கக் கூடாது. நான் உனக்கு ரெண்டாவது தாய் மாதிரி. உனக்கு காமாலை கண்டப்ப உன் பக்கத்திலேயே இருந்து பசி தூக்கம் மறந்து உன்னைக் காப்பாத்தினவன் நான். உன்கிட்டேயிருந்து எதையும் நான் தெரிஞ்சுக்க விரும்பலே. அதனால் எனக்கு எந்த லாபமும் இல்லே. ஆனா என்னை நீ அந்நியனா நினைச்சு அடுக்கடுக்கா பொய்களைச் சொல்லிக்கிட்டிருக்கிறது தான் என்னை உறுத்துது. நீ டி.வி. சீரியலுக்காக மெட்ராஸ் வரலே. சரியா?"

சுந்தர் மௌனம்.

கண்ணாடிச் சுவருக்கு வெளியே சாய்வாகப் பாயும் கொண்டை இல்லாத நீள நீள ஆணிகளைப் போல மழை பூலோகத்தை விளாசிக் கொண்டிருந்தது.

—தொடரும்

தாசரி நாராயணராவ எடுத்திருக்கும் 'விஸ்வாமித்திரா' தொலைக்காட்சித் தொடரில் ரம்யா கிருஷ்ணனும் தலை காட்டியிருக்கிறார்



குள் ஏதோ ஒரு பிரதேசத்தில் எழுந்த கேள்வி ஒன்று ரகுவைக் குழப்பியது.

'அவகிட்ட மூவ் பண்ணிப்பாரு. என் கணக்கு தப்பா, ரைட்டான்னு உனக்குத் தெரியும்'—என்கிற பாண்டியனின் தீர்மானமான வார்த்தைகள் மனப்பிரதேசத்தில் மூளைக்கு ஆதரவாய் எதிரொலிக்க ரகு ஒரு முடிவுக்கு வந்தான்.

எப்படி அணுகுவது...?

ஆங்....கவிதை.

எதைப் பற்றி எழுதுவது?

மண்டையை உடைத்துக்கொண்டு யோசித்துவனுக்கு 'அது மனதில் பட்டது. 'அதற்கு' வார்த்தை வடிவம் கொடுத்து யோசித்தவன் அப்படியே உறங்கிப்போனான்.

கதவை தட்டிவிட்டு, உள்ளே நுழைந்தாள் மாலதி. கூஜாவில் தண்ணீர் ஊற்றியவள் கேட்டாள், "புதுசா ஒண்ணும் எழுதலையா?

"எ..ன்ன கேட்டீங்க?"

"புதுசா கவிதை?"

"ம்..எழுதியிருக்கேன்"

"பார்க்கலாமா எப்படி இருக்குன்னு?" மேஜை மேலிருந்த நோட்டை எடுத்தாள்.

"அதுல எழுதலைங்க. இந்தா இருக்கு"

"நோட்டுல எழுதாம தாள்ல எழுதியிருக்கீங்க?"

"எல்லோரும் படிக்கிறதுக்காக இல்லை இது. உங்களுக்காக மட்டும்..." —ரகு சொல்லிக் கொண்டிருக்கும் போது காற்று பலமாக வீச, கதவு 'டமார்' என்று சுவரில் மோதியது.

தாள் போட்டுவிட்டு வந்து படிக்க ஆரம்பித்தாள் மாலதி.

"பெண்ணே
என்னை நீ
பார்க்க வரும்போதெல்லாம்
உன் சேலை
ஏன்
ஒரு மார்புக்கு மட்டும்
ஓர வஞ்சனை
செய்கிறது?
என்னிரு
கண்களும்
ஆறுதல் சொன்னாலும்
அடக்க மாட்டாமல்
அது
வேதனையால்....

—நிமிர்ந்தாள்.

"எனக்காக எழுதின கவிதையா?"

"ஆமா..." – ரகு ஆர்வக் குறுகுறுப்பும் அவஸ்தையுமாக நெளிந்தான்.

"ஒரு பக்கத்துக்கு என்ன, வஞ்சனை இல்லாம ரெண்டு பக்கத்துலயும் கொடுத்துடலாம் – உங்க கன்னத்துல பளார்னு, ஆனா, இதை அவ்வளவு ரசாபாசப்படுத்த நான் விரும்பலே. மனசுல கல்மிஷம் இல்லாம நான் வந்து பழகினேங்கறது உண்மைன்னாலும் நீங்க தப்பாபுரிஞ்சுக்கற அளவு நான் நெருங்கியிருக்கக்கூடாது. எனக்கு சரியான பாடம் கற்பிச்சிட்டீங்கனுன்னு நினைச்சுக்கறேன் – வர்றேன்..."

விடுவிடு வென்று வெளியேறினாள் மாலதி.

ரகு திகைப்போடு நின்றான். ஆனால், அவன் மனத்தில் ஏமாற்றம் ஏதுமில்லை. தூண்டிவிட்ட நண்பன் மீதுதான் கோபம் பற்றிக் கொண்டு வந்தது.

இப்போது அவன் கவலையெல்லாம், 'இனி எப்படி மாலதியின் முகத்தில் விழிப்பது?' என்பதுதான்●

சுந்தர் திருட்டு முழி முழித்தான்.

குரு தொடர்ந்தான்.

"டி.வி. ஸ்கிரிப்ட் எழுதறதுக்காக நீ இந்த நகரத்துக்கு வரலே. டெல்லி டி.வி.யில் வேலை பார்க்கிறதா என்கிட்டே நீ சொன்னதும் அயோக்கியத்தனமான பொய்."

சுந்தர் எழுந்து போனான். பிரீஃப் கேஸ் ஒன்றை எடுத்து வந்தான். குரு முன்னால் வைத்து திறந்தான்.

உள்ளேயிருந்து ஒரு அடையாள அட்டையை எடுத்து குருவிடம் காண்பித்தான்.

அந்த அட்டையில் சுந்தரின் புகைப்படம் [illegible]டியிருந்தது. புரொடியூசர், தூர்தர்ஷன் கேந்திரா, நியு டெல்லி என்றிருந்தது.

சுந்தர் இன்னொரு கவரை எடுத்து உள்ளேயிருந்த கடிதத்தையும், காசோலையையும் காண்பித்தான்.

"சம்பள செக் எங்கேயிருந்து வந்திருக்குன்னு பார்றா."

டெல்லித் தொலைக்காட்சி நிலையம் சுந்தருக்கு அனுப்பி வைத்திருந்த கடிதத்தையும், சம்பளக் காசோலையையும் குரு கையில் வாங்கிப் பார்த்தான்.

சுந்தர் சொன்னான்-

# சொல்! சொல்! என் உயிரே!

நான் சொல்றதெல்லாம் பொய் யின்னா அஞ்சலி காணாமப் போயிட் டான்னு நான் சொல்றதும் பொய்ங் கறியா?"

"இல்லே. அது பொய்யா இருக் காது. நீ உண்மையிலேயே பதர்றே. உண்மையிலேயே துடிக்கிறே. அவ கிட்னாப் பண்ணப்பட்டிருக்க லாம்னு சந்தேகப்படறே. கிட்னாப் புக்கு பெரிய பின்னணி இருக்குன்னு நினைக்கிறே. நீ நினைக்கிற மாதி ரித்தான் நானும் நினைக்கிறேன். இந்த மழை நேரத்தில் அஞ்சலி தானாக எங்கேயும் போறதுக்கு வாய்ப்பில்லே நெஞ்சில் டவல் மட்டும் சுத்திக்கிட்டு. பட் ஒன் திங். அவ காணாம போனதுக்கு நீதான் பொறுப்பேற்கணும்."

"நான் ஏன் பொறுப்பேற்கணும்? அவ வானத்துப் பறவை. நான் அவளுக்கு பாடிகார்ட் இல்லே. அவமேல அக்கறையுள்ள, அவளை மனசார காதலிக்கிற, அவளுடைய ரூம்மேட். எம்மேல எந்தப் பழியை யும் தூக்கி 'பட்'னு போட்டுராதே."

"நீ செஞ்சிருக்கக்கூடிய ஒரு தவ றான காரியந்தான் அஞ்சலி கடத்தப் பட்டதற்கு காரணம். இல்லேன்னா நீ குற்ற உணர்வோடு புலம்ப மாட்டே. உன்னை எனக்கு அணு அணுவா தெரியும். உன் நட வடிக்கைகளை முறியடிக்க நினைக் கிற எவனோ ஒர்த்தன்தான் அவ ளைக் கடத்திட்டுப் போயிருக்கணும். அஞ்சலிக்கு தனிப்பட்ட முறையில் எதிரிகள் கிடையாது."

"அவளைத் தேடிக் கண்டு பிடிக்க உன்னால் உதவமுடியுமா முடியாதா? அதை மட்டும் சொல்."

"என்னால் உதவ முடியும் சுந் தர். நான் லோக்கல் ஆசாமி. எனக்கு பத்திரிகை பலம் இருக்கு. போலீஸ் டிபார்ட்மென்ட்டில் செல் வாக்கு இருக்கு."

"போலீஸ் உதவியில்லாம அவ ளைக் கண்டுபிடிக்க முடியாதா?"

"ஏன் முடியாது. நீயே போலீஸ் தானே."

"என்ன உளர்றே?"

"உண்மைகளை நீ மறைச் சேன்னா அவளைத் தேடிக் கண்டு பிடிக்க சத்தியமா சாத்திய மில்லே."

"எதையும் நான் மறைக்கலேடா"

"எதுக்காக மெட்ராஸ் வந்தே?"

"டி.வி. ஸ்க்ரிப்ட் எழுத."

"ஒரே பொய்யை திருப்பித் திருப்பி சொல்லிக்கிட்டிருந்தா உண்மையாயிரும்னு நினைப்பா மச் சான்? நான் உடைக்கட்டுமா நீ எதுக்காக வந்திருக்கேன்னு?"

"சொல்லு"

"நீ ஒரு ரகசிய மிஷனில் வந் திருக்கே"

சுந்தர் மறுப்பாகத் தலையசைத்து சிரித்துக்கொண்டு "என்ன ரகசிய மிஷன்?" என்று கேட்டான்.

"அதைத்தான் நான் தெரிஞ் சுக்க விரும்பறேன். "நீ எம்மேல நம்பிக்கை வைச்சு என்கிட்டே சொல்லணும்னு எதிர்பார்க் கிறேன்."

---



'குங்குமம்' பத்திரிகையில் வெளியாகும் தொடர்கதையான 'சொல்! சொல்! என் உயிரே!' – வெளியாகும் முன்னரே, அதற்கான விளம்பரப் படத்தைப் பார்த்தே, 'அதை எழுதப்போகும் எழுத்தாளர் யார்' என்பதை நான் ஊகித்துவிட்டேன். இப்போது இரு அத்தி யாயங்களைப் படித்ததும் அது 'உறுதி'யாகிவிட்டது.

இதுபோன்ற – துப்பறியும், விறுவிறுப்புநிறைந்த, வாசகர்களைப் 'படிக்கத் தூண்டுவதாய்' அமைந்த, 'கவர்ச்சியா' 'ஆபாசமா' என்று வரையறுக்கக் கஷ்டமான – கதையை எழுதக் கூடிய எழுத்தாளர்– .......................... தான்.

*என்கிறார் ஒரு வாசகர் – நீங்கள் கண்டுபிடித்துவிட்டீர்களா?*

"கொள்ளை அடிக்கறது-பிக்பாக்கெட் அடிக்கறதையெல்லாம் இப்போ விட்டிட்டியாமே.. அப்போ. இப்போ என்ன பண்றே?"

"எம்புள்ளைங்களுக்கு அந்தத் தொழிலைக் கத்துக்கொடுத்துட்டு, நான் ஓய்வெடுக்கறேன்."

-ப.இ.இக்பால்



"ரகசிய மிஷனுமில்லே ராம கிருஷ்ணா மிஷனுமில்லே" என்றவன் ஒரு கோப்பினை எடுத்து குரு முன்னே போட்டான்.

"இத படிச்சுப்பார். நாலு மாசமா இந்த டி.வி. ஸ்கிரிப்ட்டுக்காக எவ்வளவு சேகரிச்சிருக்கேன், எப்படி போராடிக்கிட்டிருக்கேன்னு உனக்குத் தெரியும்."

"கதை படிக்கிற நேரமில்லே இது. உடனே நாம காரியத்தில் குதிச்சு அவளை மீட்டுட்டு வரணும். சுணங்கினா அவ கதை முடிஞ்சுரும். நான் உன்னோடு சேர்ந்து முழு மூச்சோடு தேடலில் இறங்கணும்னா நீ உன் மனசைத் திறந்து காட்டணும். உன் பிடிவாதத்தால் ஒரு பாவமும் அறியாத அஞ்சலியை அழிச்சிராதே."

"உனக்கு அஞ்சலி மேல் அக்கறையிருந்தா அவளைக் கண்டு பிடிக்க உதவி செய். அவ்வளவு தான் நான் சொல்வேன்."

"அக்கறை இருக்கிறதினால்தான் நீ சொல்ல விரும்பாததை, நீ சொல்லத் தயங்கறதை சொல்லுன்னு கட்டாயப்படுத்தறேன். சொல்ல இஷ்டமில்லேன்னா உன்னோடயே வெச்சுக்கோ. அஞ்சலி உயிரோட இருந்தா எப்படியும் தப்பிச்சு வந்துருவா. அழகி மட்டுமில்லே அவ. மூளையுள்ள அழகி."

குரு எழுந்தான்.

"எங்கே கிளம்பறே? உட்கார்"

"பத்திரிகையில் எனக்கு நிறைய வேலை இருக்கு. போறேன் என்னை நீ நம்பலேன்னா உன்னையும் நான் நம்பத் தயாரா இல்லே."

"உன்னை நான் நம்பறேண்டா. சில விஷயங்களைப் பொறுத்த வரைக்கும் என் நாக்கு வெட்டப்பட்டிருக்கு. இதுக்குமேல எதுவும் கேட்காதே."

"உன் நாக்குதானே வெட்டப்பட்டிருக்கு. நான் பேசறேன். நீ ஐ.பி.க்கு அதாவது இன்டலிஜென்ஸ் பீரோவுக்கு ரெக்ரூட் ஆகி டெல்லி போனே. அப்புறம் I.P.S என்கிற மூன்றெழுத்துக்களைக், கைப்பற்றினே. மத்திய அரசு உன்னை அமெரிக்காவுக்கு ஹார்வர்டுக்கு அனுப்பி வெச்சிது. அங்கே போய் அகில உலக அரசியல், அயல் நாட்டு விவகாரம், ஆர்மி ரேஸ் மாதிரி சாமாச்சாரங்களில் புலவன் ஆனே. மேகாலயாவிலேயும், அந்த மானிலேயும் உளவு பார்த்தே. பாகிஸ்தானின் அணு ஆயுத முயற்சிகளை அளந்துட்டு வர்றதுக்காக ஆறு மாத காலம் இஸ்லாமாபாத்தில் விதைக்கப்பட்டாய். அங்கேயிருந்து சில உபயோகமான தகவல்களோடு தாய்நாடு திரும்பிகாவ் சாக்சேனா சங்கரன் நாயர் உள்ளங்களில் உன் பெயரைச் செதுக்கினே."

சுந்தர் சற்று அதிர்ந்தவனாய் 'எப்படித் தெரியும் இதெல்லாம் உனக்கு?' என்கிற பாவனையில் பார்த்தான்.

"முந்தாநாள் சதீஷ் ஜேகப்பை ஏர்ப்போர்ட்டில் சந்திக்காம இருந்

புரொட்யூசர்னுதான் நான் மடத்தனமா நினைச்சுக்கிட்டிருப்பேன்."

"யார் சதீஷ் ஜேக்கப்?"

"லயோலாவில் நாம படிச்ச காலத்தில் படிச்சவன்."

"அப்படி ஒரு பேரை நான் கேள்விப்பட்டதேயில்லையே."

"அவன் பி.எஸ்ஸி. மாத்ஸ். உனக்கு அவனைத் தெரிய நியாய மில்லை. ஆனா பெர்ட்ரம் செஸ் கிளப்பில் அவன் உன் விசிறி. உன் ஆட்டத்தைப்பற்றி பல தடவை என் கிட்டே அவன் புகழ்ந்து பேசியிருக் கான். இப்ப டெல்லியில் ஜே.என்.யு. வில் வேலை பார்க்கிறான். முந்தா நாள் ஏர்ப்போர்ட்டில் தற்செயலா அவனை சந்திச்சேன். உன் அபி மான செஸ் ஆட்டக்காரன் சுந்தர் மெட்ராஸ் வந்து டோர்னமெண்ட் ஆடி சில்வர் கப் பரிசு பெற்றி ருக்கான்னு சொன்னேன். உடனே அவன் மளமளன்னு உன் புகழ்பாட ஆரம்பிச்சிட்டான்."

"என்னைப்பத்தி அவனுக்கு எப் படித் தெரியும்?"

"அவனோட சித்தப்பா ஐ.பி.யில் இருக்கார்."

"பேர்?"

"நான் கேட்டுக்கலே"

"மேகாலயாவிலும், அந்தமானி லும் நான் வேலை பார்க்கலே."

"சதீஷ் சொன்ன மற்ற விஷயங் கள்?"

குரு. சுந்தரின் கண்களையே பார்த்தான்.

"உண்மையா இருக்கலாம். இல் லாமலும் இருக்கலாம்."

"எந்த இலாகா உன்னை இங்கே அனுப்பி வெச்சிருக்கு? சி.பி.ஐ.?"

"இல்லே."

"ஆர்.ஐ?"

"ஊஹும்"

"எம்.ஐ.?"

"கிடையாது"

"எஸ்.ஐ.பி.?"

"தெரியாது"

"ஐ.பி.?"

"சொல்லமாட்டேன்."

Analysis Wing?"

"எப்படி வேணாலும் நீ கற்பனை பண்ணிக்கலாம்."

"கற்பனை பண்ணி, நடந்திருக்கக் கூடிய கதையை நானே சொல் றேன் கேள். இப்போ மத்திய அர சின் உளவுத்துறை உனக்கு டி.வி. புரொட்யூசர் வேஷங் கட்டிவிட்டு டெல்லி டி.வி. சென்டருக்குள் உன்னை விதைச்சிருக்கு. டி.வி. ஸ்கிரிப்ட் எழுதற சாக்கில் வேற ஏதோ ஒரு அஸைன்மெண்ட்டுடன் நீ மெட்ராஸ் வந்திருக்கே. உன் காரியத்தை சாதிக்க அஞ்சலிய ஆயுதமா பிரயோகிச்சிருக்கே. அவ பாவம் எங்கேயோ போய் மாட் டிக்கிட்டு உயிரை விடப் போறா. மெட்ராசில் உன் டார்கெட் யார்? என் கிட்டே சொன்னேன்னா ஆறு மாசத்தில முடியற உன் ஜாப் அடுத்த வாரத்திலேயே முடிஞ் சிரும்."

"எப்படி?"

"என் செல்வாக்கை இன்னும் நீ துல்லியமா எடை போடலே மச் சான்."

"என் டார்கெட் என்னன்னு சொல்றேன். ஆனா உன் தலையை வெட்டினாக்கூட அது வெளியே வரக்கூடாது"

"என்னை நம்பினா சொல்லு. அஞ்சலி பத்திரமா இந்தப் படுக் கைக்கு திரும்பணும்னா சொல்லு. உன் ரகசியங்களைத் தெரிஞ்சு எனக்கு எதுவும் ஆகப்போறதில்லே. அதை நீ புரிஞ்சுக்கணும்."

"நான் வந்த வேலையைப்பத்தி சொல்றதுக்கு முன்னால் அஞ்சலி பத்தி நான் முழுசா தெரிஞ்சுக் கணும்."

"அஞ்சலிபத்தி உனக்கு என்ன விவரம் தேவை?"

"அவ சைல்ட்ஹுட் பத்தி?"

"அவளுக்கு சைல்ட்ஹுட் கிடை யாது."

"அப்படீன்னா?"

"பரிதாபமான கதை அவளுடை

**கவிஞர் கண்ணதாசனுக்கு அந்தப் பெயர் வந்தது தெரியுமா?**

கண்ணதாசனின் இயற்பெயர் முத்தையா. அவர் தனது பதினேழாவது வயதில் புதுக்கோட்டையிலிருந்து வெளிவரும் 'திருமகள்' என்ற இலக்கியப் பத்திரிகையில் விளம்பரப் பிரிவில் வேலைக்கு சேருவதற்காக, ஒரு நண்பரின் சிபாரிசுக் கடிதத்துடன் காரைக்குடியிலிருந்து புதுக்கோட்டைக்கு பஸ்ஸில் சென்று கொண்டிருந்தார். தன்னை எப்படி அறிமுகப்படுத்திக்கொள்வது என்று யோசித்தார். முத்தையா என்ற பெயர் சாதாரணமாக இருப்பதாகத் தோன்றியது அவருக்கு. கதை, கவிதை எழுதுவதில் ஆர்வமுள்ளவன் என்பது 'பளிச்' சென்று தெரியும்படி ஒரு புனைபெயரை யோசித்துப் பார்த்தார். அவருக்குப் பிடித்தமான கடவுள் கண்ணன். கண்ணனின் பெயரை வைக்கலாம் என நினைத்தார். கண்ணனும் எட்டாவது குழந்தை, அவரும் எட்டாவது குழந்தை. பொருத்தம்தான். ஆனால் கண்ணன் என்பதுகூட புனைபெயராகத் தெரியவில்லையே என்று தயங்கினார். அப்போது பாரதிதாசன் பிரபலமாயிருந்த நேரம். பாரதியாரும் ஷெல்லிதாசன் என்ற பெயரில் எழுதியது அவர் நினைவுக்கு வந்தது. உடனே கண்ணனுடன் தாசனை சேர்த்தார். கண்ணதாசன் உருவானார்!

முத்தையாவைத் தெரியுமா!



---

யது. அம்மா தமிழ்ப்பெண். அப்பா ஆங்கிலோ–இண்டியன். அஞ்சலியின் குழந்தைப் பருவத்திலேயே பெற்றோர் பிரிந்துவிட்டனர். அப்பா வேறொருத்தியை மணந்தார். அம்மா மீண்டும் மணந்தாள். அஞ்சலி பள்ளிக்குள் நுழைந்தாள். வெளியே வந்தாள். ஹோட்டல் வெயிட்டரை காதலித்தாள். அப்புறம் காதலை களைந்தாள். அப்புறம் என்னை சந்தித்தாள். கடைசியா உன்னை. கதை முடிஞ்சுது."

"அவளுக்கு இன்னி தேதியில ரொம்ப நெருக்கமானவங்க யார்?" என்று சுந்தர் கேட்டான்.

"நீ"

"என்னைத் தவிர?"

"நான். வேற யாரும் கிடையாது. சரி, இப்ப சொல்லு. அஞ்சலியை எதில் கொண்டுபோய் மாட்டிவிட்டே? நாங்க விவாகரத்து பண்ணிட்டாலும் ஓர்த்தரையொர்த்தர் வெறுக்கறோம்னு தப்பா நினைச்சிடாதே. ஐ ஸ்டில் லவ் ஹெர். உண்மைகளை நீ சொன்னா அவளை சீக்கிரமா தேடிக் கண்டு பிடிக்க எனக்கு உதவியா இருக்கும். அவ காணாமல் போனதில் பெரிய பின்னணி இருக்கலாம்னு நீ நினைக்கிறதினால் அவ வெளியே இருக்கிற ஒவ்வொரு வினாடியும் அவ உயிருக்கு ஆபத்து. உன் ரகசியங்களை என்னோடு பகிர்ந்துக்கிட்டா உன் பதவிக்கு ஆபத்துன்னு நீ பயந்தா எதையும் என்கிட்டே சொல்ல வேண்டாம். ஆனா ஒரு விஷயம்."

"என்ன?"

"இன்னும் 24 மணி நேரத்துக்குள்ளே அஞ்சலி பத்திரமா திரும்பி வரலேன்னா நான் போலீசில் புகார் கொடுக்கிறது உறுதி" என்று தீர்மானமாகச் சொன்னான் குரு.

சுந்தரின் கண்களில் குழப்பம் நிழலிட்டது.

கண்ணாடிச் சுவருக்கு வெளியே மழையின் வெறி சற்றுத் தணிந்திருந்தது.

-தொடரும்

# ஏறுது ஏறுது விலைவாசி! போகுது போகுது ஏழைகள் உசுரு!

THE SUGAR BARONS WERE *DELIBERATELY* ALLOWED BY THE GOVERNMENT TO HIKE THE PRICES IN LIEU OF THE HUGE FUNDS TO THE TUNE OF A WHOPPING RS 700 RPT SEVEN HUNDRED CRORE COLLECTED BY THE RULING PARTY FROM THEM.

— யு.என்.ஐ. செய்தி

"சர்க்கரை முதலாளிகளிடம் ஆளும்கட்சி ரூ.700 கோடி வாங்கிக் கொண்டு, சர்க்கரை விலையை உயர்த்துவதற்கு மத்திய அரசு அனுமதித்தது"

— திரு. வாஜ்பாய், எம்.பி.

— இதனால்தான் சர்க்கரை விலை உயர்வு!
சமையல் எண்ணெய் விலை உயர்வு!

— எல்லா விலைவாசியும் விஷம் போல
உயர்ந்துகொண்டே போகிறது!

**ஏன்?**

**மக்களைப் பற்றிக் கவலைப் படாமல் கொள்ளையடிக்கும் மக்கள் விரோத மத்திய அரசே காரணம்!**




நன்றி — ஆனந்தவிகடன்

விலைவாசி வீழ காங்கிரஸ் ஆட்சியை வீழ்த்திடுவீர்!



# ஆதரிப்பீர்



# உதய சூரியன்

தேர்தல் நாள்: 24-11-89

குரு சொன்னான்...

"அஞ்சலியைக் கண்டுபிடிக்க போலீஸ் உதவியை நாடப்போறேன்னு நான் சொன்னது உன்னை மிரட்டறதுக்காக இல்லே சுந்தர். எந்த போலீசும் உன்னை டச் பண்ண முடியாது. எனக்குத் தெரியும். நடந்தவைகளை என்னை நம்பி நீ ஒளிக்காம சொன்னேன்னா போலீஸ் உதவியில்லாமலேயே என் உள்ளூர் செல்வாக்கை வெச்சு அவளைத் தேடிக் கண்டுபிடிக்க என்னால் முடியும். நீ சொல்லத் தயங்கறதினால்தான் போலீசிடம் போகப் போறேன்னு சொல்றேன்."

"நீயும் நானும் ஒண்ணுங்கற நம்பிக்கையில் யாரிடமும் சொல்லக் கூடாத உண்மைகளை நான் சொல்றேன். டெல்லி டி.வி.யின் சம்பளப் பட்டியலில் என் பெயர் இருக்குதே தவிர என் தொழில் வித்தியாசமானது. இரு கதவை சாத்திட்டு வர்றேன்" என்ற சுந்தர் எழுந்து போனான். கதவைத் திறந்து தலை நீட்டி வெளிப் பக்கம் பார்த்துவிட்டு மீண்டும் அடைத்துத் தாழிட்டான். திரும்பி வந்து குருவின் எதிரே அமர்ந்து பேச்சைத் தொடர்ந்தான்.

"இன்னி தேதியில் மனித குலத்தினால் அழிக்க முடியாத பேராபத்துக்கள் நாலேநாலுதான் குரு. எய்ட்ஸ், கான்சர், சுற்றுப்புற சூழ்நிலையின் மிரட்டல், பயங்கரவாதம்... இந்த நாலில் பயங்கரவாதம்தான் தவிர்க்க முடியாத ஒரு நாகரிகம் போலவும் வேரறுக்க முடியாத வியாதி போலவும் உலகம் பூராவும் பரவிக்







சொல்! சொல்! என்

கிட்டிருக்கு. இதுக்கு நம் நாடும் விதி விலக்கில்லே. இந்தியாவில் வேகமாக பரவி வேரூன்ற முயற்சிக்கும் கொரில்லா கும்பல்களை அடியோடு ஒழிச்சுக்கட்ட மத்திய உளவுத்துறை ஒரு சிறப்பு படைப்பிரிவை அமைச்சிருக்கு. அந்தப் படைப் பிரிவைச் சேர்ந்தவன் நான்."

"மெட்ராஸ் வந்த காரணம்?"

"மக்கள் புரட்சி இயக்கம் என்ற ரகசியக் கும்பலை செயலிழக்கச் செய்ய."

"அப்படி ஒரு இயக்கம் இருக்கா? நான் கேள்விப்பட்டதே இல்லையே."

"இருக்கு. ஜப்பானிய ரெட் ஆர்மி, மேற்கு ஜெர்மனியின் பாதன் மெய்ன்ஹஃப், யூதவிரோத பயங்கரவாதிகளை தீர்த்துக்கட்டறதுக்காக இஸ்ரேலிய மொஸ்ஸாட் ஆதரவுடன் செயல்பட்ட 'ராத் அஃப் காட்', டாக்டர் ஜார்ஜ் ஹபாஷ் தலைமையில் பாலஸ்தீன ரக பயங்கரவாதச் சரக்கை உற்பத்தி செஞ்ச PFLP, இதாலியின் ரெட் பிரிகேட், இப்படி எத்தனையோ பயங்கரவாத தீவிரவாத இயக்கங்கள் முளைச்சிருக்கின்றன. ஒண்ணோடொண்ணு மோதியிருக்கின்றன. ஒண்ணையொண்ணு அடிச்சு சாப்பிட்டிருக்கின்றன. அநேகமா எல்லா இயக்கங்களுமே ஏதோ ஒரு குறிக்கோளோடுதான் செயல்பட்டிருக்கின்றன. ஆனா இந்த மக்கள் புரட்சி இயக்கத்துக்கு எந்த நோக்கமும் இருக்கிறமாதிரித் தெரியலே. பாலங்களை தகர்க்கிறதும், தண்டவாளங்களை பெயர்க்கிறதும் அப்பாவி ஜனங்கள் மீது வெடிகுண்டு வீசறதும், நாட்டின் இராணுவ ரகசியங்களை அயல் நாட்டுக்கு விற்கிறதும், ஆயுதம் கடத்தி விற்கிறதும்தான் இந்த இயக்கத்தின் லட்சியமாகவும் சாதனையாகவும் இருந்துக்கிட்டிருக்கு. இந்த இயக்கத்தை நடத்தற தீக்கண்ணன் என்கிற அர்ஜுன் வன்முறையை நேசிக்கிற ஒரு மனநோயாளி. அவனுக்குத் தேவை பணம், பெண், மது, துப்பாக்கி. கிட்டத்தட்ட வெனிசுலா வைச்

## முன்கதை

*சுந்தர், குருநாதன் இருவரும் சென்னைக் கல்லூரியில் ஒன்றாகப் படித்த நண்பர்கள். ஐந்தாண்டு கால பிரிவுக்குப் பிறகு மீண்டும் சென்னையில் சந்திக்கின்றனர். குரு இப்போது 'மெட்ராஸ் மெயில்' ஆங்கில வார இதழை சென்னையில் நடத்தி வருகிறான். சுந்தர் டெல்லி தொலைக் காட்சியில் தயாரிப்பாளராகப் பணியாற்றுவதாகவும், ஒரு தொலைக் காட்சித் தொடருக்கு ஸ்க்ரிப்ட் எழுதுவதற்காக சென்னை வந்திருப்பதாகவும் சொல்லுகிறான். குரு தன் முன்*

சேர்ந்த சூபர் டெரரிஸ்ட் கார்லோஸ் மாதிரித்தான் இந்த அர்ஜுன்."

"அர்ஜுனைக் கண்டுபிடிச்சு தூக்கு மேடைக்கு அனுப்பறதுக்காக வந்திருக்கியா?"

"இல்லே."

"நீயே அவனுக்கு மரண தண்டனை நிறைவேற்றப் போறியா?"

"இல்லே."

"வேறே என்ன செய்யப் போறே?"

"எங்க உளவுத் துறையில் பணியாற்ற அர்ஜுனுக்கு சகல திறமைகளும் தகுதிகளும் இருக்கு."

"அதனால்?"

"அர்ஜுனை எங்க உளவுப் படைக்கு ரெக்ரூட் பண்றதுக்காக வந்திருக்கேன்."

'ஹாஹ் ஹாஹ் ஹாஹ் ஹா...!' என்று சப்தமாக வாய்விட்டு குருநாதன் ஒரு பாட்டம் சிரித்து ஓய்ந்தான்.

"ஏன் சிரிக்கிறே?"

"அர்ஜுனை நீ புடிச்சிடுவியா?"

"ஏன் முடியாதா?"

"அவன் போன இடம் புல் முளைச்சு ஒண்ணரை வருஷம் ஆகுது

***...மனைவி அஞ்சலியை சுந்தருக்கு அறிமுகம் செய்து வைக்கிறான். அஞ்சலி குருவின் பத்திரிகைக்கு சொந்தமான ஃபிளாட்டில் வசிக்கிறாள். குரு சுந்தரை அஞ்சலியுடன் தங்கிக் கொள்ளச் சொல்ல, அஞ்சலியும் அதற்கு சம்மதிக்க சுந்தர் அஞ்சலியுடன் தங்கிக் கொள்கிறான். நான்கு மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள் மழை பொழியும் அதிகாலை வேளையில் நெஞ்சில் டவல் கட்டிக் கொண்டு குளிக்கத் தயாராக நின்ற அஞ்சலி காணாமல் போய் விடுகிறாள். சுந்தர் பதட்டத்துடன் குருநாதனுக்கு போன் பண்ணி வரவழைக்கிறான். 'அஞ்சலி காணாமல் போனதில் ஒரு பின்னணி இருக்கிறமாதிரி***

***[illegible] குரு, 'நீ டி.வி.சீரியலுக்கு எழுதுவதற்காக சென்னை வரவில்லை. மத்திய அரசின் உளவுத்துறையிலிருந்து ஏதோ ஒரு காரியத்துக்காக சென்னை வந்திருக்கிறாய். நீ செய்திருக்கும் ஏதோ ஒரு தப்பான காரியம்தான் அஞ்சலி கடத்தப்பட்டதற்கு காரணமாக இருக்க வேண்டும். உண்மைகளை நீ சொன்னால் அஞ்சலியைத் தேடிக் கண்டுபிடிக்க என் லோக்கல் செல்வாக்கை உபயோகிக்க முடியும். உண்மைகளை நீ சொல்லாவிட்டால் அஞ்சலியைக் கண்டுபிடிக்க நான் போலீஸ் உதவியை நாட வேண்டியதிருக்கும்' என்கிறான். சுந்தரின் முகத்தில் தயக்கம். இனி...***

---

மச்சான். போலீஸ் சுட்டுருச்சு. தமிழ் பேப்பரெல்லாம் பாக்கறதில்லையா நீ?"

"அர்ஜுன் உயிரோடு இல்லேங்கறதை உலகம் நம்புது. உளவுத்துறை நம்பலே. பத்திரிகைச் செய்தியை நான் பார்த்தேன். அர்ஜுன் சுடப்பட்டு செத்துக்கிடக்கிற மாதிரி படமும் வந்துச்சு. அதையும் பார்த்தேன். போலீசாருக்கும் தீவிரவாதிகளுக்கும் நடந்த மோதலில் சுடப்பட்டது அவன் இல்லே."

"எதை வெச்சு சொல்றே?"

"ரெண்டு மாசத்துக்கு முன்னால் பெசன்ட் நகரில் நந்தகுமார்னு ஒரு பொருளாதார பேராசிரியர் லாரி விபத்தில் இறந்திட்டார், ஞாபகமிருக்கா குரு?"

"நல்லா ஞாபகமிருக்கு. காலேஜ் போறப்ப அவர் ஸ்கூட்டர் லாரியில் மோதிடுச்சு."

"அதான் இல்லே. நந்தகுமார் சாலை விபத்தில் சாகலே. அவன் விதைச்ச டெலிபோன் பாம் அவர் தலைய தனியா எடுத்துருச்சு."

"டெலிபோன் பாம்?"

"ஆமா, நந்தகுமார் பகலில் கல்லூரியில் ஷேர், டிபென்ச்சர் பற்றி பொருளாதார பிரசங்கம் செஞ்சுக்கிட்டிருந்தப்ப அர்ஜுன் அவர் ஃபிளாட்டுக்குள் நுழைஞ்சு பெட்ரூமில் தொலைபேசிக்குப் பக்கத்தில் ஒரு வெடிகுண்டை மறைச்சு வெச்சிட்டு வெளியேறிட்டான். நைட் நந்தகுமார் வீட்டுக்குள் நுழைஞ்சதும் அர்ஜுன் ரெண்டு மூணு வீடு தள்ளி தெருவோரத்திலிருந்த பொதுத் தொலைபேசிக் கூண்டில் டயலைச் சுழற்றி நந்தகுமாரை கூப்பிட்டிருக்கான். மறுமுனையில் நந்தகுமார் போனை கையில் எடுத்து ஹலோ சொன்னதும் அர்ஜுன் டெலிபோன் லைன் மூலமா மின் சாரத்தை டெடோனேடருக்கு அனுப்பி குண்டை வெடிக்க வெச்சிருக்கான்."

"அர்ஜுன்தான் அதைச் செஞ்சிருப்பான்னு எப்படி முடிவெடுத்தே?"

"தடயமில்லாம தனி நபரை கொலை பண்றதுக்கு தமிழ்நாட்டில் அர்ஜுன் ஒருத்தன் தான் இந்த முறையைக் கையாண்டுக்கிட்டிருக்கான்."

"ஏன் அர்ஜுனோட ஆளா இருக்கக் கூடாது?"

"அர்ஜுனைத் தவிர வேறு யாராலும் இந்தக் காரியத்தை துல்லியமாகவும் வெற்றிகரமாகவும் செய்து

லி அபூர்வமான முறைகளை அவன் தன்னோட ஆட்களுக்குக்கூட சொல்லிக் கொடுக்கறதில்லே. களத்தில் தானே இறங்கிருவான். இன்னொரு விஷயம். மதுராசிங்னு ஒரு பேர் கேள்விப்பட்டிருக்கியா?"

"இல்லே."

"மதுராசிங் காலிஸ்தான் கமாண்டோவை சேர்ந்தவன். பஞ்சாபில் நடந்த ஒரு மோதலில் போலீசார் அவனை சுட்டுக் கொன்னாங்க. உடனே அவனுடைய சகாக்கள் கொதிப்படைஞ்சு லால்ருவிலும் அரியானா ஃபதேஹாபாத்திலும் அப்பாவி பஸ் பயணிகளை கொன்னு குவிச்சாங்க. அந்த மதுரா சிங்கிட மிருந்து கைப்பற்றின ரிகார்டுகள் அவனுக்கும் அர்ஜுனுக்குமுள்ள நட்பையும் தொடர்புகளையும் ஊர்ஜிதம் செஞ்சிருக்கு. டெலிபோன் குண்டு வெடிச்சபிறகு நந்தகுமாரின் படுக்கையறையில் சிதறி சிதைஞ்சு கிடந்த வெடி குண்டு உறுப்புக்களுக்கும் பஞ்சாபில் மதுராசிங் சம்பந்தப்பட்ட குண்டு வெடிப்பு சம்பவங்களின் போது சேகரிக்கப்பட்ட சிதறல்களுக்கும் நிறைய ஒற்றுமைகள் இருக்கு."

"அப்படீன்னா அவன் உயிரோடு உலவிக்கிட்டிருக்காங்கறே?"

"அப்படித்தான் தோணுது."

"நான் நம்பத் தயாரா இல்லே. அவனைப் பத்தி உனக்கு தகவல்கள் தேவைன்னா சொல்லு. என் பத்திரிகை ஆபீசில் 'அவன் 'வாழ்க்கை வரலாறே' இருக்கு. ரெண்டு நாளில் தேடி எடுத்துத் தர்றேன்."

"எடுத்துக்குடு. எனக்குத் தேவை தான்."

"அது சரி பொருளாதார போராசிரியர் நந்தகுமார் மேல் அவனுக்கு என்ன கோபம்?"

"நந்தகுமார் அண்டர்கவர் ஆசாமி. எங்க உளவுத்துறையைச் சேர்ந்தவர். அர்ஜுன் அதை எப்படியோ கண்டு பிடிச்சிட்டான்."

போன் குண்டு வைப்பான், அவன் உயிரோடு இருந்தால்."

"அந்த ஆபத்தெல்லாம் இல்லாம இல்லே. அதுக்கெல்லாம் பயந்தா இந்த உத்தியோகத்தில் நீடிக்க முடியாது."

"நீ எதுக்கும் பயப்படமாட்டே. ஆனா அஞ்சலி பூ மாதிரி. அவளை அற்பாயுசில் அனுப்பி வெச்சிராதே."

"இந்தத் தடவை அவ எந்த ஆபத்தும் இல்லாம என்கிட்ட திரும்பி வந்துட்டாள்னா அப்புறம் அவளை என்னுடைய தொழிலுக்காக எங்கேயும் அனுப்பமாட்டேன் குரு. அவ இல்லாதப்பதான் அவ அருமையை என்னால் முழுசா உணர முடியுது."

"அவ எப்படி காணாம போயிருப்பாள்னு நீ உன் மனசில் நினைக்கிறே? அதை முதலில் மறைக்காம சொல்."

"கடத்தப்பட்டிருக்கலாம்."

"யாரால்?"

"அர்ஜுனோட ஆட்களால்."

"நீ மெட்ராஸ் வந்திருக்கிறதை அவன் மோப்பம் பிடிச்சிட்டாங்கறியா?"

"அதுக்கு வழி இல்லே."

"அப்புறம் அஞ்சலியை ஏன் அவன் ஆட்கள் கடத்தறாங்க?"

"அவனுக்கு எதிரா யார் செயல்பட்டாலும் அவன் சும்மா விடமாட்டான்."

"அஞ்சலி அர்ஜுனுக்கு எதிரா செயல்பட்டாளா?"

"ஆமா."

"என்ன செஞ்சா?"

"அவன்கிட்டே போய்ச் சேர வேண்டிய புகைப்படங்களை என்கிட்டே கொண்டு வந்து கொடுத்திட்டா."

"ஏன் அப்படி செஞ்சா? தெரிஞ்சு செஞ்சாளா, தெரியாம செஞ்சாளா?"

"அவளுக்கு எதுவும் தெரியாது. பாவம். என்ன நடந்ததுன்னு சொல்

ஒரு மனிதனுக்குச் சராசரியாக எத்தனை பிறந்தநாள் வரும்?

ஒன்றே ஒன்றுதான். மற்றதெல்லாம் ஆண்டு நிறைவுகள்.

-ராமுசாமி

றேன். வக்கீல் மணியன் தெரியுமா?"

"தெரியும். கோடீஸ்வரன்."

"அவருக்கு ஒரு மகன் இருக்கான். பேர் மணிவேல்."

"ஒரு கால் கிடையாது. செயற்கை கால் பொருத்தியிருப்பான். தெரியும் சொல்லு."

"ஒரு தடவை மணிவேல் வெடி குண்டை காரில் எடுத்திட்டுப் போனான். போற வழியில் குண்டு வெடிச்சு கால் போயிருச்சு. வக்கீல் அந்த விஷயத்தை வெளியில் வராம அமுக்கிட்டார். அந்த மணிவேல்தான் அடர்ஜுனுக்கு வலது கை மாதிரி. அவன் போன வாரம் ஒரு ரோல் பிலிமை டெவலப் பண்ணி பிரிண்ட் போடறதுக்காக மவுண்ட் ரோடு அல்லி போட்டோ ஸ்டுடியோவில் கொடுத்தான்."

"அவன் கொடுத்தது உனக்கு எப்படித் தெரியும்?"

"எனக்கு தகவல் வந்துச்சு. எப்படி வந்துச்சுன்னு கேட்காதே. இப்ப சொல்லமாட்டேன். அது உனக்குத் தேவையில்லாத விஷயம்."

"ஸாரி மச்சான். விஷயங்களை நீ மறைச்சா நான் ஆட்டத்துக்கு வரலே..."

"உட்கார்ரா. விசுக் விசுக்னு எழுந்திருச்சுக்கிறியே. வேலாயுதம் மூலம் எனக்கு தகவல் வந்துச்சு. யார் வேலாயுதம்னு நீ கேக்கறதுக்கு முன்னால நானே சொல்லிர்றேன். வேலாயுதம் போஸ்ட்மேன். ஆயிரம் விளக்குல ஒரு சந்தில் குடியிருக்கார். எங்க இலாகாவுக்கு அவர் இன்ஃபார்மர். தகவல் கொடுக்கிறவர். மணிவேலை கண்காணிக்கிறதுதான் இப்ப அவரோட முக்கியமான வேலை.

வந்ததும் நான் அல்லி ஸ்டுடியோவிலிருந்து அந்த நெகடிவ்களையும் பிரிண்ட்களையும் கைப்பற்றத் திட்டம் போட்டேன். நான் போய் கேட்டா ஸ்டுடியோகாரர் ரசீது கேட்பார். ரசீது இல்லேன்னா தர முடியாதும்பார். அஞ்சலி மாதிரி ஒரு அழகி கேட்டா இல்லேன்னு சொல்ல எந்த ஆம்பளைக்கும் மனசு வராது. அதனால அஞ்சலியை ஸ்டுடியோவுக்கு அனுப்பி 'வைச்சேன். நான் சொல்லிக் கொடுத்தபடி அஞ்சலி மணிவேல் பேரைச் சொல்லி பணத்தைக் கொடுத்து நெகடிவ்களையும் பிரிண்ட்டுகளையும் வாங்கிக்கிட்டு வந்துட்டா. ஆனா ஒரு சின்ன தப்பு பண்ணிட்டா."

"என்ன பண்ணினா?"

"மறதியா கையில் வெச்சிருந்த எரிகா ஜாங் நாவலை ஸ்டுடியோவில் விட்டுட்டு வந்துட்டா."

"அப்புறம் அவ போயி எடுக்கலையா அதை?"

"மறுநாள் போய் வாங்கிக்கிட்டு வந்துட்டா."

"அப்புறம் என்ன?"

"என்ன நடந்திருக்கும்னு சொல்றேன். அஞ்சலி படங்களை வாங்கிக்கிட்டு வந்தப்பறம் மணிவேல் அந்த ஸ்டுடியோக்காரர் கிட்டே போய் படங்களை கேட்டிருப்பான். அவர் விஷயத்தை சொல்லியிருப்பார். 'நீங்க அனுப்பினதா ஒரு பெண் வந்து கேட்டுச்சு. குடுத்திட்டேன்'னு சொல்லியிருப்பார். அஞ்சலியோட நாவலையும் எடுத்து மணிவேல்கிட்ட காட்டியிருப்பார். மணிவேல் நாவலை வாங்கி பார்த்துட்டு அவர்கிட்டயே திருப்பிக் கொடுத்துட்டுப் போயிருப்பான்".

"நாவலில் அஞ்சலி இந்த வீட்டு அட்ரஸை எழுதி வெச்சிருந்தாளா?"

"இல்லே. மணிவேல் அட்ரஸை தெரிஞ்சுக்கறதுக்கு வசதியா அவளுக்கு வந்த ஒரு இன்லாண்ட்

# அந்தக் கவிஞர்

கவியரசு கண்ணதாசன்.



லெட்டரை அந்த நாவலுக்குள்ளே வெச்சிருந்தா."

"அப்ப மணிவேலைத்தான் இப்ப நாம மடக்கணும். அவன்தான் அஞ்சலியை கடத்திட்டுப் போயிருக்கான். அவளை எங்கே வெச்சு சித்ரவதை பண்ணிக்கிட்டிருக்கானோ தெரியலயே."

"மணிவேலை நேரில் சந்திச்சு மோதற நிலையில் நான் இல்லே குரு. என் உத்தியோகம் அப்படி."

"எனக்கு தெரியும் மச்சான். அஞ்சலியை கண்டுபிடிக்கிற வேலையை என்கிட்ட வுட்டுரு."

"மணிவேல் சாதாரண ஆள் இல்லே. ரொம்ப பக்குவமா அவனை நீ ஹாண்டில் பண்ணணும். என் பேர் எந்த வகையிலேயும் வெளீல வ்ரக்கூடாது."

"அஞ்சலி மணிவேல்கிட்டே இன்னேரம் உன் பேரை சொல்லியிருப்பாளே!"

"அப்படி சொல்லியிருந்தா என் ரூட்டை எப்படி மாத்திக்கணும்னு எனக்குத் தெரியும்."

"கவலைப்படாம இங்கேயே இரு. இன்னிக்கு நைட்டுக்குள்ளே அஞ்சலிய இந்த படுக்கைக்கு கொண்டு வந்து சேர்த்திர்றேன்" என்று எழுந்தான் குரு.

குரு அப்படிச் சொன்னதும் சுந்தரின் மனசில் மலர்கள் விரிந்தன. பாடல்கள் புறப்பட்டன. எழுந்து நடனமாடத் தோன்றியது. அஞ்சலியின் சுகந்தம் அவன் மூக்கோரம் வந்தது.

"ஆனா..." என்று இழுத்தான் குரு.

"ஆனா என்னடா?"

"நான் அவளைச் சந்திக்கிற வரைக்கும் அஞ்சலி உயிரோட இருக்கணும்."

"டயத்தை வேஸ்ட் பண்ணாம கிளம்பு."

"அஞ்சலி, ஸ்டுடியோவிலிருந்து வாங்கிக்கிட்டு வந்த படங்கள் எங்கே இருக்கு?"

"என்கிட்டத்தான் இருக்கு."

"நான் பார்க்கக் கூடாதா?"

"ரொம்ப முக்கியமான படங்கள் குரு. காட்டறேன். பார்த்ததை வெளியில் சொல்லாதே."

சுந்தர் எழுந்து போய் பீரோவைத் திறந்து ஒரு கவரை எடுத்துக் கொண்டு வந்தான்.

படங்களை வெளியே எடுத்துப் பார்த்த குருவின் முகத்தில் ஆச்சரியம் பரவியது.

ஏழெட்டு வண்ணப் புகைப்படங்களில் டிஸ்கோ சாந்தி உடம்பை நெளித்து இடுப்பைத் திருகி கைகால்களை நீட்டி, குனிந்து, நிமிர்ந்து, சிரித்து, விரித்து, கவர்ச்சி குலுங்க நைட் கிளப் நடன மங்கை போல விதவிதமான போஸ்களில் காட்சி தந்தார்.

— தொடரும்

# சொல்! சொல்! என் உயிரே! 6

## PXP

சுந்தர் காண்பித்த வண்ணப் புகைப்படங்களை ஆச்சரியப்பார்வை பார்த்துவிட்டு குரு சொன்னான்.

"டிஸ்கோ சாந்தி! எங்க ஊர் நடிகை மச்சான். ஸ்டில்களைப் பார்த்தா மலையாள கே.எஸ். கோபாலகிருஷ்ணனின் புதுப்படம் மாதிரி தெரியுது."

"சினிமா ஸ்டில்ஸ் இல்லடா. மணிவேல் எடுத்தது. டிஸ்கோ சாந்தி மாதிரி உள்ள வேற பொண்ணு."

"எதுக்காக இத்தனை போஸ்களில் எடுத்திருக்கான்? பத்திரிகைகளுக்கு கொடுக்கறதுக்கா?"

"அப்படி ஒரு பொய்யை சொல்லித்தான் மணிவேல் படம் பிடிச்சிருக்கணும். அர்ஜுன் உத்தரவுப்படி இந்தப்படங்களை அவன் எடுத்திருக்கான்."

"அர்ஜுன் டிஸ்கோ ரசிகனா?"

"அவனுக்குத்தான் ரசிகைகள் இருக்காங்க. அவன் யாருக்கும் ரசிகன் இல்லே. ஒரு பயங்கரவாதி கலாரசிகனாக சாத்தியமில்லை."

"அர்ஜுனுக்கு இந்த படங்கள் எதுக்கு?"

"எல்லா படங்களையும் கூர்ந்து பார். ஒரு ஒற்றுமை தெரியுதான்னு பார்."

"தெரியுது மச்சான்."

"சொல்லு பார்ப்பம்."

"எல்லா படங்களிலும் இந்த ஒரே மாதிரியா சிரிச்சுக் கிட்டிருக்கு."

"நீ டியூப் லைட் குரு" என்ற சுந்தர் புகைப்படங்களை பரப்பி வைத்தான். ஒன்றை மேலே ஏற்றி வைத்தான். இன்னொன்றைக் கீழே இறக்கினான். நடுவில் இரண்டை வைத்தான். இடமொன்றும் வலமொன்றுமாக பாக்கி இரண்டு படங்களை வைக்க ஏறத்தாழ 'பிளஸ்' வடிவத்தை அந்த வண்ணப்படங்கள் காண்பித்தன.

"இப்ப பார்த்து சொல்லு. ஏதாச்சும் உன் கண்ணுக்கு தட்டுப்படுதா?"

"இல்லேடா."

"ஒரு பயங்கர நாசவேலைக்கு புளூ பிரிண்ட் இந்தப் படங்களில் உனக்கு தெரியலே? சென்னை மாநகரத்தை ஸ்தம்பிக்கச் செய்யும், செயலிழக்கச் செய்யும் ஒரு பிரம்மாண்டமான சதித்திட்டத்துக்கு இந்தப் படங்கள் கால்கோள் நாட்டியிருப்பது உன் கண்ணுக்கு புலப்படலே?"

"இல்லையே மச்சான்."

"என் போலீஸ் கண்ணுக்கும் உன் கண்ணுக்கும் அதான் வித்தியாசம். என் கண் மாடலை மட்டும் பார்க்கலே. ஒவ்வொரு படத்திலேயும் மாடலுக்கு பின்னால் தெரிகிற பாலங்களையும் பார்க்குது."

"பாலங்களா!"

"ஆமா. நல்லா பார். மணிவேல் பாலங்களைத்தான் படம் பிடிச்சிருக்கான். டிஸ்கோவை படம் பிடிக்கிறதுக்காக பாலங்களை படம்

பிடிக்கலே. பாலங்களுக்காக மாடலையும் படம் பிடிச்சிருக்கான்."

"ஆமா மச்சான்!" என்ற குரு அளவில்லாத ஆச்சரியத்துடன் படங்களை தீவிரமாக ஆராய்ந்தான். சுந்தர் பேசினான்.



"எதுக்காக இதையெல்லாம் படம் பிடிச்சிருக்கான்!"



காந்தியின் சமாதி டெல்லியில் இருக்கிறது. அன்னை கஸ்தூரி பாயின் சமாதி எங்கே இருக்கிறது தெரியுமா? புனாவில்.

நூறு ரூபாய்க்கு ஒரு ரேடியோவை வாங்கி, பத்து சதவீதம் அதிக விலை குறித்து, பின்னர் பத்து சதவீத தள்ளுபடி செய்து விற்றால் லாபமா? நஷ்டமா? லாபமும் இல்லை. நஷ்டமும் இல்லை என்று நீங்கள் விடை சொன்னால்... மன்னிக்கவும்... நீங்கள் சொல்வது தவறு. உண்மையில் நஷ்டம்தான் வரும். எப்படி? நூறு ரூபாய் பொருளை பத்து சதவிதம் விலை உயர்த்தினால் ரூ.110. அதில் பத்து சதவீதம் தள்ளுபடி என்றால் ரூ.11 ஆகிறது. ஆக, அதை 99 ரூபாய்க்கு விற்கவேண்டும். இதில் ஒரு ரூபாய் நஷ்டம்தானே?

—மாகி.

"முதுகெலும்பை நொறுக்க. இதயநாளத்தை அறுக்க. தொப்புள் கொடியை வெட்டிவிட..."

"பாலங்களை தகர்க்க பிளானா!" குருவின் கண்களில் பீதி.

"ஆமா. ஏககாலத்தில் இந்த பாலங்களைத் தகர்த்தா என்ன ஆகும்?"

"சென்னை தீவாகும். எப்படி ஒரே நேரத்தில் எல்லா பாலங்களையும் தகர்க்க முடியும்?"

"முடியும். பயங்கரவாதிகளால் முடியாதது எதுவும் கிடையாது."

"சீப்பை ஒளிச்சு வெச்சு கல்யாணத்தை நிறுத்திடலாம்னு நினைக்கிறியா சுந்தர்?"

"நீ என்ன சொல்றேன்னு எனக்குப் புரியுது. இந்தப் படங்களை பறிமுதல் செஞ்சிட்டதின் மூலம் அர்ஜுன் திட்டமிட்டிருக்கும் நாச வேலை தடுக்கப்பட்டுவிட்டதாக நினைக்கிறது மடத்தனம்தான். நான் அப்படி நினைக்கலே. தீவிர வேலைகளை இனிமேல்தான் ஆரம்பிக்கப்போறேன். அர்ஜுனின் ஒளிவிடத்தைக் கண்டுபிடிச்சு அவனை சந்திச்சுப் பேசப்போறேன்."

"அர்ஜுன் உயிரோடு இருந்தால்"

"உயிரோடு இருக்கான். ஆந்திர மாநிலத்தில் தமிழ்நாட்டின் எல்லையோரத்திலுள்ள புத்தூர் பக்கத்திலிருக்கிற மலைப்பகுதியில் அவன் மறைஞ்சிருக்கிறதா தகவல் கிடைச்சிருக்கு. தமிழ்நாட்டில் நீலகிரி தொட்டபெட்டா காடுகளில் இருக்கிறதாகவும் இன்னொரு ரகசியத் தகவல் வந்திருக்கு. இந்த மெட்ராசில் அவனுக்கு பங்களா இருப்பதாகவும் நட்சத்திர ஒட்டல்களில் அவன் நடமாட்டம் இருப்பதாகவும் எங்களுக்கு ரகசிய கடிதங்கள் வந்துக் கிட்டிருக்கு. எங்கள் உளவுத்துறையில் அவனை நான் சேர்த்துட்டேன்னா அப்புறம் இந்தமாதிரி நாச வேலைத் திட்டமெல்லாம் கருவிலேயே சிதைஞ்சிரும். எப்படியாவது அவனை சந்திச்சுப் பேசி அவன் கிட்டேயிருக்கிற அழிவுச் சக்தியை ஆக்க சக்தியா மாத்திருவேன். அதுதான் என் மிஷனின் நோக்கம்."

"அர்ஜுன் உயிரோடு இருந்தா மட்டும் உன் நோக்கம் நிறைவேறிடாது சுந்தர். அவனை சந்திக்கிறவரைக்கும் நீ உயிரோட இருக்கணுமே."

"என்னை காப்பாத்திக்க எனக்கு தெரியும்."

"நான் ஒரு ஐடியா சொல்லட்டுமா?"

"சொல்லு."

"ஒழுங்கு மரியாதையா டில்லிக்கு திரும்பிப்போ."

"டில்லிக்கு திரும்பிப் போவேன். வந்த காரியத்தை நல்லபடியா முடிச்சுட்டு அஞ்சலியோடு திரும்பிப் போவேன்."

"பாவம்டா அவ. உன்னோட ஆபத்தான வேலைகளுக்கு அவளை நீ பயன்படுத்தியிருக்கவே கூடாது. உங்க இலாகாவுக்குத்தான் மெட்ராசில் ஏகப்பட்ட ஒற்றர்கள் இருக்காங்களே. அவுங்களையெல்லாம் விட்டுட்டு...."

"ஐ'ம் ஸாரி குரு" என்று வருத்தம் தெரிவித்தான் சுந்தர்.

"எப்படியும் அவ உயிரோடு பத்திரமா இந்த மெட்ராசுக்குள்ளே இருந்தாள்னா நான் மீட்டுத்தந்துரு வேன். ஆனா மணிவேல் கண் நிரந்தரமா அவ மேலேயே இருக்கும். நீ பண்ணின வேலையினால் ஆயுசு பூராவும் அவ நிம்மதியில்லாம அச்சத்தோடுதான் வாழணும்."

"இந்தத் தடவை அவ கிடைச்சிட்டாள்னா அவளோட நிம்மதியான வாழ்க்கைக்கு நான் உத்தரவாதம்."

"சரி கிளம்பு"

"எங்கே?"

"மணிவேல் வீட்டுக்கு"

"நானுமா?"

"நீ வீட்டுக்குள்ளே வரவேண்டாம் மச்சான். வெளியே நில்லு. இந்த படங்களைகவரில் போட்டு எடுத்துக்கோ."

"எதுக்கு?"

"மணிவேல்கிட்டே கொடுக்கப் போறேன். படத்தைக் கொடுக்காம அஞ்சலியை அவன் கிட்டேயிருந்து மீட்க முடியாது."

"அஞ்சலியை அல்லி ஸ்டுடியோவுக்கு அனுப்பி வெச்சது யார்னு மணிவேல் கேட்பானே" என்று சுந்தர் கேட்டான்.

"கேட்பான். கட்டாயம் கேட்பான்"

"அதுக்கு என்ன சொல்லப் போறே?"

"அந்தக் கவலையெல்லாம் உனக்கு எதுக்கு? மணிவேல் பலவிதங்களில் என்கிட்ட மாட்டிக் கிட்டிருக்கான். பத்திரிகையில் ஒரு நியூஸ் அவனைப் பத்தி போட்டேன்னா குண்டர் சட்டத்தில் உள்ளே தூக்கிப் போட்டுருவாங்க. அஞ்சலிக்கும் உனக்கும் எந்த ஆபத்தும் எதிர்காலத்தில் வராதபடி அஞ்சலியை நான் மீட்டுத் தந்திர்றேன். சிக்கலான வேலைதான். முள்மேல் விழுந்த புடவையை எடுக்கற மாதிரி. இந்தக் காரியத்தை வெற்றிகரமா நான் முடிச்சப்பறம்தான் குரு யார்னு உனக்கு முழுசா தெரியும். அர்ஜுனுக்கு பதிலா குருநாதனை உளவுத்துறையில் சேர்த்துக்கலாம்னு உன மேலதிகாரிகளுக்கு நீ சிபாரிசு பண்ணுவே."



## என்ன செய்கிறார்?

கையில் தண்ணீர் பக்கெட்டை வைத்துக் கொண்டு லலிதா குமாரி (டிஸ்கோ சாந்தியின் தங்கை) ஏன் இந்த முழி முழிக்கிறார்....?

35 ம் பக்கம் பாருங்கள்

சுந்தர் நெகடிவ்களையும் படங்களையும் ஒரு கவரில் போட்டு குருவிடம் ஒப்படைத்தான்.

"இனிமே இது உனக்கு தேவையில்லையே" என்று குரு கேட்டான்.

"இது எதுக்கு? அர்ஜுனின் முக்கியமான நாசவேலைத் திட்டங்களில் ஒண்ணு நமக்கு தெரிஞ்சு

போச்சு. இனிமே இது தேவை யில்லே."

மழை கழுவிய நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலையில் குரு தன் ஃபியட்டை செலுத்தினான். பக்கத்தில் சுந்தர்.

குளிர்காற்று சுந்தரின் முகத்தில் சிலுசிலுத்தது. அவன் உள்ளத்தில் படபடப்பு. அஞ்சலி பத்திரமாக இருப்பாளா, உயிரோடு கிடைப்பாளா போன்ற கேள்விகள் அவனை உறுத்திக் கொண்டிருந்தன.

"குரு"

"என்னடா"

"ஒரு முக்கியமான விஷயத்தை உன்கிட்டே சொல்ல மறந்துட்டேன்"

"என்ன சொல்லு"

"நான் யார், என் தொழில் என்னங்கறதை அஞ்சலிகிட்டே எந்தக் காரணத்தைக் கொண்டும் நீ சொல்லிரக்கூடாது"

"சொல்லமாட்டேன். பயப்படாதே"

## நான்கு 'C' க்களில் அடங்கியுள்ள ரகசியம்!

எதையும் சாதிக்க கனவு காணும் மனிதன் அதை அடையும் ரகசியத்தைத் தெரிந்து கொண்டு விட்டால் கனவு நனவாகும். அந்த ரகசியம் நான்கு 'C'க்களில் இருக்கிறது.

அவை

curiosity .confidence

courage. constancy

இதில் மிக முக்கியமானது confi-dence".

சொன்னவர் - கார்ட்டூன் மேதை வால்ட் டிஸ்னி.

-பார்கவி

தேனாம்பேட்டை சிக்னலைக் கடந்த கார் எஸ்.ஐ.இ.டி. கல்லூரி அருகே இடமாகத் திரும்பி சிறிது ஓடி மீண்டும் திரும்பி வக்கீல் மணியின் பங்களா முன் நின்றது.

சுந்தர் கேட்டான். "நான் வண்டி யிலேயே இருக்கவா?"

"வேண்டாம். நீ மெதுவா நடந்து போய்க்கிட்டிரு"

"அஞ்சலி இந்த பங்களாவுக் குள்ளேயா இருக்கா?"

"யாருக்குத் தெரியும்? மணிவேல் கிட்டே பேசிப் பார்க்கிறேன்" என்ற குரு படங்கள் கொண்ட கவரை எடுத்து சட்டைக்குள் மறைத்து வைத்துக்கொண்டு இறங்கினான்.

"என்னை எங்கே நிற்கச் சொல்றே?"

"இதே ரோட்டின் அடுத்த முனை யில் நில்லுடா. ஒரு டிபார்ட்மென்ட் ஸ்டோரும் பக்கத்தில் ஒரு ரெஸ்டா ரன்ட்டும் இருக்கு. அங்கேயே நில்"

குரு பங்களாவின் கேட்டைத் திறந்து உள்ளே நுழைந்தான்.

சுந்தர் அந்த பங்களாவைப் பார்த்துக்கொண்டே நடந்தான். கடல்போன்ற பழையபாணி பங்களா. நிறைய பூச்செடிகள். பப்பாளிக் காய் கள் குலுங்கின.

காலையில் பெய்த பேய்மழை யினால் சில இடங்களில் கணுக்கால் அளவுக்கு தண்ணீர் தேங்கிக் கிடந்த தால் சுந்தர் பேன்ட்டை சுருட்டி மேலேற்றிவிட்டுக்கொண்டு திரும்பிப் பாராமல் நடந்தான்.

வானத்தில், வேரில்லாத மேகங் கள் நிம்மதியில்லாமல் இங்குமங்கு மான நகர்ந்தவாறிருந்தன.

குரு சொன்ன இடத்தை அடைந்து சுந்தர் காத்து நின்றான். நிமிடங்கள் விரைவாகக் கழிந்தோடிபோது அவனுக்குள் சந்தேகங்கள் அரும்பு கட்டின.

குரு காரியத்தை வெற்றிகரமாக முடித்து விடுவானா? அஞ்சலி பற்றி எனக்கு எதுவும் தெரியாது என்று மணிவேல் கையை விரித்துவிட்டால் என்ன செய்வது? உண்மையிலேயே

இந்த மணிவேல்தான் அவளைக் கடத்திச் சென்றிருப்பானா? குரு ஏடாகூடமாக எதையாவது செய்து காரியத்தைக் கெடுத்துவிடக்கூடாதே. அஞ்சலிக்கு தான் கடத்தப்பட்டதற்கு நான் வாங்கிவரச் சொன்ன புகைப் படங்கள்தான் காரணம் என்ற உண்மை தெரிந்துவிட்டால் அப்புறம் என்னிடம் எப்படி பழகுவாள்? அஞ்சலி இல்லாத வாழ்க்கை வெறிச் சோடிவிடுமே. அந்த வெறுமையை என்னால் சமாளிக்க முடியுமா?

கால் கடுக்கவே சுந்தர் ஓட்டலுக்குள் சென்று அமர்ந்தான். சாயா வரவழைத்துப் பருகினான். தம்மடித்தான். மீண்டும் வெளியே வந்து குரு வரும் திசையைப் பார்த்தான்.

ஏறத்தாழ இரண்டு மணிநேர காத்திருப்புக்குப் பிறகு பொறுமையை இழந்து மணிவேல் வீட்டுப் பக்கம் நடந்தான். வக்கீல் வீட்டு வாசலில் நின்ற குருவின் கார் காணாமல் போயிருந்தது.

மணிவேலை ஏற்றிக்கொண்டு வேறெங்காவது சென்றிருப்பானோ?

பொதுத் தொலைபேசியைத் தேடினான். கிடைக்கவில்லை. ஒரு மளிகைக் கடைக்குள் நுழைந்து எஸ்லோஸ்டோனுக்கு டயலைச் சுழற்றினான்.

"குரு சார் இங்கே இல்லையே" என்று குருவின் பத்திரிகை அலுவலகத்தைச் சேர்ந்த ஒருவர் பதில் சொன்னார்.

"வந்துட்டு வெளீல போயிட்டாரா?"

"காலையிலேயிருந்தே வரலே சார். நீங்க யார்?"

"வந்தா சுந்தர் போன் பண்ணினேன்னு சொல்லுங்க"

தொலைபேசியை வைத்துவிட்டு வெளியே வந்தான்.

குரு ஒருவேளை அஞ்சலியை மீட்டு வீட்டுக்குக் கொண்டுபோய் சேர்த்திருப்பானோ? குருவிடம் ஒரு சாவி இருக்கிறது..

ஆட்டோ பிடித்து விம்பிள்டன் கோர்ட் சென்றான்.. பத்தாவது மாடிக்கு போனான். வீடு பூட்டிக்

## பட்டத்தை இழந்த இளவரசன்





கிடந்தது.

திறந்து உள்ளே போனான். தலை வலித்ததால் இரண்டு ஆஸ்ப்ரோ வில்லைகளைப் போட்டு ஐஸ் வாட்டர் பருகினான். படுக்கையில் விழுந்து நீண்ட நேரம் புரண்டு கொண்டிருந் தான். தலையணையில் அஞ்சலி வாசனை. அவனையறியாமல் சிறிது நேரத்தில் உறங்கிவிட்டான்.

கனவுகள் அவனை நம்பமுடியாத விசித்திரமான 'உடோபியா'வுக்கு தூக்கிச்சென்று மாலை ஐந்து மணிக்கு மீண்டும் படுக்கையில் தொப்பென்று போட்டன.

கண்விழித்தபோது பசி வயிற்றைக் கிள்ளியது.

ஓட்டலுக்குச் சென்று சாப்பிட மன மில்லை. ரொட்டித் துண்டுகளை வெண்ணெய் தடவி வாட்டி ஜாம் தொட்டு கடித்தான். தேநீரில் பாலுக்கு பதிலாக எலுமிச்சம்பழ துண்டை வெட்டிப் போட்டு பரு கினான்.

வீட்டைப் பூட்டி வெளியே கிளம்பு வதற்கு முன் மீண்டும் ஒரு முறை குரு வுக்கு போன் செய்தான். 'எங்கேஜ்' சப்தம் வந்துகொண்டிருந்ததால் எரிச்சலுடன் வைத்துவிட்டு வெளி யேறினான். லிப்டில் இறங்கினான். உடனே ஆட்டோ கிடைத்தது.

மணிவேல் பங்களாவை ஆட்டோ கடந்து சென்றபோது பங்களாவுக்கு உள்ளேயும் வெளியேயும் பார்த்தான். குருவின் கார் கண்ணில் படவில்லை.

காலையில் காத்திருந்த இடத்தை அடைந்து ஒரு மணி நேரம் காத்து நின்றான். மாலைப் பத்திரிகை வாங்கிப் புரட்டினான். அஞ்சலி பற்றி எந்தச் செய்தியும் வராதது அவனுக்கு திருப்தியளித்தது.

டிபார்ட்மென்ட் ஸ்டோரில் இருந்த தொலைபேசியை நோக்கி நடந்தான்.

எல் லோஸ்டோன் லைனில் வந்தது. குருவே பேசினான்.

"காரியத்தை சக்ஸஸ் பண்ணிட் டேன் மச்சான்"

சுந்தரின் மனதில் உற்சாகம் பொங்கி தொண்டையை அடைத்தது.

"நிஜமாவா!"

"பின்னே பொய்யா சொல்றேன். அஞ்சலியை விம்பிள்டனில் விட்டுட்டு இப்பத்தான் வர்றேன். எங்கேயிருந்து பேசறே?"

# முதுகுவலி வராமலிருக்க...



பெரும்பாலான பெண்கள், அடிக்கடி முதுகுவலி போன்ற சின்னச் சின்ன அவஸ்தைகளுக்கு ஆளாக நேரிடுகிறது. ஏன் இப்படி? வீட்டு வேலைகளைச் செய்வதில் உள்ள கவனக் குறைவுகள்தான் காரணம். எதையும் முறைப்படி செய்தால் பிரச்னைகள் ஏற்படாது.

உதாரணமாக, தண்ணீர் பக்கெட்டை எப்படித் தூக்குவது?

அதைத்தான் லலித குமாரி செய்து காட்டுகிறார்.

இரண்டு கால்களுக்கு நடுவில் பக்கெட் இருப்பது போல் பார்த்துக் கொள்ளுங்கள். பக்கெட்டுக்கும் காலுக்கும் சுமார் ஒரு அடி தூரம் முழங்கால், இடை இரண்டையும்



வளைத்து கைப்பிடியைப் பிடியுங்கள்.

முழங்கால், இடையை பழைய நிலைக்குக் கொண்டு வாருங்கள் சுலபம்.

-படங்கள்: யோகா.

"நீ நிற்கச் சொன்ன இடத்திலேயே நின்னுக்கிட்டிருக்கேன்"

"நீ அங்கே இல்லையே"

"எப்ப பார்த்தே!"

"ஒரு அரைமணி நேரம் இருக்கும். நானும் அஞ்சலியும் அந்தப் பக்கமாத்தான் வந்தோம்."

"அஞ்சலிக்கு எல்லா உண்மைகளும் தெரிஞ்சிருச்சா?"

"கவலையேபடாதே. அவளுக்கு எதுவும் தெரியாது. மற்ற விஷயங்கள் நேரில் பேசிக்கலாம். போனில் எதுவும் கேக்காதே"

"அப்ப நான் நேரே விம்பிள்டன் போறேன்"

"போ. ஆனா அஞ்சலி அங்கே இருக்கமாட்டா. குளிச்சுட்டு பீச்சுக்குப் போகப்போறேன்னு சொன்னா. கடற்கரை காந்தி சிலைக்குப் பின்னால் அவள் வழக்கமா பொழுதைக் கழிக்கிற இடம்தான் உனக்கு தெரியுமே. அவசரமா பார்க்கணும்னா அங்கே போய் பார்."

வங்கக் கடலுக்கு மேலே நிலா வட்டமாக உதித்திருந்தது.

வானம் மேக ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு தெளிவாக இருந்தது. நட்சத்திரங்கள் ஜொலித்தன. 'தடால் தடால்' என்று அலைகள் மோதின.

நீர் விளிம்பின் ஓரம் அஞ்சலி கரங்களால் முழங்கால்களைக் கட்டிக் கொண்டு அமர்ந்திருந்தாள். தலை பக்கவாட்டில் திரும்பி கூந்தல் புருவங்களை மறைத்தபடி முகத்தைச் சுற்றிச் சொரிந்தது.

மழை கொட்டிய அதிகாலையிலிருந்து நடந்த நம்பமுடியாத சம்பவங்களை அஞ்சலி நினைத்துப் பார்த்தாள். குழப்பமாக இருந்தது. சுந்தரை உடனே பார்க்க வேண்டும் போல இருந்தது. அவனோடு செஸ் ஆட வேண்டும்போல இருந்தது. குரு சுந்தரை இங்கே அனுப்பிவைப்பதாக சொன்னானே. சுந்தர் இங்கே வருவானா? என்னைத் தேடிக்கொண்டு அவன் எங்கே சுற்றிக் கொண்டிருக்கிறான் என்று தெரியவில்லையே!

பாவம். என்னை அவன் பைத்தியமாக நேசிக்கிறான். நான்?

ஈரமணல் எழுப்பிய மிருதுவான காலடிச் சப்தத்தை மிகவும் நெருங்கி விட்ட பிறகுதான் அஞ்சலி கேட்டாள்.

-தொடரும்

# சொல் சொல் என் உயிரே...

Kt X P

7

கடலோரம் அமர்ந்திருந்த அஞ்சலி திரும்பிப் பார்ப்பதற்குள் ஒரு ஆண் கரம் அவள் தோள்மீது விரல்களைப் பதிக்க, கழுத்தைத் திருகிக்கொண்டு பின்பக்கமாக அண்ணாந்தாள். "சுந்தர்!" என்று சிரித்தாள். பல்வரிசை நிலா வெளிச்சத்தில் வைரம் போல சுடர் வெட்டியது.

"எங்கே போயிட்டே அஞ்சலி! உன்னை எங்கேயெல்லாம் தேடறது!"

"நிஜமாலுமே என்னை தேடினியா நீ? ஏம்பா பொய்யெல்லாம் பேசறே?"

"குருவைக் கேட்டுப் பார். நான் எப்படித்துடிச்சேன்னு சொல்வான்."

"குரு உனக்கு காண்டக்ட் சர்டிபிகேட் குடுப்பான். நீ அவனுக்கு குடுப்பே. ரெண்டு பேரும் அஞ்சலியைத் தேடறது ஒரே ஒரு காரியத்துக்காகத்தான்."

"ஐ'ம் ஸாரி. குருவையும் என்னையும் ஒரே லிஸ்டில் சேர்த்திராதே. நாலு மசாம்தான் நாம பழகியிருக்கோம்."

"நாலு நாள் போதும் ஆணும் பெண்ணும் ஒருத்தரையொருத்தர் புரிஞ்சுக்கறதுக்கு."

"சரி, காலையில் என்ன நடந்துச்சு?"

"நாவல்களிலும் சினிமாக்களிலும் நடக்கிற மாதிரி நடத்துச்சுப்பா."

"நான் பாத்ரூமுக்குள் நுழைஞ்சு கதவைச் சாத்திட்டு ஷேவ் பண்ணிக்கிட்டிருந்தேன். நீ நெஞ்சில் டவல்



"சுத்திக்கிட்டு குளிக்க தயாரா ஹாலில் நின்னுக்கிட்டிருந்தே. அப்புறம்?"

அப்புறம் நடந்த விசித்திர சம்பவத்தை அஞ்சலி விவரிக்க ஆரம்பித்தாள்-

5வது வாரம் கூப்பன் என்று சொல்லி 7வது வாரம் தள்ளியமைக்கு பொறுத்துக் கொள்ளவும். மறக்காமல் இந்த இதழில் கூப்பன்



விம்பிள்டன் கோர்ட். பத்தாவது மாடி.

காலை நேர மழை காற்றுடன் தகாத உறவு வைத்துக்கொண்டு பேயாட்டம் போட்டது.

சுந்தர் குளியலறைக்குள் மறைந்து விட்டான்.

அஞ்சலி நெஞ்சில் டவல் கட்டிக் கொண்டு குளியல் தொட்டிக்குள் போட நறுமணத் தைல உருண்டை களை மேசை டிராயருக்குள்ளிருந்து எடுத்தாள்.

கண்ணைப் பறிக்கும் மின்னல்கள் வெனீஷியன் ப்ளைண்ட்சில் வெளிச்ச வரிகளை விட்டு விட்டுக் காண்பித் தன. தொலை தூர பீரங்கித் தாக்கு தல் போல இடி முழக்கங்கள்.

ப்ர்ர்ர்... ப்ர்ர்ர்...

பஸ்ஸர் கூப்பிட்டது.

அஞ்சலி வாசலுக்கு விரைந்தாள். யாராக இருக்கும் இந்த மழை வேளையில்!

கதவிலிருந்த 'மந்திரக்கண்'ணில் ஒற்றை விழியைப் பதித்தாள்.

வெளியில் யாரும் தென்பட வில்லை. காரிடார் இருட்டு.

ப்ர்ர்ர்... ப்ர்ர்ர்...

மீண்டும் பஸ்ஸர்.




"உனக்கு லோன் தரணும்னா யாரு ஜாமீன் போடுவாங்க....?"

"நம்ம ஊர் இன்ஸ்பெக்டர் கொடுப்பாங்க சார்!"

–குத்தாலம் அபிதா

கல்லூரி விடுதியில் அஞ்சலி மட்டும் தன் மாடியறைக்கு சொந்த செலவில் ஒரு பஸ்ஸர் வாங்கி பொருத்தி வைத்திருந்தாள். அந்த பஸ்ஸரும் இதே தொண்டையில்தான் கூப்பிடும். அதே விடுதியின் இன் னொரு அறையிலிருந்த வந்தனா வுக்கு அஞ்சலி அறையின் பஸ்ஸரை அழுத்துவதுதான் பொழுதுபோக்கு. வந்தனா பெங்களூர்க்காரி. மகா குறும்புக்காரி. மாடி ஜன்னல் வழி யாக குழாயைப் பிடித்துக்கொண்டு இறங்கி நினைத்த நேரத்தில் வார்ட னுக்கும், வாட்ச்மேனுக்கும் கடுக்காய் கொடுத்துவிட்டு விடுதியை விட்டுத் தப்பிக்க அஞ்சலிக்கு கற்றுத் தந்தவள் அந்த வந்தனாதான். ஞாயிறு மத்தியானங்களில் அஞ்சலி கண் ணயரும்போது வந்தனா பஸ்ஸரை அழுத்தி, அஞ்சலி தடபுடவென்று எழுந்து கதவைத் திறக்கும்போது தூணுக்குப் பின்னே ஓடி ஒளிந்து கொள்வாள்.

அந்தக் காலமெல்லாம் போய் விட்டது. இனி யார் வந்தனா போல் என்னோடு விளையாடப் போகிறார் கள் என்று ஏக்கத்தோடு எண்ணிய அஞ்சலி பாதுகாப்புச் சங்கிலியைக் கோர்த்துவிட்டு கதவைத் திறந்தாள். இடுக்கில் பார்த்தாள்.

மஞ்சள் சுடிதாரின் ஓரம் தெரிந்தது.

"யார் வேணும்?" என்றாள் அஞ்சலி.

மஞ்சள் சுடிதார் சற்று நகர்ந்து வாசலுக்கு நேராக வந்தது.

மாணவி போலத் தோன்றிய அந்தப் பெண் சிவப்பாக இருந்தாள். கீழ் உதட்டை ஒட்டி இடது கன்னத் தில் முழு உளுந்தின் அளவில் கருப் பாக மரு. பிரவுன் தோல் பை பஸ் கண்டக்டர் போல. அஞ்சலிக்கு அறிமுகமில்லாத முகம்.

"யார் வேணும்?" வீட்டுக்குள் ளிருந்தவாறே அஞ்சலி கேள்வியைப் புதுப்பித்தாள்.

"எக்ஸ்க்யூஸ் மீ. இந்த அட்ரஸ் எங்கே இருக்கு?"

சுடிதாரின் கையில் துண்டுச் சீட்டைப் பார்த்த அஞ்சலி பாது காப்புச் சங்கிலியை நீக்கிவிட்டு வாசலைத் தாண்டினாள். சுடிதாருக்கு துணையாக ஒரு டெனிம் டிரவுசர் சூட் வந்திருந்தது அஞ்சலிக்கு அப்போதுதான் தெரிந்தது.

டெனிம் அணிந்தவள் மாநிறம். பூப்போட்ட மழைக்கோட் அவள் கரத்திலிருந்து வழிந்தது.

அஞ்சலி சீட்டை வாங்கி அதில் கிறுக்கப்பட்டிருந்த முகவரியைப் படிக்க முனைந்தபோது சீட்டைக் கொடுத்தவள் சரேலென்று வாயிற் கதவை இழுத்து 'டொப்'பென்று அடைத்து, கதவிலிருந்த குமிழை 'சிக்'கென்று பற்றிக்கொண்டாள். அஞ்சலி உள்ளே ஓடிவிடாதபடி தடுக்கவும், உள்ளேயிருப்பவர்களை வெளியே வரவிடாதபடி தடுக்கவும் அவள் அப்படிச் செய்தாள். கைத் துப்பாக்கியின் வாய் அஞ்சலியின் விலாவை முத்தமிட்டது. துப்பாக் கியை அழுத்திய டெனிம் மங்கை, "வாயைத் திறந்தே இதுவும் வாயைத் திறக்கும். எங்களோடு கோவாப்ப ரேட் பண்ணலேன்னா உன் ஆயுசு இந்த வினாடியே முடிஞ்சுரும். வெளியே மழை பெய்யுது. நனைஞ்சா உடம்புக்கு ஒத்துக்காது. இதை மாட்டிக்கிட்டு சுறுசுறுப்பா எங்ககூட நட" என்றாள்.

அதிரடித் தாக்குதலால் அஞ்சலி ஊமையாகிவிடவே கதவை இழுத்துப் பிடித்துக்கொண்டிருந்த சுடிதார்க்காரி மழைக் கோட்டையும் குல்லாவையும் அஞ்சலிக்கு அணிவித்தாள்.

இரண்டு பெண்களும் அஞ்சலியின் இடது வலது கரங்களை பற்றிக் கொண்டு அவளை லிப்ட் பக்கம் தள்ளிச் சென்றனர்.

"நீங்க கூப்பிடற இடத்துக்கு சத்தம் போடாம வர்றேன். நீங்க யார்னு மட்டும் சொல்லிடுங்க."

அஞ்சலியின் வார்த்தைகளை அவர்கள் காதில் போட்டுக்கொண்ட

## தங்க மோதிரத் தொடர்கதை
## சொல் சொல் என் உயிரே!

தொடர்கதையை எழுதும் எழுத்தாளர் யார் என்பதை கண்டு பிடித்து விட்டீர்களா? இங்கே உள்ள கூப்பனை நிறைவு செய்து அனுப்புங்கள். சரியான விடையைக் கூறியிருப்ப வருக்கு தங்க மோதிரம் பரிசு உண்டு. அதிர்ஷ்டசாலிகள் குலுக்கல் மூலம் தேர்ந்து எடுக்கப்படுவார்கள். சரியான விடை வரும்வரை அவ்வப் போது இந்த கூப்பன் வெளிவரும்.

1) தொடர்கதையை எழுதும் எழுத்தாளர் யார்?

..............................

2) எழுத்தாளர் இவர்தானென்று கண்டுபிடிக்க நீங்கள் கையாண்ட வழி (ஓரிருவரிகளில்)

..............................
..............................
..............................
..............................

3) கண்டுபிடித்தவர் பெயரும் முகவரியும்..............................

..............................
..............................
..............................
..............................

கூப்பனை குங்குமம் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

மாதிரித் தெரியவில்லை. லிப்ட் பூமிக்கு இறங்கியது.

அழுக்குத் துணியால் போர்த்திக் கொண்டு நாலைந்து பேர் வராந்தா வில் குந்தியிருந்தனர். மழை மூர்க் கத்தனமாக பின்னியெடுத்தது. கடைகள் மூடிக்கிடந்தன.

வராந்தா ஓரம் பச்சை அம்பா சடர் கருப்புக் கண்ணாடியை மேலேற்றிவிட்டுக்கொண்டு நின்றது. அஞ்சலி காரின் எண்ணை பார்க்க முயன்றாள். முடியவில்லை.

பின் 'சீட்'டுக்குள் திணிக்கப்பட்



அந்தப் பங்களாவில் ஏப்ரல் 1-ம் தேதி அன்று ஒரு பெரிய பார்ட்டி நடந்தது. லேடீஸ் கிளப் தலைவி ஸ்வர்ணலதாவின் நண்பிகள் ஏகமாய்க் குவிந்து விட்டனர். ஒயினைப் பருகியபடி நண்பிகளுடன் உல்லாசமாய்ப் பேசிக்கொண்டிருந்தாள் ஸ்வர்ணலதா. - திடீரென்று வீட்டினுள்ளிருந்து அவளின் ஆறு வயதுப் பெண் ஓடி வந்தாள்.

"அம்மா.... அம்மா பாரேன். யாரோ ஒரு ஆசாமி நம்ப வீட்டு வேலைக்காரி பத்மாவை சமையற்கட்டிற்குள் இழுத்துக்கொண்டு போய் அவளைக் கட்டிப் பிடித்து கிஸ் அடிச்சிண்டிருக்கான்" என்று கத்தினாள்.

"அடப்பாவி!" என்று எழுந்து உள்ளே போகத் திரும்பியவளைப் பார்த்துப் பெண் சொன்னாள்.

"அம்மா நீ ஒண்ணும் போக வேண்டாம். ஏப்ரல் ஃபூல்! அது யாரோ ஆசாமி இல்லை! அப்பாதான்!"

விகடகவி



டாள்.

அவளுக்கு இருபுறமும் சுடிதாரும் துப்பாக்கிக்காரியும்.

காரைச் செலுத்திய பெண் வட்டமாக தொப்பியணிந்திருந்தாள்.

கொட்டும் மழையில் மழை நீரைப் பீய்ச்சியடித்தவாறு கிளம்பிய கார் நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலையில் பறந்தது.

அஞ்சலியின் உள்ளம் அச்சத்தால் படபடத்தது.

வைப்பர் கண்ணாடி மீது பரபரப்புடன் இங்குமங்குமாக ஆடி நீரை வழித்தெறிந்தது.

மழையின் அடர்த்தியில் கார் ஓடும் திசையை அஞ்சலியால் அனுமானிக்க முடியவில்லை.

"என்னை எங்கே கொண்டு போறீங்க? நீங்களெல்லாம் யார்? நான் என்ன தப்பு செஞ்சேன்?"

- அஞ்சலி கேள்விமேல் கேள்வி எழுப்பிக் கொண்டேயிருந்தாள்.

காரிலிருந்த ஏனைய மூவரும் செவிட்டு மடந்தைகளாக அமர்ந்திருந்தனர். துப்பாக்கியின் வாய் அவள் விலாவை அழுத்தியவண்ணமிருந்தது.

இந்தப் பக்கம் கட்டிடங்களே இல்லையே! வானம் அழுக்கு நிறமாக தரைவரை இறங்கியிருக்கிறதே! கடற்கரைச் சாலையா இது?

அஞ்சலி குழம்பிக்கொண்டிருந்த போது தொடையில் 'நறுக்'கென்று கட்டெறும்பு கடித்த மாதிரி இருந்தது. மறுகணம் அவள் பார்வை மங்கி, மூடுபனிக்குள் மூழ்க ஆரம்பித்தாள்.

கார் இடமும், வலமும் விலகி, வெகுதூரம் ஓடி ஒரு இடத்தில் நின்றது.

அஞ்சலி அரை மயக்கத்தில்.

கைத்தாங்கலாக அவளை இறக்கினர்.

ஒரு மஞ்சள் கட்டிடத்தின் வெளிப்பக்கமிருந்த மாடிப்படியில் அவளை ஏற்றினர்.

ஒரு படுக்கையறைக்குள் அஞ்சலி நின்றாள். பைசா நகரத்துக் கோபுரம்

போல. அவள் கீழே சாய்ந்துவிடாமல் ஒருத்தி பிடித்துக்கொள்ள, மற்றொருத்தி மழைக்கோட்டுக்குள்ளிருந்து அஞ்சலியை விடுவித்தாள்.

ஜன்னலில் கர்ட்டன் படபடத்தது. 'மடார் மடாரெ'ன்று அலையடிக்கும் ஓசை அஞ்சலிக்கு கேட்டது. அவள் உடம்பில் மிச்சமிருந்த டவலை ஒருத்தி உரித்தெறிந்தாள்.

வெற்று உடம்புடன் நின்ற அஞ்சலியின் மீது சிலீரென்ற மழைக் காற்று ஐஸ் துகள்களை வாரியிறைக்க அஞ்சலி நடுங்கினாள். அவள் தலைவழியாக இறக்கப்பட்ட ஒரு லுங்கி இடுப்பில் கட்டப்பட்டது. ஒரு ஜிப்பா மாட்டிவிடப்பட்டது.

அஞ்சலியின் தலை சுழன்று தோள் பக்கம் சரிய, படுக்கையில் உருட்டிவிடப்பட்டாள். வெளிப் பக்கம் தாழிடும் சப்தம். சாவியின் சிணுங்கல். படிக்கட்டில் பாதங்கள் 'தபதப'வென்று இறங்கிச் செல்லும் ஓசை.

அஞ்சலி விழிகளைத் திறக்க முயன்றாள். அறையில் யாரும் இருக்கிற மாதிரித் தெரியவில்லை. எழுந்து நிற்க முயன்று தோல்வியடைந்து படுக்கையில் மல்லாக்கச் சாய...

எங்கோ பறக்க ஆரம்பித்தாள், குதிரையில். அவளுக்குப் பழக்கப்பட்ட குதிரையில். அது நாலு கால் பாய்ச்சலில் ஓடி வான மண்டலத்துக்கு எகிறியது. குதிரையில் பறந்தவாறே ஜாவ்லின் ஈட்டிகளை எறிந்தாள். தடை தாண்டி ஓடி பி. டி. உஷாவின் கையிலிருந்த தங்கக் கோப்பையைப் பிடித்து இழுத்தாள். பாட்மிண்டன் ஆடினாள். 'சுமங்கலி'யில் 'ரெஸிபி' கத்தரித்து எண்ணெய் காய்ந்ததும் பொடிப் பொடியாக வெங்காயத்தை சிவக்க வதக்கி, அரைத்து வைத்த மசாலா விழுதைக் கொட்டினாள். லாலிபாப் உறிஞ்சினாள். எனக்கும் முனபக்கம் கொக்கி வெச்ச பிரா வாங்கிக் குடும்மா. சீ! பால் குடுக்கற அம்மாவா நீ? 'தேவையில்லாத ரோமத்தை உடம்பி



" ஏன் சோகமா இருக்கே?"

"நேத்து ராத்திரி என் டிரைவர் ஓடிப்போயிட்டான்.!"

"அதற்காகவா இவ்வளவு சோகம்?"

" ஓடினவன் கதையில வர்ற மாதிரி என் பெண்டாட்டியையும் இழுத்துக் கொண்டு ஓடலியே!"

'விகடகவி

லிருந்து அகற்ற என்னுடைய கிரீமே சிறந்தது' என்று சுந்தர் ஒரு சிறிய அட்டைப் பெட்டியை நீட்டினான். வந்தனா, ஷிபானி சர்மா, அஞ்சலி மூவரும் விடுதி ஜன்னல் வழியாக இருட்டில் இறங்கினர். வந்தனா டார்ச் அடிக்க, அஞ்சலி கொய்யா மரத்தில் ஏறி குஷியாக மரத்தை மொட்டையடித்தாள். குருவும், சுந்தரும் ஆளுக்கொரு கொய்யாக் கனியை எடுத்துக் கடிக்க... 'ஆ! வலிக்குதுடா விடுங்கடா' என்று அஞ்சலி அலறினாள். அஞ்சலி! அஞ்சலி! என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

மங்கிய பார்வை கொஞ்சம் கொஞ்சமாக தெளிவடைந்தது.

படுக்கையருகே வளர்ந்திருந்த கொய்யா மரம் குருவாக மாறியது.

"குரு!" என்றாள் அஞ்சலி. உடம்பின்மீது 'ரோட் ரோலர்' ஏறியதைப் போல வலி.

குனிந்து அவள் தோளைப் பற்றிய குரு. "என்ன அஞ்சலி! எப்படி இருக்கே? ஆபத்து ஒண்ணும் இல்லையே?" என்றான் ஆதரவாக.

"நான்... எங்கே... இருக்கேன்?"

"எழுந்திரு. முதலில் இந்த இடத்தை விட்டுப் போயிரலாம்."

"எங்கே கூப்பிடறே?"

"வீட்டுக்கு?"

"இது யார் வீடு?"

"தெரியாது."

"எந்த இடம் இது?"

"திருவான்மியூர்."

"எப்படி இங்கே வந்தேன்?"

"வா சொல்றேன்."

அஞ்சலி எழுந்து நிற்க குரு உதவினான்.

மாலை வெயிலில் குரு தன் ஃபியட்டை விரட்டினான். சாலையோரம் டீக்கடையருகே நிறுத்தி இரண்டு டீ எடுத்து வரச் சொன்னான்.

சூடான தேநீர் அஞ்சலியின் தொண்டைக்குள் சென்றதும் மயக்கம் தெளிந்தது. தன் லுங்கியையும், சட்டையையும் தொட்டுப் பார்த்தவள், "யார் இதையெல்லாம் எனக்கு போட்டுவிட்டாங்க?" என்றாள்.

"காலையில் விம்பிளடனிலிருந்து உன்னைக் கடத்திட்டு வந்தவங்க."

அஞ்சலிக்கு அப்போதுதான் யோசிக்கும் சக்தி கிடைத்தது.

காலையில் வீட்டு வாசலுக்கு வந்த இரண்டு பெண்களும் அவளுடைய மனத்திரையில் தோன்றினர்.

"யார் அவங்க? எதுக்காக என்னைத் துப்பாக்கி முனையில் கடத்திட்டுப் போனாங்க?"

"ஒரு தப்பு நடந்து போச்சு அஞ்சலி. ஒரு கடத்தல் கோஷ்டி தங்கக் கடத்தலுக்காக ஒரு பெண்ணை சிங்கப்பூருக்கு அனுப்பியிருக்கு. அந்தப் பெண் சிங்கப்பூர் போயிட்டு போன வாரம் மெட்ராஸ் திரும்பி வந்துட்டா. ஆனா ஏர்போர்ட்டில் இறங்கினவ தங்க பிஸ்கெட்டுகளோடு காணாமப் போயிட்டா. அந்தப் பெண் உன்னை மாதிரியே இருக்கணும்னு நினைக்கிறேன். கடத்தல் கோஷ்டிக்காரங்க அந்தப் பெண்ணை மெட்ராஸ் பூராவும் வலைவீசித் தேடி கடைசியில் உன்னைத் தூக்கிட்டுப் போயிட்டாங்க. நல்லவேளையா அந்தக் கடத்தல் மன்னனோட ஃப்ரெண்டு எனக்குத் தெரிஞ்சவனா இருந்ததினால் உன்னை பத்திரமா மீட்க முடிஞ்சுது."

"போலீஸ் கம்ப்ளெய்ண்ட் குடுத்திரலாமா குரு?"

"வேண்டாம் அஞ்சலி."

"ஏன்?"

"தவறுதலா பிடிச்சிட்டுப் போயிட்டோம்னு சம்பந்தப்பட்டவங்க 'ஸாரி' சொல்லிட்டாங்க. இந்த விஷயத்தை இத்தோடு டிராப் பண்றது நல்லதுன்னு எனக்கு தோணுது. பிரமுகர்களின் பேராதரவோடு அந்த கோஷ்டி செயல்படுது. மலையோடு மோதினா நம்ம தலைதான் நொறுங்கும். உனக்கு ஆபத்து எதுவும் ஏற்படாததினால் நடந்ததை வேடிக்கையான கனவா நினைச்சு மறந்துர்றதுதான் நல்லது. கட்டின டவலோடு நீ



"வாழ்க்கைல வெற்றி பெற்ற ஒவ்வொரு ஆணுக்கும் பின்னால ஒரு பெண் இருக்கிறான்னு சொல்றாங்களே. உங்க கருத்து என்ன குருவே?"

"வாழ்க்கைல தோல்வி அடைந்த ஒவ்வொரு ஆணுக்கும் பின்னால் ஒரு சின்ன வீடு இருக்கறதுன்றதுதான் சிஷ்யா. என்னோட கருத்து!"

–வெ. சீதாராமன்

காணாம போயிட்டதனால சுந்தர் சாப்பிடாம கொள்ளாம தவியா தவிச்சுக்கிட்டிருக்கான்..."

"மறுபடியும் அந்த கடத்தல் காரங்க என்னைத் தேடி வரமாட்டாங்களே?"

"வரமாட்டாங்க. அதுக்கு நான் காரன்ட்டீ."

**அ**ஞ்சலி சொல்லி முடித்தபோது சுந்தரின் மனம் குருநாதனுக்கு கோடி நன்றிகளை கூடை கூடையாக வாரி வழங்கியது.

குரு எவ்வளவு துணிச்சலாக சாதுரியமாக காரியங்களை நிறை வேற்றியிருக்கிறான்! பயங்கரவாதி அர்ஜுனின் வலதுகரமான மணி வேலின் பிடியிலிருந்து இவளையும் பத்திரமாக மீட்டு... என்னையும் காட்டிக் கொடுக்காமல் பொய்களை சரளமாகச் சொல்லி இவளை நம்ப வைத்து... சுபர்ப்டா குரு!"

"குரு இஸ் ரியலி கிரேட்" என்றான் சுந்தர்.

"படுக்கையிலும்கூட. ஹி இஸ் எ கிரேட் லவர்" என்றாள் அஞ்சலி.

"அப்புறம் ஏன் விவாகரத்து?"

"காரணம் இருக்கு."

"என்ன காரணம் சொல்?"

அஞ்சலி மௌனமாக நிலவின் பக்கம் முகத்தைத் திருப்பினாள்.

சுந்தரின் மனம் குருவிடம் ஓடியது.

அஞ்சலியை மீட்கும் விஷயத்தில் குரு சர்வ ஜாக்கிரதையுடன் செயல் பட்டிருக்கிறான். அவன் மனசு வைத்தால் மணிவேல் மூலமாக அர் ஜுனின் இருப்பிடத்தைக் கண்டு பிடித்துவிட வாய்ப்பு இருக்கிறது. விளையாட்டுத்தனமில்லாமல் குரு ஒழுங்காக உதவினால் என் மிஷன் விரைவிலேயே வெற்றியடையும். குரு உதவுவானா?"

அஞ்சலியின் விரல் ஈரமணலில் ஏதோ கிறுக்கியது.

"வாயால் சொல்ல விருப்பமில் லேன்னா எழுதிக் காட்டு" என்றான் சுந்தர்.

–தொடரும்



"டார்லிங்!... என்னைத் திருமணம் செய்து கொள்வாயா? நான் ஒன்றும் பெரிய ஆணழகன் இல்லைதான். இருந்தாலும்..."

"பரவாயில்லை. அதனால் என்ன? முக்காவல்வாசி நேரம் நீங்கள் ஆபீசில்தானே இருக்கப் போகிறீர்கள்?"

விகடகவி

# சொல்! சொல்! என் உயிரே!

B-Q3

கருமேகத்தின் அணைப்புக்குள் நிலவு மூழ்கி மறைய, சமுத்திர அலைகளின் ஜரிகை விளிம்புகள் மினுமினுப்பை பறிகொடுத்தன.

சுழன்றுகொண்டிருந்த கலங்கரை விளக்கத்தின் ஒளிக்கற்றை முன்னிலும் பிரகாசமடைந்தது.

ஈரமணலில் கிறுக்கிக்கொண்டிருந்த அஞ்சலியின் கரத்தை சுந்தர் பிடித்தான். சூடாக இருந்தது.

"ஜுரமா!" என்று அவள் நெற்றியில் புறங்கையைப் பதித்தான்.

"உன் கைதான் குளிர்ந்திருக்கு" என்றாள் அஞ்சலி.

"நான் கேட்டதுக்கு பதில் வரலியே?"

"எங்க மணமுறிவுக்குக் காரணம் உண்மையிலேயே உனக்குத் தெரியாதா?"

"தெரியாது."

"குரு சொல்லலியா?"

"ம் ஊஹூம்."

"பொய் சொல்லாதே."

"உண்மையான காரணத்தை குரு என்கிட்டே சொல்லலே. 'ஒருத்தரையொருத்தர் நாங்க அடிமைப்படுத்திக்க விரும்பலே. அதனால் நெறிமன்றத்தின் படியேறி கல்யாணத்தை கத்தரிச்சிட்டோம்'னான்."

"வேறே காரணம் எதுவும் அவன் சொல்லலியா?"

"நீதான் சொல்லணும்."

"ஜாதியும் வரதட்சணையும் ஒழியணும்னு இன்னும் ஆயிரம் வருஷத்துக்கு நம்ம ஜனங்க மைக் பிடிச்சு, கோலி சோடா பிடிச்சு கூச்சல் போட்டுக்கிட்டிருப்பாங்களே தவிர ஒழிக்க மாட்டாங்க. ஒழிக்கவே முடியாது. ரெண்டையும் ஒழிக்க ஒரே வழி கல்யாணம்ங்கற கொடுமையான பழக்கத்தை ஒழிக்கறதுதான்னு எங்களுக்கு தோணுச்சு. உலகத்துக்கு முன்மாதிரியா நாங்க ஒழிச்சுக் கட்டிட்டோம்."

"ரியல் காக் அண்ட் புல் ஸ்டஃப்! உண்மையான காரணம் உங்க ரெண்டு பேர் வாயிலேயிருந்தும் வராது."

"குரு ஆப்த நண்பன்ங்கறே. அவனைக் கேட்க வேண்டியதுதானே உண்மையான காரணம் என்னன்னு."

"அவன் உன்கிட்டே கேட்கச் சொல்றான். நாலு மாசமா ஒரே ஃப்ளாட்டில் ஒரே படுக்கையில் அவளோடு வாழ்ந்துக்கிட்டிருக்கே. அவளைக் கேட்க வேண்டியதுதானேங்கறான்."

"ஒரு பெண்ணுக்கு முத்தம் கொடுக்கறதுக்கு அவ ஜாதகம் தேவையா? பெண்ணின் பழைய நாட்களைக் கிளறாம பழகினால்தான் ஆணுக்கு உண்மையான திரில் கிடைக்கும் சுந்தர். அதே மாதிரி ஒரு பெண் தன் ஆணின் அந்தரங்க

களைத் தெரிஞ்சுக்காத வரைக்கும் தான் எக்ஸைட்மெண்ட்டும் திரில்லும். ரயில் எஞ்சினை வாயைப் பிளந்து பார்க்கிற பச்சைக் குழந்தைக்கு கிடைக்கிற திரில் உனக்கும் எனக்கும் கிடைக்கணும்னா நாம ரெண்டு பேரும் ஒருத்தரையொருத்தர் முழுசா தெரிஞ்சுக்கக் கூடாது. அந்தத் திரில்லை இழக்க விரும்பாததினால் தான் உன்னைப் பற்றி அதிகமா நான் விசாரிக்கலே. விசாரிச்சேனா?"

"இல்லே."

"என்னைப்பத்தியும் அதிகமா சொல்லிக்கலே. திருமண ஆசையை என் மனசில் முதன்முதலா வதைச்சவன் குரு. திருமண அமைப்பையே வெறுக்கும்படி செஞ்சவனும் அவன் தான். பாஸ்ட் இஸ் பாஸ்ட். இறந்த காலம் தப்புகள் நிறைஞ்சது. அந்தப் பழைய தப்புகளுக்கெல்லாம் முடிவு கட்டியாச்சு. இனனிக்கு இந்த நமிஷத்தில் செய்றதெல்லாம் புதுத் தப்புகள்" என்றுவிட்டு சிரித்தாள்

"எங்கேயோ இடிக்கிற மாதிரி இருக்கே..."

"கிளம்பலாம் சுந்தர். தலை வலிக்குது."

"என்கூட பேசினதினாலயா?"

"குளிர் காற்றில் ரொம்ப நேரம் உட்கார்ந்துட்டோம்" என்றாள். குளிரலையினால் அவளுடைய நரம்பு மண்டலம் தாக்கப்பட்டு அவளுடைய தோள்கள் லேசாக வெட்டிக் கொண்டன. முகம் பனிக் காற்றில் நடுங்கும் பட்டு ரோஜாவாய் நடுங்கியது.

"மழை நேரத்தில்பீச் பக்கம் வரக்கூடாது" என்றான் சுந்தர்.

"எல்லா காலத்திலேயும் நான் இங்கே வருவேன். எனக்கு தன்னம்பிக்கை தர்றதே இந்த சமுத்திரம் தான். மனசில் தொய்வு ஏற்பட்டா, எதையும் தீர்மானிக்க முடியாத குழப்பம் ஏற்பட்டா இந்தக் கடற்கரை

8

லிப்ஸ்டிக் தயாரிப்பதற்கு பயன்படுத்தப்படும் பொருள்களில் ஒன்று – மீன் செதில்கள்! இதிலிருந்துதான் அந்த மினுமினுப்பு கிடைக்கிறது.

–முருகு

என்னை இழுத்துரும். இங்கே ஓடி வந்துருவேன். கண் கொள்ளாமப் பரவிக் கிடக்கும் நீர்ப்பரப்பை பார்த்ததும் ஆச்சரியம், பயம், தைரியம், மகிழ்ச்சியெல்லாம் எனக்கு ஏற்படும். நீர் மட்டத்தை அடிவானத்தில் பார்த்துக்கிட்டே கடல்காற்றில் அமைதியா நடப்பேன். மௌன மொழியால் கடலோடு பேசுவேன். கடலும் என்னோடு பேசும். உயிர்த் துடிப்புள்ள என்னைப் புரிஞ்சுக்கக் கூடிய மானிட உருவமாத்தான் கடல் எனக்கு எப்பவும் தோணும். கடற்கரையிலிருந்து போனப்புறம் நான் செய்றதெல்லாமே திருப்திகரமா அமைஞ்சிடுது. கடலுக்கு அவ்வளவு சக்தி இருக்கு சுந்தர்."

"நீ சொல்ற உணர்வுகளெல்லாம் ஊட்டி, கொடைக்கானல் மாதிரி மலைப்பிரதேசங்களுக்குப் போனா எனக்கு ஏற்படுது."

எழுந்தனர்.

"ஸ்ட்ராங்கா ஒரு காபி சாப்பிடு. தலைவலி ஓடிடும்" என்றான் சுந்தர். அவனுடைய கரம் அஞ்சலியின் இடுப்பைச் சுற்றிக்கொண்டது.

மணலில் மெதுவாக நடைபோட்டனர். கடல்புற ரெஸ்டாரென்ட்டின் விளக்குகள் அவர்களுக்கு அழைப்பு விடுத்தன.

"செய்யக்கூடாத தப்பு ஒண்ணு பண்ணிட்டேன். என்னை மன்னிச்சிரு அஞ்சலி."

"என்ன பண்ணினே?"

"உன் அந்தரங்கத்துக்குள் ஊடுருவல் பண்ணிட்டேன். காலையில் நீ கட்டின டவலோடு காணாமப் போனதும் நான் ரொம்ப குழம்பிப்போய் என்ன செய்றதுன்னு தெரியாம உன் பெட்டியைத் திறந்து..."

"திறந்து?"

"உன் டயரியைப் புரட்டிப் பார்த்துட்டேன் அஞ்சு."

"அந்த டயரியில் ரகசியம் எதுவும் கிடையாது. அதனால் நீ மன்னிப்பு கேட்க வேண்டிய அவசியமில்லே."

"ரெண்டே ரெண்டு பக்கத்தைத் தான் பார்த்தேன். ஒண்ணும் புரியலே. மூடி வெச்சுட்டேன்."

"புரியலையா?" என்று முகத்தை அவன் பக்கமாகத் திருப்பி பல் வரிசையைக் காண்பித்தவாறு கேட்டாள்.

"சுத்தமா புரியலே. குதிரையில் ஏறி வானத்தில் பறக்கிற மாதிரியும், இளையராஜாவும் மடோனாவும் டுயட் பாடற மாதிரியும் என்னென்னமோ எழுதி வெச்சிருந்தே. டயரி மாதிரி இல்லே. ஒரு புது விட்டலாச்சார்யா படத்துக்கு திரைக்கதை அதில் இருந்துச்சு. ஆனா சும்மா சொல்லக் கூடாது. ஒரு அட்டகாசமான ஃபாண்டஸிக்குள் இழுத்திட்டுப் போயிட்டே."

"என்னைப் பொறுத்தவரைக்கும் சுந்தர்... the line between fantasy and reality is hopelessly blurred. எல்லாரும் பகல் அனுபவங்களை டயரியில் எழுதுவாங்க. சுவாரசியமான அனுபவங்கள் பகலில் எனக்குக் கிடைக்காததினால் நான் கனவுகளை எழுதிக்கிட்டிருக்கேன். ஆனா என் சுயசரிதை அந்தக் கனவுகளுக்குள் சிதறிக் கிடக்குது. Jigsaw புதிரின் துண்டுகளைப் போல..."

அஞ்சலி மழைமேகங்களைப் பார்த்தவாறு பேசிக்கொண்டு நடந்தாள். அந்த மேகங்கள் பட்டணத்து வெளிச்சம் பட்டு செம்பு நிறத்தில் தகதகத்தது. வளைந்தோடிய கடற்கரைச் சாலையில் தங்கவிளக்குகளால் தோரணம்.

கடற்கரை ஏறத்தாழ வெறிச்சோடிவிட்டது. பானிபூரி, பேல்பூரிக்காரர்கள் இல்லாத மகாஜனங்களை எதிர்நோக்கி சளைக்காமல் கூவிக்

கொண்டிருந்தனர்

அஞ்சலியின வார்த்தைகளில தென்பட்ட சோகத்தின பூச்சு சுந்தரின மனசில் பெரும் பாதிப்பை ஏற்படுத்தி விட்டது. அனபும், இரக்கமும் அனுதாபமும் அவனுக்குள் அமோகமாகச் சுரக்க, அவளை மேலும் தனனோடு இறுக்கமாகச் சேர்த்துக்கொண்டு. "அஞ்சலீ!" என்றான ஆதரவாக

"ம்"

சுந்தர் மௌனமானான்.

"சொல்லுப்பா. சொல்ல நினைச்சதை ஏன முழுங்கறே" என்றாள அவள்.

சுந்தரின நரம்புகளில் திடீரென்று முறுக்கேறியது. பினதொடர்ந்து வருவது யார்! ரோந்து போலீசா? அல்லது ஏமாந்த ஜோடிகளை மிரட்டிப் பணம் பறிக்கும் பொறுக்கியா?

"என்ன சுந்தவர் பேச்சை நிறுத்திட்டே?"

சுந்தர் அசைவற்று நின்று சரேலென்று வட்டமடித்துத் திரும்பினான.

பத்தடிக்கு அப்பால் வேகமாக அவர்களைப் பின்தொடர்ந்து வந்தவன் சட்டென்று நின்றான். வெள்ளை பேகீ பான்ட்டும், நீலச் சட்டையும் அணிந்திருந்தான்.

சுந்தர் அசையாமல் நின்று அவனைப் பார்த்து முறைக்கவே, அவன் அவசரமாக வேறு திசையில் நடையைக் கட்டினான்.

"யாரவன்?" என்றாள் அஞ்சலி.

"எவனோ பொறுக்கி."

ரெஸ்ட்டாரெண்ட் நெருங்கியது.

சுந்தரின் பார்வை நீலச்சட்டைக் காரனைக் கண்காணித்தவண்ணமிருந்தது. அவன் மேட்டில் ஏறி காந்தி சிலையருகே 'பாரலெல் பார்க்கிங்' பகுதியில் நின்ற ஒரு சிவப்பு 'மாருதி ஜிப்சி'யை நோக்கிச் சென்றான்.

அர்ஜுனின ஆளா இவன்!

அஞ்சலியை விடுவிக்கிற மாதிரி விடுவித்துவிட்டு மணிவேல் தன சகாக்களை அனுப்பி இவளைக் கண்காணிக்கிறானோ!




"இப்ப தலைவலி எப்படியிருக்கு அஞ்சலி?"

"தேவலை."

"அப்படீன்னா இங்கே காபி சாப்பிட வேண்டாம்."

"ஏன்?"

"பாந்தியன் ரோடு போயிருவோம்."

சுந்தர் அஞ்சலியிடமிருந்து கார் சாவியை வாங்கிக்கொண்டு ஓட்டுநரின் ஆசனத்தில் அமர்ந்தான்.

கார் கண்ணகி சிலைப் பக்கம் ஊர்ந்து மேட்டில் ஏறி அகலச் சாலையில் இடமாகத் திரும்பி சாந்தோம் திசையில் ஓடியது.

காந்தி சிலையைக் கடக்கும்போது சுந்தர் மாருதி ஜிப்சியைத் தேடினான். அது காணாமல் போயிருந்தது!

"என்ன யோசனை சுந்தர்?"

"உன்னை வீட்டில் இறக்கிவிட்டப்பறம் நான் எல்லோஸ்டோன் போய் குருவைப் பார்த்து நன்றி சொல்லணும்."

"எதுக்கு? கடத்தல்காரங்ககிட்டேயிருந்து என்னைக் கடத்திட்டு வந்ததுக்கா?"

"ஆமா. வேற சில விஷயங்களும் பேச வேண்டியதிருக்கு."

"என்னைப் பத்தியா?"

"என் டி.வி. சீரியல் பத்தி."

"எங்கே இந்தப் பக்கம் போறே சுந்தர்!"

"ஃபியட் ஓட்டி ரொம்ப நாளாச்சு. அதனால் இன்னிக்கு கொஞ்சம் ஜாலியா சுத்தலாம்னு பாக்கறேன்."

"பெட்ரோல் இருக்கான்னு பார்த்துக்கோ. குரு ஜமுக்காளத்தில் வடி கட்டின கஞ்சன். எப்பவும் டாங்க்கை சுத்தமாத்தான் வெச்சிருப்பான்."

"தள்றதுக்கு ஒரு பெண் கூட இருக்கிறப்ப நான் ஏன் கவலைப்படணும்?"

சாந்தோம் கோபுரத்தைக் கடந்த கார் ஒரு நிமிட மௌன ஓட்டத்துக்குப் பிறகு குறுகலான இருண்ட 'லித்காசில்' பகுதிக்குள் புகுந்தது. ஏகப்பட்ட சந்துபொந்துகளுக்குள் ஓடி பட்டினப்பாக்கத்தில் வெளிப்பட்டு மீனவர் குப்பத்துக்கும் கடல் அலைகளுக்குமிடையே ஓசையில்லாமல் நீந்தியது.

"டெல்லியில் இருந்துக்கிட்டு எப்படி இந்த சந்து பொந்தையெல்லாம் தெரிஞ்சு வெச்சிருக்கே சுந்தர்?"

"நானும் குருவும் சுத்தாத இடமே கிடையாது இந்த மெட்ராசில்."

கடற்கரைச் சாலையும், கிரீன் வேஸ் சாலையும் இணையும் சந்திப்பில் கார் ஓடியபோது சுந்தரின் உடம்பெங்கும் பரபரப்பு. ரியர்வியூ கண்ணாடியைப் பார்த்தான்.

மாருதி ஜிப்சி கண்ணைப் பறிக்கும் ஹெட்லைட் வெளிச்சங்களுடன் பின் தொடர்ந்து வந்துகொண்டிருந்தது.

எதற்காக இந்த வண்டி என்னை விரட்டிக்கொண்டு வருகிறது?

சுந்தரின் பாதம் தன்னிச்சையாக அக்சிலரேட்டரை அழுத்த, வளைந்தோடிய கிரீன்வேஸ் சாலையில் வண்டி புயல்வேகம் பெற்றது.

என் சென்னை வருகையையும்,

என் நோக்கத்தையும் அர்ஜுன் மோப்பம் பிடித்துவிட்டானோ! என்னைக் கொல்ல அடியாட்களை அவிழ்த்துவிட்டிருக்கிறானோ! எதிர்த்துத் தாக்க காருக்குள் ஆயுதம் கூட இல்லையே. பாவம் அஞ்சலி... என்னால் இவளும்..."

தொலைவில் போட்கிளப் சாலை பிரியுமிடத்தில் ஒரு பெட்ரோல் லாரி சாலையின் குறுக்கே முன்னும் பின்னும் நகர்ந்துகொண்டிருந்ததால் சுந்தர் இரண்டாவது கியருக்குள் வேகத்தைக் குறைத்தான்.

பின்னால் ஜிப்சியும் வேகத்தைக் குறைத்து பின்தங்கியது. ஜிப்சியின் இரட்டை ஒளிக்கற்றைகள் அகலமாக விரிந்து மெதுவாக நெருங்கி வந்தன.

பார்க் ஷெராட்டன ஓட்டல் வலப்புறம் விரைந்தோடி மறைய சுந்தர் அக்சிலரேட்டரை மேலும் மிதிக்க கார் சேமியர்ஸ் சாலையில் துப்பாக்கியிலிருந்து விடுபட்ட புல்லெட்டாகியது.

செனடாஃப் சாலையில் திரும்பலாமா, வேண்டாமா என்று தீர்மானிப்பதற்குள் செனடாஃப் திருப்பம் பின்பக்கம் ஓடிவிட்டது.

சுந்தரின் கோமாளித்தனங்களை வேடிக்கை பார்த்து, பொறுமையை இழந்த அஞ்சலி, "என்ன ஆச்சு உனக்கு? ஏன் இப்படி விழுந்தடிச்சு ஓடறே?" என்றாள்.

"அடுத்த வருஷம் சோழவரம் ரேசில் கலந்துக்கப் போறேன்."

"என்னை இறக்கிவிட்டுட்டு எங்கே வேணாலும் போ."

அண்ணாசாலை குறுக்கிட்ட இடத்தில் நந்தனம் சிக்னல் சிவப்பைக் காணபித்து வழிமறித்தது.

சுந்தர் வேகத்தைக் குறைத்தான்.

அகண்ட காவிரிபோல் விரிந்திருந்த அந்தச் சாலையைக் கடக்க ஏற்கனவே கியூவில் காத்து நின்ற வாகன வரிசையில் சுந்தரும் சேர்ந்து கொண்டான்.

அந்த முன்னிரவு வேளையிலும் அண்ணாசாலையில் வாகனப் போக்குவரத்து அடர்த்தியாக இருந்தது அசாதாரண விஷயமல்ல. வாக

னங்கள் இடமும் வலமும் 'சர்ர் சர்ர்' ரென்று பறந்தவண்ணமிருந்தன.

சிவப்பு அணைந்து ஆம்பர் மலர இன்னும் சில நொடிகளாகும். இந்த இடத்தில் ஜிப்சி என்னை மடக்கி விடலாம். மடக்கி என்ன செய்யப் போகிறார்கள்?

சுந்தரின் இதயத்துடிப்பு அதிகரித்தது. அவன் பார்வை ரியர்வியூ கண்ணாடியில். ஒவ்வொரு வினாடியும் ஒவ்வொரு யுகம்.

அவனுடைய ஃபியட்டுக்குப் பின்னே மளமளவென்று ஒரு பல்லவன் பேருந்தும், ஒரு லாரியும் வந்து பாதுகாப்பாக நின்றன. ஜிப்சி வந்து சேரவில்லை என்று சந்தோஷப்படுவதற்குள் ஜிப்சியும் வந்து லாரிக்குப் பின்னே ஒட்டிக்கொண்டது.

சுந்தர் யோசிக்காமல் காரைக் கிளப்பி வரிசையிலிருந்து விலகினான்.

அஞ்சலி அலறினாள். "சிக்னல் விழலே சுந்தர்!"

முன்னால் நின்ற எல்லா வாகனங்களையும் தாண்டிச் சென்ற அவனுடைய வண்டி அண்ணா சாலையின் போக்குவரத்து நெரிசலுக்கிடையே தற்கொலை நோக்கத்துடன் பாய்ந்தது. போக்குவரத்து காவலரின் விசில் சப்தங்கள்.

இடமும் வலமும் ஓடிக்கொண்டிருந்த வாகனங்களுக்கிடையே ஏவுகணையெனச் சிறிய ஃபியட் கண்ணிமைப்பு நேரத்தில் சாலையைக் குறுக்கு வசத்தில் வெட்டிக்கொண்டு மறுபடியும் வெங்கட்நாராயணா சாலைக்குள் தஞ்சம் புகுந்தது.

திரும்பிப் பார்த்தான்.

நந்தனம் சிக்னல் இன்னும் சிவப்பிலேயே இருந்தது. சாலையின் இரு பக்கமும் நின்ற வாகனங்கள் அப்படியே அசையாமல் பச்சை சிக்ன

# படிக்க ஆசை

இதுவரை தோல்வியையே தழுவாத பிரபல குத்துச் சண்டை சாம்பியன் மைக் டைசனுக்கு ஒகியோ சென்ட்ரல் ஸ்டேட் யுனிவர்சிடி கௌரவ டாக்டர் பட்டம் வழங்கி கௌரவித்திருக்கிறது. பட்டதாரிகள் அணியும் அந்த கவுனையும் தொப்பியையும் அணிந்து பட்டத்தைப் பெற்றுக் கொண்ட போது டைசனுக்கு உண்மையிலேயே படித்துப் பட்டம் வாங்கினால் என்ன என்று உத்வேகம் கிளம்ப, இப்போது மீண்டும் பள்ளிக்குச் சென்று படிக்கப் போகிறாராம்!

-ஜமேதார்
(நன்றி - டைம்)



லுக்காக தவமிருந்தன.

சுந்தர் தப்பித்தோம் பிழைத்தோமென்று இடப்புறம் ஒடித்து போக் சாலையைப் பிடித்தான். பாண்டிபாரைக் கிழித்துக்கொண்டு கலைவாணர் சிலையைத் தேடிச் சென்றான்.

மாருதி ஜிப்சி பிணபக்கம் தென்படவில்லை. அது எங்காவது வெறிநாய் போல சுற்றிக்கொண்டிருக்கும்.

கார் நிம்மதிப் பெருமூச்சுடன் வில்லேஜ் சாலையில் திரும்பி சீரான வேகத்தில் ஓடியது. ஐந்து நிமிடங்களுக்குப்பிறகு மாண்டியத் சாலையில் சிங்கப்பூர் பாணியில் எழும்பியிருக்கும் பிரம்மாண்டமான கலீலி ஷாப்பிங் சென்டர் ஓரமாக நின்று எஞ்சின் மௌனமடைந்தது.

"இரு வர்றேன்" என்ற சுந்தர் இறங்கி பிளாட்பாரத்தில் நடந்தான். பெட்ரோமாக்ஸ் வெளிச்சத்தில் ஆல்வள்ளி வறுத்துக்கொண்டிருந்த வெள்ளைத்தாடி பெரியவரிடம் ஒரு ரூபாய் நாணயத்தை நீட்டி சூடாக ஒரு சிப்ஸ் பொட்டலம் வாங்கினான்.

அஞ்சலி காருக்குள் பாட்டு கேட்டுக்கொண்டிருந்தாள்.

சுந்தர் டிக்கிப் பக்கம் போய் சிப்ஸ் பொட்டலத்தைப் பிரித்து உள்ளேயிருந்த துண்டுச் சீட்டை எடுத்து கலீலி வெளிச்சத்தில் பார்த்துவிட்டு கசக்கி பேண்ட் பைக்குள் போட்டுக் கொண்டான்.

சுந்தர் மீண்டும் காருக்குள் ஏறிய போது அஞ்சலி கிண்டலாகச் சிரித்தாள். "இந்த சிப்சுக்கா உலகத்தையெல்லாம் சுத்திக்கிட்டு வந்தே?" என்றாள்.

கார் நகர்ந்தது. சுந்தரின் மூளையில் துண்டுச் சீட்டிலிருந்த வாசகங்கள் நகரும் ஒளி விளம்பரம் போல திரும்பத் திரும்ப வந்துகொண்டேயிருந்தன.

'பிர்லா பிளானடேரியம் 4.30 பி.எம். ரஜனிகந்தா ... பிர்லா பிளானடேரியம் 4.30 பி.எம்' ரஜனி கந்தா... பிர்லா...

—தொடரும்

"கணணை மூடிட்டே டிக்டேட் பண்றீங்களே! ஏன சார்?"

"அது கிடக்கட்டும்! ஜாக்கெட் பட்டனை சரியா போட்டுக்க."



"அந்த சங்கதியெல்லாம நம்ம கல்யாணத்துக்கப்புறம் தான்! தள்ளி உட்காருங்க..."

"டோண்ட் ஒர்ரி! உனக்கு எந்த பங்கமும் ஏற்படாது. போன வாரம்தான் வாஸக்டமி பண்ணிண்டுட்டேன்!"



"என்னப்பா நீ! பாங்க் மூடுற நேரத்துலே சில்லறையா ஒரு மூட்டை கொண்டு வரியே!"

"நான் என்ன சார் செய்வேன்? கோவில் கதவை இப்பத்தானே மூடினாங்க."

—சுதர்ஸன.




"காலைலே ஒரு கப் காபி சாப்பிட்டா அப்படியே பத்து வயது குறைஞ்சா மாதிரி இருக்கு."

"ராத்திரி சாப்பிட்டுப் பாருங்களேன்."

—ராமசாமி.



சுந்தர் காரை ஓரமாக நிறுத்தினான்.

இரவு பத்தாகிவிட்டதால் விம்பிள்டன் கோர்ட்டின் அநேக மாடிகளில் வெளிச்சம் இல்லை.

பக்கத்திலிருந்த அஞ்சலியைப் பார்த்து சுந்தர் சொன்னான்–

"இறங்கிக்கோ. நான் எல்லோஸ்டோன் போய் குருவைப் பார்த்து நன்றி சொல்லிட்டு வந்திர்றேன்."

"போயிட்டு உடனே வந்துருவியாப்பா?"

"டி.வி.சீரியல் பத்தி அவனோடு டிஸ்கஸ் பண்ணணும்."

"நேரம் ஆகும்னா நீ போகக் கூடாது."

"ஏன்?"

"குருவுக்கு போன் பண்ணி அவனை இங்கே வரச் சொல்லிரலாமே சுந்தர்."

"உன் தூக்கத்தைக் கெடுக்க நான் விரும்பலே!"

"நான் பெட்ரூம் கதவை சாத்திக்கறேன். எனக்கு ஒண்ணும் தொந்தரவா இருக்காது. உனக்கு ஆட்சேபணையில்லேன்னா நானும் டிஸ்கஷனில் கலந்துக்கறேன்."

"தாங்ஸ். இன்னிக்கு வேண்டாம். இன்னிக்கு நீ ரொம்ப களைப்பா இருக்கே. நீ படுத்து ரெஸ்ட் எடு. நாங்க பக்கத்து ரூமில் விளக்கை எரிக்கறோம்."

சுந்தரும் காரை விட்டிறங்கினான், வேறு வழி இல்லாமல்.

B-Q3

# சொல்! சொல்! என் உயிரே!

"எனக்கு தனியா இருக்க பயமா இருக்கு. பழையபடி அந்தப் பொண்ணுங்க துப்பாக்கியோடு வந்தாலும் வந்துருவாங்க."

"யாரும் வரமாட்டாங்க. வந்தாலும் கதவைத் திறக்காதே."

"நீ எப்ப வருவே?"

"பன்னிரண்டுக்கெல்லாம் வந்துருவேன்"

"வேண்டாம்ப்பா. ப்ளீஸ்" என்று சுந்தரின் தோளில் கரத்தைப் போட்டு அவனை இறுகக் கட்டிக் கொண்டாள். அவனுடைய கரத்தில் பதிந்த அவளுடைய பிராவின் முனை அவனை கனவுலகுக்குத் தூக்கிச் சென்றது.

லிப்ட் பத்துக்கு ஏறியபோது அஞ்சலி அவன்மீது கொடியாய் படர்ந்து ஒரு கன்னத்தை அவன் நெஞ்சில் சாய்த்து விழி மூடிக் கொண்டாள்.

அஞ்சலி உறங்கிய அறைக்குப் பக்கத்திலுள்ள இன்னொரு அறையில் சுந்தரும் குருவும் கதவைத் தாழிட்டுக்கொண்டு பேசிக் கொண்டிருந்தனர்.

"அஞ்சலியை மணிவேல்கிட்டேயிருந்து வெற்றிகரமா மீட்டுத்தந்த மாதிரி அர்ஜுன் விஷயத்திலேயும் என்னால் உனக்கு உதவ முடியும் மச்சான். ஆனா..." என்று இழுத்தான்

# 9

குரு.

மிச்சமிருந்த பீரையும் வாயில் ஊற்றிக்கொண்ட சுந்தர், "ஆனா?" என்று கேட்டான்.

"அர்ஜுன் உயிரோடு இருக்கிறதா நீ சொல்றதைத்தான் என்னால் நம்ப முடியலே".

"அர்ஜுன் வாழ்க்கை வரலாறே உன் பத்திரிகை ஆபீசில் இருக்குன்னு அன்னிக்கு சொன்னியே..."

"சொன்னேன். அந்தக் கோப்பைக் கூட உனக்காக ஒரு நைட் கண்

முழிச்சு தேடி எடுத்துட்டேன்"

"எடுத்துட்டயா?"

"உன்னைவிட நான் சுறுசுறுப்பு மச்சான்" என்ற குரு தன் சட்டைக்குள் மறைத்து எடுத்து வந்திருந்த கோப்பு ஒன்றை வெளியே எடுத்தான். பிரித்தான். ஐஸ் மிதந்த விஸ்கியை சிறிது பருகிவிட்டு கோப்பின் பக்கங்களை மெல்லத் தள்ளியவாறு பேச ஆரம்பித்தான்.

"அர்ஜுன், உண்மைப் பெயர் குமாரசாமி. பிறந்தது திருச்சி. அப்பா எம்.பி.பி.எஸ். டாக்டர். தமிழர். அம்மா கேரளத்துப் பெண். வசதியான குடும்பம். குமாரசாமி சென்னையிலுள்ள கல்லூரியில் சேர்ந்து சரித்திரத்தில் பி.ஏ. பட்டம் பெறுகிறான். பல்கலைக்கழகத்தில் எம்.ஏ டிஃபென்ஸ் ஸ்டடீஸ் சேர்கிறான். பல்கலைக்கழக விடுதியில் அவன் தாடி வைத்து 'ராடிகல்'. நண்பர்களிடம் உலகப் புரட்சிகள் பற்றி பேசுகிறான். ஸைமன் பொலிவார் தலைமையில் ஆறு லத்தீன் அமெரிக்க நாடுகள் ஸ்பானிஷ் ஆதிக்கத்தை உதைத்து அப்புறப்படுத்தியதையும், ஜார் கொடுங்கோன்மைக்கு முடிவு கட்ட லெனின் தலைமையில் நடந்த 1917 ரஷ்யப் புரட்சி பற்றியும், ஸ்பெயினில் நடைபெற்ற பாஸ்க் புரட்சி பற்றியும், கியூபாவுக்காக சேகுவேரா நிகழ்த்திய புரட்சி பற்றியும் நிறைய நிறைய பேசுகிறான். படிப்பை பாதியில் விட்டுவிட்டு பஹ்ரெய்னிலுள்ள மாமாவிடம் செல்கிறான். மாமா வீட்டிலிருந்து மறைகிறான். அபுநிடாலை தரிசிக்கிறான்."

"எந்த அபுநிடாலை!"

"உனக்கும் உலகத்துக்கும் தெரிந்த பயங்கரவாதி அபுநிடாலைத்தான்."

"அபுநிடாலை அர்ஜுன் சந்திச்சானு எதைவெச்சு சொல்றே?"

"ஒரு பத்திரிகை நடத்திக்கிட்டிருக்கிறவன்கிட்டே இந்த மாதிரி கேள்வியெல்லாம் கேக்காதே. பாக்தாத்தில் குமாரசாமி அபுநிடாலை சந்திக்



# ஏன்?

இம்ரான்கான் ஒரு நூலை எழுதிக் கொண்டிருக்கிறார்!

அவர் எழுதும் நூல் அவரது சுயசரிதமுமல்ல, கிரிக்கெட் தொடர்பானதுமல்ல. முதலில் அவர் 'மொஹஞ்சதாரோ' (சிந்து சமவெளி நாகரிகம்) பற்றி ஒரு நூல் எழுதுவதாகச் செய்தி வந்தது. சமீபத்திய செய்தி 'இந்தியா-பாகிஸ்தான் பிரிவினை'யைப் பற்றிய நூல் என்பது.

இதுபற்றி உண்மையா? என்று விசாரித்தபோது இம்ரான் ஒத்துக் கொண்டார். ஏன் திடீரென்று இம்ரான் ஆழமான விஷயங்களில் இறங்கிவிட்டார்?

ஒரு குறிப்பிட்ட வயதுக்குமேல் நம் வாழ்வுக்கு ஒரு அர்த்தம் தேவை. அதற்குப் பல விஷயங்களைப் பற்றிய சிந்தனைகளில் முனைப்புக் காட்டவேண்டும். நான் அந்த வயதை அடைந்துவிட்டேன்" என்கிறார் அவர்.

—நட்சத்திரன்.

**மு**னபெல்லாம் நேரம் கிடைக்கும்போது தங்கை லலிதாகுமாரியுடன ஐஸ்கிரீம் சாப்பிடுவேன். தற்போது உடலை சீராக வைத்திருப்பதால் ஐஸ்கிரீம் சாப்பிடாமல் தியாகம் செய்து விட்டேன - என்கிறார் நடிகை டிஸ்கோ சாந்தி

- ராஜராஜேந்திரன்



கிறான். இதய அறுவை சிகிச்சைக்குப் பிறகு அபுநிடால் ஓய்வெடுத்துக்கிட்டிருந்த நேரம் அது. உலக பயங்கரவாதிகளின் குரு 'ஜாக்கால் எனப்படும் கார்லோஸ்' இயற்றிய 'மினி மான்யுவல் ஃபார் அர்பன் கொரில்லாஸ்' குமாரசாமிக்கு கிடைக்கிறது. அபுநிடால் குமாரசாமிக்கு பயங்கரவாத மதத்தில் ஞானஸ்நானம் கொடுத்து சேர்க்கிறார். அப்புறம் குமாரசாமி 'அர்ஜுனா' என்ற பெயரில் தெற்கு ஏமனிலும் மத்திய கிழக்கிலுள்ள கொரில்லா பயிற்சித் தளங்களில் அவசரப் பயிற்சி பெறுகிறான். இந்தியா திரும்புகிறான். 1982 ஆகஸ்டில் டில்லிக்கும் பம்பாய்க்குமிடையே பறக்கும் இண்டியன் ஏர்லைன்ஸ் போயிங் ஜெட்லைனரை லாகூருக்கு கடத்திச் செல்லும் இளைஞர்களில் அர்ஜுனும் ஒருவன். டில்லி அஜ்மல்கான் சாலையில் நவீன ஆடையகம் ஆரம்பிக்கிறான். அங்கே அவனிடம் பணியாற்றும் நான்கு வட இந்திய அழகிகளின் துணையுடன் பாபா அணு ஆராய்ச்சி மையம் தயாரித்த நியூக்ளியர் நீர்மூழ்கிக் கப்பலின் டிசைனை நகலெடுத்து பாரத எல்லையை விட்டுக் கடத்துகிறான். டில்லி போலீஸ் அவனுடைய கடையை ரெய்டு பண்ணி டிடோனேடர்கள், டைம்பாம் செய்ய உதவும் ஃபியூஸ் ஒயர்கள், ஏராளமான ரவுண்டு வெடி மருந்துகளை கைப்பற்றுகிறது. கோர்ட் அவனுக்கு விதிக்கும் ஆயுள் தண்டனையை அனுபவிக்க டிஹார் ஜெயிலுக்கு தன் அஸிஸ்டெண்ட் சுபாஷை 'அர்ஜுன்' என்ற பெயரில் அனுப்பி வைத்துவிட்டு அர்ஜுன் தமிழ்நாடு வருகிறான். 10 சகாக்களுடன் மக்கள் புரட்சி இயக்கத்தை ஆரம்பிக்கிறான். இந்த இயக்கமும் அபுநிடால் மாதிரி 'One man organisation' தான். அர்ஜுன் வைத்ததுதான சட்டம், அவன் சொன்னதுதான் திட்டம். தர்மபுரிப் பக்கம் அவனுடைய சகாக்கள் ஒரு சப்இன்ஸ்பெக்டரை தீர்த்துக் கட்டுகின்றனர். சந்தனகிரியில் வங்கிக்கொள்ளை. கோவையில் சி.பி.ஐ. அதிகாரிபோல் நடித்து போலி ரெய்டு நடத்தி பட்டப்பகலில் நகைக் கடை கொள்ளை. பவானியருகே ஒரு கிராம அதிகாரியை சாமுராய் பாணியில் வெட்டிக் காலி பண்ணுகிறான். வடக்கேயிருந்து உதகைக்கு ஓய்வெடுக்க வந்த ராணுவ அதிகாரியையும் அவர் மனைவியையும் கடத்திச் சென்று தொட்டபெட்டா அருகே கட்டுக்குள்ளிருக்கும் 'வுட் ஹவுஸ்' வீட்டுக்குள் பூட்டி வைத்துவிட்டு டில்லி போலீசுடன் பேரம் பேசுகிறான். டிகார் சிறையில் அர்ஜுன் என்ற பெயரில் ஆயுள் தண்டனை அனுபவிக்கும் சுபாஷை விடுவித்தால்தான் ராணுவ அதிகாரியையும் அவர் மனைவியையும் விடுவிப்பேன், இல்லையெனில் இரண்டு பிணங்கள் பரசுராம சாகரில் மிதக்கும் என்று மிரட்டுகிறான. 250 நேஷனல் செக்யூரிடி கார்டு கமாண்டோக்களும், சென்ட்ரல் ரிசர்வ் போலீஸ்லாரும் வெலிங்டனில் வந்து இறங்குகின்றனர். ஆனால் அவர்கள் அர்ஜுன்மீது அதிரடித்தாக்குதல் தொடுக்க அரசு அனுமதிக்கவில்லை. டிஹாரிலிருந்து விடுவிக்கப்படும் சுபாஷ்

ஸ்பெஷல் ஆவ்ரோ விமானத்தில் கோவைக்கு கொண்டு வரப்பட்டு அர்ஜுனிடம் ஒப்படைக்கப்படு கிறான். இராணுவ அதிகாரியும் மனைவியும் வுட்ஹவுசிலிருந்து விடு தலை பெறுகின்றனர்."

"சுபாஷ் இப்ப எங்கே இருக்கான்?" என்று சுந்தர் குறுக்கிட்டான்

"அர்ஜுன் அவனை ஆயுள் தண்டனையிலேயிருந்து விடுவித்தது தன் கையால் மரண தண்டனை நிறை வேத்தறதுக்கு.சுட்டுட்டான். ஜெயிலில் இருந்து விடுதலை கிடைச்ச அன் னிக்கே உலகத்திலிருந்து அவனுக்கு நிரந்தர விடுதலை கொடுத்துட்டான் அர்ஜுன்."

"காரணம்?"

"அர்ஜுனைப் பத்தி சுபாஷ் அதிகமா தெரிஞ்சு வெச்சிருந்தது தான் முக்கிய காரணம். டிஹார் சிறையில் சுபாஷ் டெல்லி போலீஸ்கிட்டே கொஞ்சம் அதிகமா பேசிட்டான். அதுவும் ஒரு காரணம். அன்பு நட்பு பாசம் மாதிரி வார்த்தை களெல்லாம் அவன் அகராதியில் கிடையாது. ஈவிரக்கமில்லதவன். அவனோட இன்னொரு சகா ஜானிக் கும் அவனுக்கும் வாய்த்தகராறு ஏற் பட்டுச்சு."

"என்ன தகராறு?"

"Annihilation நம்ம கொள்கை இல்லேன்னான் ஜானி. அப்பாவி ஆண் பெண் குழந்தைகளை அழிக் கிறது தப்புன்னான். ஜானியை அந்த நிமிஷமே தீர்த்துக்கட்டிட்டான். அத் தோடு விட்டிருந்தாக்கூட பரவா யில்லே. ஜானி வீட்டு சமையலறையில் கண்ணி வெடி வெச்சிட்டான். காஸ் சிலிண்டர் வெடிச்சு ஜானியின் மனைவியும், ஒரு மகளும், மனைவி யின் தங்கையும் குளோஸ்."

"அவனுக்கு கொள்கை எதுவும் கிடையாதுன்னு தெரியுது" என்றான் சுந்தர்.

"கண்ணீரும் வியர்வையும் ஒரு நாட்டை சுத்தப்படுத்தாது. செந்நீரால் தான் முடியும்னு சொல்லுவானாம். ஆனா நிலையான கொள்கை எதுவும் அவனுக்கு கிடையாது. நான்தான் உண்மையான ரெவல்யூஷனரின்னு தன் சகாக்கள்கிட்டே சொல்லு வானாம்."

"இவன் ரெவல்யூஷனரி இல்லே. ஸப்வெர்ஸிவ். மிருகத்தனமான அஸாஸின். கேவலமான மெர்சினரி. மூளையில் ஊனமுள்ள நிகிலிஸ்ட்."

"நிகிலிஸ்ட்னா?" என்று குரு கேட்டான்.

"தெரியாதா உனக்கு? 'நிகில்'னா இலத்தீன் மொழியில் 'நத்திங்'னு பொருள். நிகிலிசம்கறது ஒரு பயங்கரவாத இயக்கம். ரஷ்யாவில் பதினெட்டாம் நூற்றாண்டின் பிற் பகுதியில் தழைத்தது. இருக்கிற எல்லா சமூக பொருளாதார அரசி யல் அமைப்புக்களையும் சுத்தமா தகர்த்துட்டு எல்லாத்தையும் வித் தியாசமா அமைக்கணும்கறதுதான் அவுங்களோட கொள்கை."



"வெறுங்காலோட எங்கே போறீங்க... கோவிலுக்கா.."

"நீங்க வேறே.. ஒரு கல் யாணத்துக்கு போறேன். வரும் போது செருப்போட வருவேன்!"

—எஸ்.ராகவேந்திரா



"நம்ம நடிகர் ஆரம்பிச்சிருக்கற புது கட்சிக்கு தலைவர், துணைத் தலைவர், கொ.ப.செ. என்ற பெயரே கிடையாதாம்."

"பின்னே!"

"கட்சி இயக்குநர், துணை இயக்குநர், கொள்கை விநியோகஸ்தர்னு தான் பதவிகளாம்!"

—வெ.சீதாராமன்

"அன்பே நம் காதல் என் அப்பாவுக்குத் தெரிந்து விட்டது"

"ஆருயரே நம் காதல் என் மனைவிக்குக் கூட தெரிந்து விட்டது".

—ஜி.சிவகுமார்.



"வித்தியாசமான்னா எப்படி?" என்று குரு கேட்டான்.

"அது அவுங்களுக்கே தெரியாது. ரஷ்யாவில் இரண்டாவது அலெக்சாண்டர் மன்னரை தீர்த்துக் கட்டினது இந்த இயக்கம்தான், மூன்றாவது அலெக்சாண்டர் தலையெடுத்து இந்த இயக்கத்தை அழிச்சான்."

"மணி ஒண்ணாகப் போகுது. அஞ்சலி சவாரிக்கு குதிரை கிடைக்காம கனவுக்குதிரையில் பறந்துகிட்டிருப்பா. உள்ளே போய் படு. நான் கிளம்பறேன்."

"அவசரப்படாதே குரு. அஞ்சலியோடு படுக்கிறதுக்காக நான் மெட்ராஸ் வரலே. அர்ஜுன் வேட்டையை நாளைக்கே நாம ஆரம்பிக்கிறோம். அதனால் பேச வேண்டியதையெல்லாம் இன்னி நைட்டே பேசி முடிச்சிடலாம். உட்கார்."

"இந்தத் துண்டுச் சீட்டு பற்றி முழு விவரமும் நீ சொல்லலியே."

"நாளைக்கு சாயந்தரம் நாலரைக்கு நான் பிர்லா பிளானடேரியத்தில் இருக்கணும்."

"எதுக்கு?"

"போயிட்டு வந்து சொல்றேன்."

"இந்த சீட்டு உனக்கு எப்படி கிடைச்சுது?"

"குச்சிக்கிழங்கு சிப்சுக்குள்ளேயிருந்து கண்டெடுத்தேன். இதைப் பத்தி அப்புறம் சொல்றேன் குரு. அந்த ஃபைலில் அர்ஜுன் பற்றி வேற என்னென்ன தகவல் இருக்குன்னு சொல்."

"பசிக்குது. 'டிக்டாக்'கில் விளக்கை அணைக்கிறதுக்குள்ளே போயிட்டு வந்துருவோம்."

"அஞ்சலியை தனியா விட்டுட்டா?"

"வெளீல பூட்டிட்டுப் போகலாம். கண்ணாடி ஜன்னல் வழியா அவளை யாரும் கடத்திட்டுப் போக முடியாது. கிளம்பு."

—தொடரும்

Kt K2

நள்ளிரவு.

கட்டிலில் ஒருக்கணித்துக் கிடந்த அஞ்சலியின் உறக்கம் 'நறுக்'கென்று ஏதோ கடித்ததைப் போன்ற உணர்வினால் கலைந்தது.

தேளா, பாச்சையா?

'தடால் புடால்' என்று எழுந்து குழல் விளக்கைப் போட்டுப் பார்த்தாள்.

தலையணையருகே எறும்பு.

முன்னிரவில் படுக்கையில் சாய்ந்தபடி சுந்தர் கொடுத்த இனிப்புப் பார்சலைப் பிரித்து அவள் ருசி பார்த்தது நினைவுக்குவந்தது. உதிர்த்திருக்கக் கூடிய இனிப்புத் துகள்கள் எறும்புக்கு அழைப்பு விடுத்திருக்கும் என்று எண்ணிக் கொண்டாள்.

சுந்தரின் படுக்கை காலியாக இருந்தது.

இன்னும் படுக்க வரவில்லையா! மணி இரண்டாகிறது! இன்னுமா இருவரும் அரட்டையடித்துக்கொண்டிருக்கிறார்கள்? அந்த அறையிலேயே உறங்கிவிட்டார்களா..?

எழுந்து ஹாலுக்குப் போனாள்.

குருவும் சுந்தரும் அமர்ந்து பேசிக்கொண்டிருந்த பக்கத்து அறையின் கதவு சாத்தப்பட்டு பெரிதாக பூட்டு.

குரு இந்த அறையை எப்போதும் பூட்டித்தான் வைத்திருக்கிறான்! இதற்குள் என்னதான் வைத்திருக்கிறானோ! இருவரும் எங்கே போய்த் தொலைந்திருப்பார்கள் இந்த ஒரு ராத்திரியில்? குரு அவனுடைய இருப்பிடம் போயிருக்கலாம். சுந்தர்?

அஞ்சலியின் கரம் ஃபிரிட்ஜைத் திறந்தது. தண்ணீர்ப் புட்டியை எடுத்தது. சில்லென்ற நீர் லேசாக எரிந்து கொண்டிருந்த அவளுடைய தொண்டைக் குழியை நனைத்துக்கொண்டு உள்ளே இறங்கியபோது அவளுக்கு சுகமாக இருந்தது. மீண்டும் படுக்கையில் விழுந்தாள். தலையணையில் கன்னம்பதித்து இறுக்கமாகக் கட்டிக் கொண்டாள்.

சுந்தரும் எல்லோஸ்டோன் போயிருப்பானோ? விடிந்தபிறகுதான் வருவானோ?

என் மனம் ஏன் இந்த சுந்தரையே தேடுகிறது? என் மனசுக்குள் திடீரென்று என்ன மாற்றம் நேர்ந்துவிட்டது? இவன் இருக்கும்போது என்னிடமிருக்கும் மகிழ்ச்சி இவன் இல்லாதபோது ஏன் இல்லாமல் போய்விடுகிறது? இவன் கண்களுக்குள் என் கண்கள் பார்க்கும்போதெல்லாம் சுற்றுப்புறச் சூழ்நிலை சுத்தமாக அழிந்துவிடுகிறதே! இவனை நினைக்கும்போதெல்லாம் மொசார்ட்டின் இனிய சிம்ஃபனியையும் கேட்கிறேனே. நான் இவனை விரும்பும் அளவுக்கு இவனும் என்னை விரும்புகிறான் என்று ஏன் அப்பாவித்தனமாக எண்ணிக் கொள்ளுகிறேன்? மெஜாரிடி ஆண்களைப் போல உடம்பில் அவ்வப்போது தலைதூக்கும் தினவைத் தீர்த்துக் கொள்ளத்தானே இவன் என்னுடன் பழகுகிறான். தன் ஸ்கிரிப்ட் வேலை முடிந்ததும் டில்லி ஓடிவிடுவானே. அப்புறம் தனி

சொல்! சொல்! என் உயிரே!

மையை எப்படி நான் சமாளிக்கப் போகிறேன்?

அவள் நெஞ்சு கனத்தது. அந்த நள்ளிரவில் சுந்தருடன் நிறைய பேச வேண்டும்போல இருந்தது. அவனோடு வெய்யில் காயும் கடல் பிரதேசத்தில் ஒரு சின்ன வண்ணக் குடைக்குக் கீழே அமர்ந்து செஸ் ஆடிக்கொண்டே ஆயுள் முழுவதையும் கழித்துவிடலாம் என்று ஏக்கத்துடன் எண்ணினாள். பெருமூச்சுடன் புரண்டு படுத்தாள்.

உறக்கம் முழுசாக விலகிவிட்டதால் எழுந்தாள்.

பெண்ணுரிமைக்காக சென்னையின் நெறிமன்றங்களில் போராடிக் கொண்டிருக்கும் பிரபல வக்கீல் ராணியின் பேட்டிக் கட்டுரையை எழுதினால் என்ன என்று டேப் ரிகார்டரையும் காகிதங்களையும் எடுத்தாள். அந்த அம்மையாரை பேட்டி கண்டு ஒருவாரமாகிவிட்டது. குரு நாளைக்கு 'பேட்டிக் கட்டுரை என்னாச்சு?' என்று விரட்டுவான்.

பேனாவைத் திறந்தவள் எதிலும் கவனம் செலுத்த முடியாத அளவுக்கு மன அமைதி பாதிக்கப்பட்டிருந்ததை உணர்ந்து அந்த வேலையை ஒத்தி வைத்தாள். போர்ட்டபிள் கம்ப்யூட்டர் செஸ்போர்டை எடுத்தாள்.

கருப்பு ஆடலாமா வெள்ளை ஆடலாமா என்று ஒரு கணம் யோசித்தாள். கூர்மையாக யோசிக்கும் சக்தியை அவள் தற்காலிகமாக இழந்திருந்தாலும், அந்தக் குட்டிக் கம்ப்யூட்டரிடம் தோற்றுப்போக அவளுடைய ஈகோ இடம் தராததாலும் ஒரு விசையை மேலே தள்ளி கம்ப்யூட்டரை அதனுடனேயே மோத விட்டாள். கருப்புக்கும் வெள்ளைக்குமாக அந்தக் கருவியே மாறி மாறி சிவப்புக் கண்களைச் சிமிட்டி யோசனை செய்தவாறு ஆடியதை வேடிக்கை பார்த்தாள். 'ரைலோப் பெஸ் எக்ஸ்சேஞ்சு வேரியேஷனில்' ஆரம்பித்து 1972ல் ஐஸ்லாண்டில் உலக சேம்பியன் டைட்டிலுக்காக ஃபிஷரும் ஸ்பாஸ்கியும் மோதியதை மீண்டும் நிகழ்த்திக் காண்பித்தது அந்த எலெக்ட்ரானிக்ஸ் இயந்திரம்.

முன் கதவு திறக்கப்படும் சப்தம் கேட்டு எழுந்தாள்.

சுந்தர் கதவைத் திறந்துகொண்டு ஹாலுக்குள் வந்து காலணியைக் களைய ஆரம்பித்தான்.

"எங்கே போயிட்டீங்க?" என்று சற்று ஆத்திரத்துடன் அஞ்சலி கேட்டாள்.

"பசிச்சுது. சாப்பிடப் போனோம்."

"குரு?"

"எல்லோஸ்டோனில் இறங்கிக்கிட்டான். நீ இன்னுமா தூங்கலே?"

"ஒரு தூக்கம் தூங்கி எழுந்திரிச்சிட்டேன். சீக்கிரம் ட்ரெஸ் சேஞ்சு பண்ணிட்டு வந்து படு."

சுந்தர் குளியலறை சென்றான்.

வாஷ்பேசினுக்கு மேலே முகம் பார்க்கும் கண்ணாடிக்கும் சுவருக்குமிடையே செருகப்பட்டிருந்த சிறிய குறிப்பேட்டினை எடுத்து ஏதோ எழுதினான். மீண்டும் பழைய இடத்தில் மறைத்து வைத்தான். உடைகளைக் களைந்துவிட்டு பைஜாமா ஜிப்பாவுக்குள் புகுந்தவன் படுக்கையறைக்கு



மூப்பனார் சீரியஸாகப் பேசப் போகிறார் என்றால், அதற்கு முன்பு பாக்குத்தூளைப் போட்டுக்கொள்வார்.

—எஸ்.




வந்தபோது குழல் விளக்கு அணைந்து பச்சை நிற படுக்கையறை விளக்கு எரிந்தது. அஞ்சலி கூரையைப் பார்த்தபடி படுத்திருந்தாள். அவள் விழிகள் மங்கிய வெளிச்சத்தில் பளபளத்தன.

"ஏன் என் கட்டிலை இந்தாண்டை இழுத்துப் போட்டிருக்கே?"

"திடீர்னு என்னிக்காவது ஒரு நாள் நீ என்னை விட்டுட்டு டெல்லிக்கு ஓடப் போறே. உன்கிட்டே அதிகமா நெருங்கினா அப்புறம் அதுக்காக நான் வாழ்நாள் பூராவும் வேதனைப்பட வேண்டியதிருக்கும்."

சுந்தர் தன் படுக்கையில் விழுந்தான்.

"வாழ்நாள் பூராவும்னு சொல்லாதே. அடுத்த பாய் ஃப்பிரெண்ட் கிடைக்கிற வரைக்கும்னு சொல்லு."

"டோண்ட் டாக் ரபிஷ்! என்னை பிராஸ்னு நினைச்சிட்டயா?"

"கோவிச்சுக்காதே. நீ சொன்னதைத்தான் நான் சொன்னேன்."

"நான் என்ன சொன்னேன்?"

சுந்தர் மல்லாக்கப்படுத்து கரங்களை மடக்கி தலைக்குக் கீழே தலையணைபோல வைத்துக் கொண்டு "உன் வார்த்தைகளை அப்படியே டேப்ரிகார்டர் மாதிரி ரிபீட் பண்ணட்டுமா..?" என்று கேட்டான்.

"எப்படி வேணாலும் சொல்."

"நிரந்தரமான காதல், அமரகாதலெல்லாம் சுத்தமான ஹம்பக். உண்மையான காதல் நிரந்தரமா இருக்காது. வரும். போகும். வசந்தம் மாதிரி. பால் கொட்டிப் போயிடுச்சுன்னு அழக்கூடாது. ஒரு பார்ட்னர் விலகிட்டா அடுத்த பார்ட்னரை தேட ஆரம்பிச்சுடணும் அப்படீன்னு ஒரு நாள் சொன்னே. ஞாபகமிருக்கா?"

அஞ்சலி மௌனமாகப் புரண்டு அவனுக்கு முதுகைக் காண்பித்தபடி படுத்தாள்.

"ஏன் பதில் பேசமாட்டேங்கறே?"

அடுத்த ஒரு நிமிடம் அமைதியில் கரைந்தது.

"தூக்கம் வந்திருச்சா அஞ்சலி?"

"உன்னைப் பார்த்ததும் என் பழைய கருத்துக்களையெல்லாம் மாத்திட்டேம்பா."

"காரணம்?"

"எனக்கே தெரியலை. பெண்கள் செக்ஸ் பற்றி பேசினா அல்லது மிகவும் இயற்கையான மிகவும் நியாயமான செக்ஸ் உணர்வை வெளிப்படுத்தினா வேசின்னு முடிவு கட்டிர்றாங்க. என்னைப் பற்றி, என் சொந்த செக்ஸ் வாழ்க்கை பற்றி நான் யார்கிட்டேயும் முழுசா பேசினதில்லே. ஆனா நீ பேச வெச்சுட்டே. என்கூட பழகறவங்க எல்லாருமே, உன்னையும் குருவையும் சேர்த்துத்தான் சொல்றேன், என் பேச்சை வெச்சும், என் சிரிப்பை வெச்சும், என் ட்ரெஸ்ஸை வெச்சும் என்னைப் பற்றி கீழ்த்தரமா தப்புக் கணக்கு போட்டுர்றாங்க. அதைப் பற்றி எனக்கு கவலையில்லே. 'ஆண் ஒரே ஒரு பெண்ணோடு திருப்தியடையறதில்லே, பெண் ஒரே ஒரு ஆணோடு திருப்தியடையறதில்லே. ஆணும் பெண்ணும் இயற்கையிலேயே பாலிகேமஸ் தான்'னு ஒரு புத்தகத்தில் படிச்சதைத்தான் உன்கிட்டே அன்னிக்கு சொன்னேன். நான் அதை சொன்னதினால் என்னையே நீ வேற விதமா நினைச்சிட்டே. என்னைப் பொறுத்த வரைக்கும் குருவைக் கட்டிக்கற வரைக்கும் எனக்கு செக்ஸ் தெரியாது. விவாகரத்துக்கப்புறம் உன் கூட மட்டுந்தான் நான் பழகிக்கிட்டிருக்கேன். இப்ப நீ ஒரு மஞ்சள் கயிற்றை என் கழுத்தில் கட்டிட்டேன்னா எல்லாம் ஒகே ஆயிடும். டிவோர்ஸ் செய்யப்பட்டவளுக்கு மறுவாழ்வு கொடுத்த தியாகின்னு உலகம் உன்னைப் பாராட்டும். பத்தினிப்பட்டமும் மனைவிங்கற அந்தஸ்தும் எனக்கும் கிடைக்கும். அதெல்லாம் எனக்கு வேண்டாம். அன்பில்லாத கணவனோடு உணவுக்காக உடைக்காக உறைவிடத்துக்காக படுக்கிற மனைவிக்கும் வேசிக்கும் வித்தியாசமில்லேங்கறதுதான் என் கருத்து. குருகிட்டே உண்மையான அன்பு எனக்கு கிடைக்காகததினால்தான் கோர்ட் வாசலில் 'மிஸஸ்' பட்டத்தை தூக்கியெறிஞ்சுட்டு வெறும் அஞ்சலியா புது அத்தியாயத்தை ஆரம்பிச்சிருக்கேன்."

"நீ தப்பா நினைக்கலேன்னா ஒரே ஒரு கேள்வி."

"எடக்கா கேட்டேன்னா நான் தப்பாத்தான் நினைப்பேன்."

"எப்படி வேணாலும் நினைச்சுக்கோ. விவாகரத்துக்கப்புறம் என்கூட மட்டும் பழகிக்கிட்டிருக்கிறதா சொன்னே.."

"ஆமா அதான் உண்மை"

"நேத்து உன் மாஜி கணவன் வீட்டுக்குப் போயிட்டு வந்ததா சொன்னியே."

"போகலே"

"அப்புறம்' ஏன் அப்படி சொன்னே?"

"நானும் குருவும் ஒரே மாதிரியா பொய் சொன்னோம்."

"காரணம்?"

"இப்ப அதை நீ தெரிஞ்சுக்க வேண்டாம். குட் நைட்."



**வி**ருந்துகளில் எம்.ஏ. எம்.ராமசாமி கலந்து கொள்ளும்போது சாப்பாட்டில் கவனம் செல்லாது. பெயருக்கு ஏதாவது ஒன்றை எடுத்து கொறித்துக்கொண்டே இருப்பார். உடனிருந்து விருந்து உண்பவர்கள், சாப்பிட்டு முடியும்வரை எழுந்திருக்கவும் மாட்டார்.

–எஸ்

பிர்லா பிளானடோரியத்துக்கு வெளியே சுந்தர் காரை நிறுத்தினான். இறங்கி நடந்தான்.

மணி 4.30.

சற்றுத் தள்ளி விசிறி வாழையின் பக்கம் தனியாக நின்றவளை குரு கூர்ந்து பார்த்தான். கருப்பாக ஆனால் லட்சணமாக இருந்தாள். இருபத்திரண்டு மதிக்கலாம். பிளம் பழத்தின் நிறத்தில் சுடிதார். கருப்புக் கண்ணாடி அவள் முகத்துக்கு எடுப்பாக இல்லை.

சுந்தர் அவளை நெருங்கினான். "எக்ஸ்க்யூஸ் மி... நீங்கதான்.."

"ரேகா"

"நீங்க ரேகான்னா நான் அமிதாப் பச்சன். கொஞ்சம் வாங்க இப்படி" என்று தன் காரின் பக்கம் அவளை அழைத்துச் சென்றான். காருக்குள் கையைச் செலுத்தி ஒரு நீளமான ரஜனிகந்தா பூங்கொத்தை உறையுடன் எடுத்து அவளிடம் நீட்டினான்.

அவள் அதை வாங்கிக் கொண்டு, "தாங்க் யு மகேஷ் சார்" என்றாள்.

"ஹவ் ஆர் யு மிஸ் ஷைனி?" என்றான் சுந்தர்.

"ஃபைன்"

"சீக்கிரமா சொல்லுங்க ஷைனி."

"நிறைய பேசணுமே. எப்படி சீச்கிரமா சொல்றது!"

"அப்ப வேறே எங்கேயாவது போயிடலாம். காரில் ஏறுங்க."

"நான் மொபெட்டில் வந்திருக்கேன். இந்த அட்ரசுக்கு சீக்கிரமா வந்துருங்க. நான் முன்னால போறேன்."

கைக்குட்டைக்குள் கசக்கி வைத்திருந்த ஒரு துண்டுச் சீட்டை சுந்தரிடம் கொடுத்தாள். "நான் வர்றேன் மகேஷ் சார். சீக்கிரமா வந்துருங்க" என்று மீண்டும் சொல்லிவிட்டு தன் மொபெட்டை நோக்கி நடந்தாள் ஷைனி.

ரெங்கராஜபுரத்தில் தனிக் காம்பவுண்டுக்குள் நெல்லி வேப்ப மரங்களுக்கிடையே பாழடைந்த தோற்றம் காண்பித்த அந்த வீட்டைத் தேடிக் கண்டுபிடிப்பதற்குள் சுந்தருக்கு போதும் போதுமென்றாகிவிட்டது.

உடைந்து தொங்கும் சட்டங்களுடன் மரகேட். உள்ளே ஷைனியின் மொபெட் நின்றது. முன் கதவு சாத்தியிருந்தது. வீட்டுக்குள் வேறு யாரும் இருக்கிற அறிகுறி இல்லை.

சுந்தர் காரை திரும்பிச் செல்ல வசதியாக திருப்பி நிறுத்திவிட்டு இறங்கினான்.

கேட்டைத் தள்ளிக்கொண்டு காம்பவுண்டுக்குள் நுழைந்தான். முன் கதவைத் தட்டுவதற்காகச் சென்றான். இரண்டு பாதங்கள் அந்தரத்தில் ஊசலாடுவது ஜன்னலில் தெரிந்தது.

–தொடரும்



சந்தானம் நவீன ஓவியர். பல்வேறு பரிசுகளைப் பெற்றவர். ஓவியர்கள் சினிமாதுறைக்கு ஆர்ட் டைரக்டராக – இயக்குநராக வந்திருக்கிறார்கள். இவரோ நடிகராகி விட்டார்: படத்தைத் தயாரித்து இயக்குபவர் – பாலுமகேந்திரா.

நமது வித்வான்களையெல்லாம் மைசூருக்கு அழைத்துச் சென்று உற்சாகத்துடன் விருந்தோம்பல் செய்து, ஏராளமாய் சன்மானம் அளித்து ஊக்குவிப்பார்.

சின்னத்தனம் என்பதே அவருக்குத் தெரியாது.

இவை இரண்டும்தான் காரணம், விஞ்ஞானி தோற்றதற்கு.

இதனால் சௌடையாவிற்கு இலக்கண இசை ஞானம் இல்லை என்று எண்ணி விடக்கூடாது.

ரொம்ப ஞானஸ்தர்.

அவருடைய ஞானத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்றால், அவர் வெளியிட்ட ஒரே ஒரு நாலு தந்தி ரிகார்டைக் கேட்டிருக்க வேண்டும். அதில் தியாகராஜரின் "ஹரிதேனிருந்தும்" வழங்கி இருக்கிறார்.

அப்படியே சொக்கிப்போய் விடுவீர்கள். இளம் வித்வான்களை ஊக்குவிப்பதில் அவருக்கு நிகர் அவர்தான்.

மனமுவந்து பாராட்டுவார். உற்சாகப்படுத்துவார்.

காலஞ்சென்ற ராமநாதபுரம் கிருஷ்ணன் பாடிய விஸ்தாரமான பேகடா ஆலாபனையை மேடையிலேயே வாய் நிறைய புகழ்ந்தவர்.

யாருக்கும் அஞ்சமாட்டார். பார்ப்பதற்கு பயில்வான் மாதிரி இருப்பார். தப்புத் தண்டாவிற்கு போக மாட்டார். வந்த சண்டையையும் விட மாட்டார். அவர் வாசிக்காத சீனியரே கிடையாது. யாராய் இருந்தாலும் அவருக்கு அக்கறை இல்லை. வெளுத்துக் கட்டி விடுவார். அலங்காரப் பிரியர். வாழ்க்கை வாழ்வதற்கே என்ற கொள்கை உடையவர்.

நன்றாக ரசித்து ருசித்து சாப்பிடுவார், எதையுமே. போலியே கிடையாது. நெற்றியிலே பட்டை அடித்துக்கொண்டு தலைமறைவாய் பட்டை அடிக்கும் காரியம் அவரிடம் கிடையாது. அவர் எங்கிருந்தாலும் வாழ்க.

# சொல்! சொல்! என் உயிரே!

Kt - Q2

சுந்தர் சன்னலை மேலும் நெருங்கியபோது-

சற்றுமுன் பிர்லா பிளானடேரியத்துக்கு வெளியே இளமைத் துடிப்புடன் நின்ற ஷைனி அந்த அறைக்குள்ளே மின்விசிறியிலிருந்து சவமாகத் தொங்கினாள்.

சுந்தர் திகைப்படைந்து திரும்பினான். முன்தினம் அவனைத் துரத்திய அதே சிவப்பு நிற மாருதி ஜிப்சி வீட்டுக் காம்பவுண்டு கேட்டை கடந்து ஓடியது.

இனி கண நேரம் இங்கே தாமதித்தால்கூட வீண் சிக்கல்களில் மாட்டிக் கொள்ள நேரிடும் என்பதை உணர்ந்த சுந்தர் தன் காருக்கு விரைந்தான்.

கார் பத்து நிமிட ஓட்டத்துக்குப் பிறகு எல்லோஸ்டோன் முன் நின்றது.

குரு அங்கே இல்லை. அவன் வசிக்கும் படுக்கையறை பூட்டிக் கிடந்தது. பத்திரிகை அலுவலகப் பகுதியில் சுந்தர் காத்திருந்தான். மணி ஐந்துக்கு மேலாகிவிட்டதால் அங்கேயும் காவலாளியைத் தவிர, வேறு யாரும் இல்லை. அவன் எல்லா கேள்விகளுக்கும் 'தெரியாது' என்ற ஒரே பதிலைச் சொன்னான்.

எட்டேமுக்கால் ஆனபோது தொலைபேசி கூப்பிட்டது.

காவலாளி எடுத்துப் பேசிவிட்டு சுந்தரைக் கூப்பிட்டான். "சார் உங்களுக்குத்தான் போன்."

"யார் குருவா?"

"அஞ்சலியம்மா."

சுந்தர் போனை வாங்கினான். அஞ்சலி பேசினாள்.

"உங்களுக்காக இங்கே நான் சாப்பிடாம காத்துக்கிட்டிருக்கேன். நீங்க பாட்டுக்கு அங்கே உட்கார்ந்துக் கிட்டிருக்கீங்களா?"

"அஞ்சலிதான் பேசறதா?"

"ஏன்?"

"புதுசா மரியாதையெல்லாம் கொடுத்துப் பேசறே. ஆம்பளை வீடு திரும்பறவரைக்கும் வீட்டிலிருக்கிறவ சாப்பிடாமக் காத்திருக்கிறது முடத்தனம்னு பெண்ணுரிமை பேசினே."

"மூடதனமான காரியங்களைத் தான் இனிமே செய்யப்போறேன். அதுசரி, குருவுக்காகவா அங்கே உட்கார்ந்திருக்கீங்க?"

"ஆமா"

"அவன் ரொம்ப லேட்டா ரெண்டு மணி மூணு மணிக்கு வருவான். சமயங்களில் வெளியில் அவனுக்கு ஏகப்பட்ட ஃப்ரெண்ட்ஸ். யார் வீட்டிலயாவது தங்கிக்கிடுவான். காலையில் பார்த்துக்கலாம் வாங்க."

மறுநாள் அதிகாலை ஆறு மணிக்கே அஞ்சலி வீட்டிலிருந்து வெளியேறிவிட்டாள், பத்திரிகை வேலையாக.

சுந்தர் கட்டிலில் சாய்ந்து ஷைனியின் தற்கொலைச் செய்தியை வாசித்துக் கொண்டிருந்தான். கொலையாக இருக்கலாம் என்று

போலீசார் சந்தேகப்படுவதாக பத்திரிகை எழுதியிருந்தது.

பஸ்ஸர் ஒலித்தது.

சுந்தர் கதவைத் திறந்தபோது குரு.

"எங்கே போயிருந்தே நேற்று?"

"உன்கிட்ட நிறைய பேசவேண்டியதிருக்கு. உனக்காகத்தான் சுத்திக்கிட்டிருந்தேன். நைட்டெல்லாம்.

"எனக்காகவா?"

"ஆமா. ஏகப்பட்ட தகவல்கள் சேகரிச்சிருக்கேன். நீ சொன்னது சரிதான். அர்ஜுன் சாகலே, அவன் செத்துட்டதா வந்த தகவல்களெல்லாம் பொய். Deliberate mis information அவன் உயிரோடதான் இருக்கான். இப்போ அர்ஜுன் ஒரு சாதாரண அடியாள். நீ பணம் குடுத்தால் என்னை தாக்குவான். நான் குடுத்தால் உன்னை தாக்குவான். இப்போ அவன்கிட்டே கொள்கையும் கிடையாது. லட்சியமும் கிடையாது."

"ஷைனின்னு ஒரு பெண்ணை நேற்று நான்...."

"குறுக்கே பேசாதே மச்சான். கம்னு கேட்டுக்கிட்டிரு.. உன் மனிசிலேயிருக்கிற கேள்விகளுக்கெல்லாம் நான் பதில் கொண்டு



## மினி நியூஸ்

இலங்கை, இங்கிலாந்து போன்ற நாடுகளுக்கு தனிப்பட்ட முறையில் பதினைந்து நாட்கள் சுற்றுப்பயணம் செய்துவிட்டுத் திரும்பியிருக்கிறார் ராதிகா.







போலியோவைப் பற்றி டி.வி.யில் காட்டப்படும் துண்டுப் படத்தில் ரஜினி நடித்திருப்பது தெரிந்த விஷயம். இப்போது அதே சப்ஜெக்டில் ஏவி.எம். தயாரிக்கும் இன்னொரு துண்டுப் படத்தில் மனோரமாவும், லலிதகுமாரியும் நடிக்கிறார்கள். இயக்குபவர் எஸ்.பி.முத்துராமன்.

சுலக்ஷணா காலில் மெட்டி அணிய மாட்டார். மெட்டியணிந்தால் விரல் புண்ணாகிவிடுகிறதாம். ஆனால் மெட்டிமீது உள்ள ஆசையில் எல்லா தினுசு மெட்டிகளையும் வாங்கிசேர்த்து வைத்திருக்கிறார்.

---

ந்திட்டேன். அர்ஜுன் இப்போ ஒரு ொலைத் திட்டத்தை ஆறுமாசமா ளான் பண்ணிக்கிட்டிருக்கான். வளிநாட்டிலுள்ள ஒரு மல்டி 5ஷனல் கம்பெனிகிட்டே பல ட்சம் டாலர் வாங்கிக்கிட்டு தமிழ் ாட்டைச் சேர்ந்த ஒரு பெரிய நாமிலதிபரை போட்டுத் தள்ள பரிய திட்டமா போட்டுக்கிட்டி க்கான். இந்தத் திட்டத்துக்காக ாபரேஸ் ரோட்டில் ஒரு பெரிய ங்களாவை வாடகைக்குப் டிச்சிருக்கான். அந்த பங்களா க்கு ஞாயிறு ஞாயிறு வர்றான். ாலில் வரமாட்டான். நைட்டில் -க்கிற பார்ட்டியில் வந்து வந்துக்கிற சாக்கில் ஆளோடு ளா வந்து தன் ஆட்களுக்கு த்தரவுகளைப் போட்டுட்டு டிய றதுக்குள்ளே மறைஞ்சிடறான். ந்தக் கொலைத் திட்டத்துக் 'கத்தான் சென்னையைச் சுற்றி

யுள்ள பாலங்களைப் படம் எடுத்துக் கொடுக்கச் சொல்லி தன் ஆட்களுக்கு உத்தரவு போட்டிருக்கான்."

"பாலங்களை படம் பிடிச்சு அதை வெச்சு என்ன பண்ணுவான்?"

"அவன் தீர்த்துக்கட்ட திட்டமிட்டிருக்கும் புள்ளி எந்தெந்த தேதிகளில் எந்தெந்த ஊர்களுக்குப் போகிறார் என்ற விவரங்களை சேகரித்துவிடுவான். அவர் செல்லும் ஊர் தெரிந்துவிட்டால் அவருடைய கார் எந்தப் பாலத்தைக் கடந்து செல்லும் என்பது தெரிந்துவிடும். அப்புறம் அவருடைய கார் பாலத்தைக் கடக்கும் நேரத்தை துல்லியமாகக் கணித்து..."

"கணித்து"

"பாலத்தை பிளாக் பண்ணுவான். பீப்பாய்களை நிறுத்தி, அவருடைய வாகனம் நிற்கும். பின்சீட்டில் சாய்ந்திருக்கும் பிரமுகர் கார் எங்கே, எதற்காக நிற்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள கண்ணாடியைக் கீழே இறக்கிவிடுவார். அந்தச் சமயத்தில் அர்ஜுனின் திட்டம் வெற்றிகரமாக நிறைவேறிவிடும்."

இன்னும் இரண்டு மாதங்களில் அர்ஜுன் அப்பாவாகிவிடுவார். அவர் மனைவிக்கு முன்பு ஒரு மிஸ்காரியேஜாகி அப்பாவாவது தள்ளிப் போய்விட்டது.







ரூபிணிக்கு ஒரு ஆசை. முழுக்க முழுக்க நடனமாடக் கூடிய வாய்ப்புள்ள பாத்திரம் ஒன்றில் நடிக்க வேண்டுமாம்.



இதயத் தாமரையைத் தொடர்ந்து ராஜேஷ்வர் இயக்கப்போகும் படம் 'தொடுவானம்'. இதிலும் கார்த்திக்தான் கதாநாயகன்.

இந்தியில் பெரும்பாலும் துணைப் பாத்திரங்களில்தான் வருகிறார் ரஜினி. அவரை முழுக் கதாநாயகனாகப் போட்டு படம் எடுக்க தயாரிப்பாளர்கள் தயங்குகிறார்கள். சமீபத்தில் வெளியாகியுள்ள 'சால் பாஸ்' படத்தில் சன்னி தியோலுக்குத்தான் முதல் இடம்!

'நிழல்களில் நடித்த சுவிதாவை நினைவிருக்கிறதா? கே. பாலசந்தர் தயாரிக்கும் டி.வி. சீரியலில் இப்போது நடித்துக் கொண்டிருக்கிறார்.

—பானு

---

"அந்தத் தொழிலதிபர் யார்?"

"அவர் யார் அவரை காலி பண்ணச் சொல்லி பணம் கொடுத்தது யார், என்னிக்கு தேதியில் அர்ஜுன் திட்டத்தை நிறைவேற்றப் போகிறான் - இந்த மாதிரி சகல விவரங்களையும் உன்கிட்ட சொல்லத்தான் ஷைனி பிர்லா பிளானட்டோரியத்தில் காத்திருந்தாள். ஆனா அவ உன்கிட்டே எதுவும் பேசலே. காரணம், அர்ஜுனின் ஆட்கள் அவ பின்னாலேயே வந்திட்டாங்க. அங்கேயிருந்து மோப்பெட்டில் ஓடினா. ஆனா தப்பிக்க முடியலே."

"ஷைனி யார்?" என சுந்தர் கேட்டான்.

"உனக்கே தெரியாமலா அவளை சந்திக்கப் போனே?"

"அவ ஒரு இன்ஃபார்மர். அதுக்கு மேலே வேறே எதுவும் எனக்குத் தெரியாது."

"நான் சொல்றேன். அவ அர்ஜுனோட கோஷ்டியைச் சேர்ந்தவ. தொழிலதிபரைத் தீர்த்துக் கட்ட பாலங்களை அர்ஜுனின்



"சமையல் நேரத்துல ஏன் இப்படி சமையல்கட்டுல வந்து உட்கார்ந்து கதை எழுதறீங்க?"

"நல்ல மசாலா நெடி உள்ள கதையா வேணுங்கறார் புரொடியூசர்!"

–வெ.சீதாராமன்

ஆட்கள் படம் எடுத்ததையும், அல்லி போட்டோ ஸ்டுடியோவில் டெவலப்பிங் பிரிண்ட்டிங் போட்ட கொடுத்ததையும் ஷைனிதான் உங்க இலாகாவுக்கு தகவல் கொடுக்கும் போஸ்ட்மேனிடம் சொல்லியிருக்கா. போஸ்ட்மேன் கலீலி ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ் பக்கத்தில் குச்சிக் கிழங்கு சிப்ஸ் வறுக்கிறவன் மூலமா உனக்கு வழக்கம்போல தகவல் அனுப்பியிருக்கார். ரகசியங்கள் ஷைனி மூலமா கசியறதை அர்ஜுன் கண்டு பிடிச்சான். அவளை இல்லாம பண்ணிட்டான்."

"எனக்கு சிப்ஸ் விற்கறவன் மூலமாக தகவல்கள் வந்துக்கிட்டிருந்தது உனக்கு எப்படித் தெரியும்?"

"அர்ஜுன் கூட்டத்துக்குள்ளே நீங்க உங்க டிபார்ட்மென்ட் ஆட்களை விதைச்சிருக்கீங்க. அதே மாதிரி அர்ஜுனுக்கு விசுவாச மானவங்க உங்க டிபார்ட் மென்ட்டில் இருக்காங்க. நான் எப்படிக் கண்டு பிடிச்சேங்கறது முக்கியமில்லே. முக்கியமான விஷயத்துக்கு வந்திர்றேன்."

"என்ன முக்கியமான விஷயம்?"

"அர்ஜுனோட மோபரேஸ் ரோடு பங்களாவுக்குப் பக்கத்திலே இருக்கிற இரண்டு மாடி வீடு காலியாத்தான் இருக்கு. அதை நாம வாடகைக்கு எடுத்துக்கிட்டு அந்த வீட்டிலேயிருந்து அர்ஜுனின் நடவடிக்கைகளை கண்காணிச்சா அவனை சுலபமா மடக்கிப் பிடிச்சிரலாம்."

"என்ன சொல்றே?

"நீ சொல்றதை என்னால் நம்ப முடியலே."

"முதலில் வீட்டை வந்து நீ பாரு. அப்புறம் நம்புவே."

"அதுசரி, அர்ஜுன் ஒரு ரெட் கலர் மாருதி ஜிப்சி வெச்சிருக்கானா?"

"இல்லே"

-தொடரும்.

# சொல்! சொல்! என் உயிரே!

Kt - Q2

"நான் போகிற இடமெல்லாம் ஒரு சிவப்பு மாருதி ஜிப்சி என் பின்னாலேயே வந்துக்கிட்டிருக்கு. அர்ஜுன் என் நடவடிக்கைகளை கண்காணிக்கிறான்னு நினைக்கிறேன்" என்றான் சுந்தர்.

"எனக்கு தெரிஞ்சு அர்ஜுன் கோஷ்டிக்கு அப்படி ஒரு வண்டி கிடையாது மச்சான். ஒருவேளை இப்ப வாங்கினாலும் வாங்கியிருக்கலாம்" என்றான் குரு.

"மோபரேஸ் ரோடு வீட்டுக்கு அட்வான்ஸ் கொடுத்து ஞாயிற்றுக் கிழமைக்குள்ளயே பிடிச்சுடு குரு. இந்த ஞாயிற்றுக்கிழமை அர்ஜுன் பார்ட்டிக்குவர்றப்ப அவன் முகத்தை யாவது நான் முதலில் பார்க்கணும்."

"எல்லா ஞாயிறும் அர்ஜுன் வருவான்னு சொல்ல முடியாது. வந்தாலும் அவனை நம்மால் கண்டு பிடிக்க முடியாது."

"ஏன் ஆவியா வருவானா?"

"அர்ஜுன் எப்படியிருப்பான்னு உனக்குத் தெரியுமா?"

"தெரியும்" என்றான் சுந்தர்.

"அவன் பழைய படம் உன் ஃபைலில் இருக்கு. அந்த முகத்தையெல்லாம் அவன் பிளாஸ்டிக் ஸர்ஜரி பண்ணி எப்பவோ மாத்திக்கிட்டான். இப்ப அர்ஜுனின் ஆட்களுக்கே அவன் எப்படியிருப்பான்னு தெரியாது. பார்ட்டி முடிஞ்சு கும்பல் கலைஞ்சதும் அர்ஜுனின் ஆட்கள் மட்டும் உள்ளேயிருக்கிற ஒரு ஆபீஸ் ரூமில் கூடுவாங்க. அவுங்ககிட்டே அர்ஜுனின் உத்தரவுகளை ரவீந்திர நாத் கொடுப்பார். ஒவ்வொரு வாரமும் அர்ஜுனின் உத்தரவுகள் ரவீந்திர நாத்துக்கு ஒரு கவரில் வந்து சேர்ந்துடும்."

"யார் ரவீந்திரநாத்?"

"ரவீந்திரநாத் கேரளாவைச் சேர்ந்தவர். ரப்பர் எஸ்டேட் ஓனர். பெரிய ஹவாலா ஏஜெண்ட். கருப்புப் பணத்தை ஏற்றுமதி இறக்குமதி பண்ணி கமிஷன் கோடி கோடியா சம்பாதிக்கிறவர். மோபரேஸ் ரோடு பங்களா அவரோடதுதான். தீக்கண்ணன் என்கிற அர்ஜுனுக்கு ஆயுதம் வெடி மருந்து வாங்க பண உதவி செய்ற இன்றைய 'ஸப்போர்ட் சீஃப்' ரவீந்திர நாத்."

"அர்ஜுன் கோஷ்டியில் இப்ப எத்தனை பேர் இருப்பாங்க?"

"நீ என்கிட்டே கேக்கிற கேள்விகளைப் பார்த்தா என்னையும் அர்ஜுன் கோஷ்டியைச் சேர்ந்தவன்னு முடிவு செஞ்சிட்ட மாதிரி இருக்கு."

"அர்ஜுன் கோஷ்டியோட உனக்கு தொடர்பு இருக்கிறதினால் கேக்கறேண்டா."

"இயக்கத்தை இப்ப அவன் ஏறத்தாழ கலைச்சிட்டான். இப்ப ஒரு பத்துப் பதினஞ்சு பேரோட காண்ட்ராக்ட் கில்லர் மாதிரி செயல்பட்டுக்

கிட்டிருக்கான். தெரியாம கேக்கறேன். அவனை உங்க இலாகாவுக்கு ரெக்ரூட் பண்ணி என்ன பண்ணப் போறீங்க?"

"முள்ளை முள்ளால் எடுக்க" என்றான் சுந்தர்.

"அப்படீன்னா?"

"பயங்கரவாதத்தை பயங்கரவாதிகளைக் கொண்டே ஒடுக்க. நாட்டில் எங்கேயாவது பயங்கரவாதம் தலை தூக்குச்சுன்னா அரசாங்கத்தில் 'கவுண்ட்டர் டெரரிஸ்ட் கமாண்டோ ஃபோர்ஸ்' தன் கைவரிசையைக் காட்டி பயங்கரவாதிகளை அழிக்கும். அரசு அமைக்கப்போகிற இந்த புதிய படைக்கு அர்ஜுன் மாதிரி ஆட்கள் தேவைப்படறாங்க."

"தப்பான அணுகுமுறை"

"அதைப்பற்றி விவாதிக்க நான் தயாரா இல்லே. அர்ஜுனை நான் சீக்கிரமா சந்திக்கறதுக்கு ஏற்பாடு பண்ணு."

"நான் என்ன, அர்ஜுனோட பி.ஏ.வா? எனக்குத் தெரிஞ்ச வழிகளைச் சொல்றேன். அப்புறம் உன் சாமர்த்தியம்."

பரந்த மைதானம் போன்ற காம்பவுண்டுக்குள் மோபரேஸ்

## 12



சாலையிலிருந்து ஏறத்தாழ ஒரு பர்லாங் விலகி மரங்களுக்கிடையே உள்ளடங்கியிருந்தது அந்த பழைய மாடி வீடு.

இரண்டாவது மாடிக்கு சுந்தரை அழைத்துச் சென்றான் குரு. சன்னல் கதவுகளைத் திறந்துவிட்டான்.

சுந்தர் சன்னலோரம் சென்று பக்கத்து பங்களா காம்பவுண்டை ஆச்சரியத்துடன் பார்த்தான்.

பசேலென்று அழைப்பு விடுக்கும் புல்தரை. நீலத் தண்ணீருடன் அழகிய சின்னஞ்சிறு நீச்சல் குளம். பங்களாவின் அமைப்பில் பிரிட்டிஷ் காலனி ஆதிக்கம் தென்பட்டது. ஒரு டென்னிஸ் கோர்ட். வண்ணப்பூக்களுக்கு பஞ்சமில்லை. காக்கிச் சீருடை காவலாளிகளும், கன்றுக்குட்டிகள் போல இரண்டு டாபர்மேன் நாய்களும் உலவிக் கொண்டிருந்தன.

"இதுதான் பார்கவி நிலையம் சுந்தர். நாளைக்கு ஞாயிற்றுக்கிழமை. நாளைக்கு சாயந்தரம் பார்ட்டி கோலாகலமா ஆரம்பிச்சதும் நீ உள்ளே நுழையப்போறே. ரவீந்திரநாத்தின் ஆபீஸ் ரூமுக்குள் நுழையப்போறே. உள்ளேயிருக்கிற பீரோவைக் குடைஞ்சு அர்ஜுனின் அடுத்த கொலைத் திட்டம் பற்றிய தகவல்களையும் அவன் தன்னோட ஆட்களுக்கு அனுப்பியிருக்கும் லேட்டஸ்ட் உத்திரவுகளையும் மின்னல் வேகத்தில் படம் பிடிக்கப்போறே. ஓசைப் படாம வெளியே வரப்போறே."

"நான் மெய்ன் கேட் வழியாவே உள்ளே போக முடியுமா?"

"முடியாது. ரவீந்திரநாத்தின் ஆட்கள் வாசலிலேயே நிப்பாங்க. இன்விடேஷன் கார்டு இல்லாதவங்களை உள்ளே விடமாட்டாங்க. காவலாளிங்க ரெண்டு பேரும் பயங்கரக் கில்லாடிங்க. தமிழ் தெரியாத மலையாளிங்க. புதுமுகங்களை சுலபமா அடையாளம் கண்டுபிடிச்சிடுவாங்க."

"அப்புறம் நான் எப்படி உள்ளே போறது?"

"வழி சொல்றேன் வா" என்று குரு அவனை பக்கத்து அறை வழியாக மொட்டைமாடிக்கு அழைத்துச் சென்றான். பார்கவி நிலையத்தின் சுற்றுச் சுவரைக் காண்பித்தான்.

சுமார் ஏழடி உயர சுவரின் மேல் இரண்டடி உயரத்துக்கு முட்கம்பிகளை இழுத்துக்கட்டி வேலி அமைக்கப்பட்டிருந்தது.

குரு சொன்னான் –

"இந்த காம்பவுண்டு சுவரின் வலது கோடியில் இன்னி நைட் கட்டிங் பிளேயரால் கம்பிவேலியை நான் கத்தரிச்சு வெச்சிருவேன், மச்சான். நீ நாளைக்கு இருட்டினப்பறம் ஏழரை மணி சுமாருக்கு, சுவரேறி முள் கம்பிகளை ஜாக்கிரதையா விலக்கிக்கிட்டு மறுபக்கம் குதிப்பே."

"ரெண்டு நாய் என் இடுப்பு உயரத்துக்கு உள்ளே சுத்திக்கிட்டிருக்கே குரு."

"அந்த நாய்களைப் பற்றி கவலைப்படாதே. நீ உள்ளே குதிக்கிற சமயம் ரெண்டும் குறட்டை விட்டுத் தூங்கும்."

"தூங்கும்னு எப்படிரா சொல்றே."

குரு தன் சட்டைப் பைக்குள்ளிருந்த இரண்டு காப்ஸ்யூல்களை எடுத்துக் காண்பித்தான். "இது என்ன தெரியுமா?"



"குருவே, ரொம்ப நேரமா எதைத் தேடறீங்க?"
"என் 'செக் புக்'கை சீடரே!"
–ரசனா

"தெரியலே."

"ஃபீனோபார்பிட்டால். ரெண்டு கிலோ கொத்துக்கறி வாங்கி அதில் இதைக் கலந்து உருண்டையா உருட்டி இருட்டற நேரத்தில் பார்கவி நிலையத்தின் தோட்டத்துக்குள் அங்கேயும் இங்கேயுமாக வீசிடுவேன். நாய்கள் மட்டன் வாடையை மோப்பம் பிடிச்சுடும். உருண்டைகளை ஆனந்தமா சாப்டுட்டு குறட்டை விட்டு தூங்க ஆரம்பிச்சுடும்."

"காவலாளிங்க?"

"காவலாளிங்க ரெண்டு பேர் மச்சான். ஒருத்தன் வாசலைவிட்டு நகர மாட்டான். இன்னொருத்தன் அரை மணி நேரத்துக்கு ஒரு தபா பங்களாவைச் சுற்றி வருவான். அவனை நீ சுலபமா சமாளிச்சிரலாம். அவன் ஒரு ரவுண்டை முடிச்சதும் நீ சுவரேறிக் குதி."

"ரவீந்திரநாத் ரூமுக்குள்ளே எப்படி நுழையறது? அந்தாளு உள்ளேயிருக்கமாட்டான்?"

"பார்ட்டி நேரத்தில் உள்ளேயிருக்கமாட்டான். புல் தரையில்தான் சுத்திக்கிட்டிருப்பான்."

"நான் உள்ளே குடைஞ்சுக்கிட்டிருக்கிறப்ப அவன் உள்ளே வந்துட்டான்னா?"

"அதுக்கு ஒரு ஐடியா பண்ணியிருக்கேன்."

"என்ன ஐடியா?"

"ரவீந்திரநாத் ஒரு விளம்பரப் பிரியன். பத்திரிகைகளைக் கண்டு பயப்படறவன். பத்திரிகைக்காரங்க வந்துட்டா எல்லா வேலைகளையும் தூக்கிப் போட்டுட்டு அவுங்ககூட அரை மணி நேரமாவது பேசுவான். பார்ட்டி ஆரம்பிச்சதும் அஞ்சலி உள்ளே நுழைவா. என் பத்திரிகையின் அடையாள அட்டையை வாசலில் நிக்கறவங்ககிட்ட அவ காட்டினா அவளை ராஜமரியாதையோட ரவீந்திரநாத்கிட்டே அழைச்சுக்கிட்டுப் போயிடுவாங்க. ரவீந்திரநாத்கிட்டே பேட்டிக்கு தேதி கேட்பா அஞ்சலி. ரவீந்திரநாத் பத்திரிகையாளரையும் பெண்களையும் லேசில் திருப்பி அனுப்ப மாட்டான். அஞ்சலி அவன் கிட்டே ஒரு அரை மணி நேரம் தேவையில்லாத கேள்விகளைக் கேட்டுக்கிட்டிருப்பா. மற்ற பிரமுகர்கள் பேச்சிலும் சிரிப்பிலும் தண்ணியடிப்பதிலும் ஈடுபட்டிருப்பாங்க. நாய்கள் மட்டன் உருண்டைகளைத் தின்னுட்டு உறங்கும். அந்த சமயத்தில் நீ அர்ஜுன் அறைக்குள்ளே நுழையறே. உன் 'மாஸ்டர் கீ'யினால் பீரோவைத் திறக்கிறே. அர்ஜுனின் கோப்புக்களை எடுக்கிறே. உன்கிட்டேயிருக்கிற 'இன்ஃப்ரா ரெட் அட்டாச்மெண்ட்'டுடன் கூடிய காமிராவால் முக்கியமான பக்கங்களை படம் பிடிக்கிறே. அங்கிருந்து வெளியேறி யார் கண்ணிலேயும் படாம ஜாக்கிரதையா தோட்டத்துக்குள்ளே நகர்ந்து பழைய இடத்தில் சுவரேறிக் குதிச்சு பத்திரமா இந்தக் காம்பவுண்டுக்




குள்ளே வந்திர்றே. எப்படி நம்ம பிளான்?"

"பிளான் நல்லாத்தான் இருக்கு. அர்ஜுன் ஃபைலின் பக்கங்களைப் படம் புடிக்கறதுக்கு பதிலா ஃபைலையே தூக்கிக்கிட்டு வந்திரலாமே."

"அது தப்பு. அர்ஜுன் டெரரிசத்தை முறைப்படி கத்துக்கிட்டவன். திட்டங்களை முறைப்படி தீட்டி அப்புறம் வெற்றிகரமா நிறைவேற்றுகிறவன். ஃபைல் அல்லது சம்பந்தப்பட்ட தஸ்தாவேஜு களவு போயிடுச்சுன்னா திட்டத்தை உடனே மாற்றிருவான்."

"நீ எங்கே இருப்பே குரு?"

"இந்த ரூமில் இந்த ரேடியோவுக்கு பக்கத்தில் இருப்பேன்" என்று துணியால் மூடி வைத்திருந்த பழைய மாடல் டேப் ரிக்கார்டர் போன்ற சாதனத்தைக் காண்பித்தான்.

"இது என்ன?"

"சொல்றேன்" என்ற குரு தீப்பெட்டியின் சைசில் இருந்த ஒரு அலுமினியம் டிராஸ்மிட்டரை சுந்தரின் சட்டைப் பைக்குள் வைத்தான். அதிலிருந்து வெளிப்பட்ட ஒயரை சட்டையின் மேல் பொத்தான் துவாரத்துக்குள் செலுத்தி சுந்தரின் கழுத்தைச் சுற்றியிழுத்து காலருக்குள் மறைந்திருக்கும் வகையில் வைத்துவிட்டான்.

"என்னடா இது?"

"ஜப்பான் ஸோனி கார்ப்பரேஷனின் புதிய கண்டுபிடிப்பு இது. வாக்கி டாக்கியைவிட சக்தி வாய்ந்தது. நீ அங்கேயிருந்து பேசினா இந்த ரேடியோவில் நான் கேட்க முடியும். அதே மாதிரி இந்த ரேடியோ சாதனத்தில் இருக்கிற மைக்கில் நான் பேசினா நீ எங்கே இருந்தாலும் உனக்கு கேட்கும்."

"எல்லாம் சரி குரு. அஞ்சலியை இதில் சம்பந்தப்படுத்தாதே."

"ஏன்?"

"அஞ்சலிக்கு பதிலா நீ வந்து ரவீந்திரநாத்கிட்டே பேசினா நல்லா இருக்கும்."

"அதான் ஏன்னு கேக்கறேன்."

"அஞ்சலியை இன்னொரு சிக்கலில் மாட்டி வைக்க எனக்கு விருப்பமில்லை."

"அவளுக்கு ஒரு சிக்கலும் வராது மச்சான். ரவீந்திரநாத்தை புல்தரையில் ஒரு அரைமணி நேரம் உட்கார்த்தி வைக்கிற வேலை மட்டும் அவளோடது. அதை அவ கரெக்டா பண்ணிடுவா. நம்ம திட்டங்களையெல்லாம் அவகிட்டே நான் சொல்

லலே. சொன்னா ஒத்துழைப்பு தர மாட்டா."

மறுநாள். ஞாயிற்றுக்கிழமை.

முன்னிரவு எட்டுமணி.

பிரகாசமான வெளிச்சங்களால் பார்கவி நிலையம் களைகட்டியிருந்தது. மாருதிகளும் கான்டெஸ்ஸாக்களும் வந்து குவிந்தவண்ணமிருந்தன.

பங்களாவின் விசாலமான முன் பக்கத்து வராந்தாவில் பேச்சு சிரிப்புடன் 'தண்ணி' கச்சேரி ஆரம்பமாகியிருந்தது. வெள்ளை விரிப்புகளுடன் கூடிய மேசைகளில் உணவு வகைகள்.

புல் தரையில் கும்பலைவிட்டு விலகி அஞ்சலி பிரம்பு நாற்காலியில் சாய்ந்திருந்தாள். எதிரே சபலத்துடன் அவளைப் பார்த்துக் கொண்டிருந்த வழுக்கைத் தலை ரவீந்திரநாத்துடன் மூச்சு விடாமல் ஏதோ பேசிக் கொண்டிருந்தாள்.

டாபர்மேன் நாய்கள் தோட்டத்தின் வெவ்வேறு பகுதிகளில் அமைதியாக உறங்கிக் கொண்டிருந்தன.

சுவரேறிக் குதித்த சுந்தர் செடிகளுக்கிடையே பதுங்கி பங்களாவின் கொல்லைப்புற வாயிலை அடைந்தான்.

பக்கத்து வீட்டு இரண்டாவது மாடியில் குரு ரேடியோ சாதனமருகே பரபரப்புடன் அமர்ந்திருந்தான்.

"குரு! நான் பேசறது கேக்குதா?" என்று ரேடியோ சுந்தரின் குரலில் பேசியது.

"கேக்குது மச்சான், டைம் வேஸ்ட் பண்ணாம ரவீந்திரநாத் ரூமுக்கு போ."

"ரூமுக்கு வழி தெரியலயே."

"சமையற்கட்டு வழியா ஹாலுக்குப் போ. ஹாவில் ஒர்த்தரும் இருக்க மாட்டாங்க. இருந்தாலும் ஜாக்கிரதையா பார்த்துட்டு முன்னேறு. ஹாலுக்குள்ளே நுழைஞ்சதும் லெப்டில் இருக்கிற பெட்ரூம்க்குபோ. அந்த பெட்ரூமுக்கு பின்னாடி இன்னொரு ரூம் இருக்கு. அதுதான் ரவீந்திரநாத் ரூம்."

சுந்தர் பூனையைப் போல ஓசைப் படாமல் சமையற்கட்டை கடந்தான். அப்போது வெளிப்பக்கம் ரோந்து சுற்றிக்கொண்டிருந்த மலையாளிக் காவலாளி சட்டென்று தயங்கி, சன்னலோரமாக வந்து, நகர்ந்து கொண்டிருந்த சுந்தரை ஆச்சரியத்துடன் கவனித்தான். ஆனால் சுந்தர் அவனைக் கவனிக்காமல் முன்னேறி ஹாலுக்குள் மறைந்தான்.

—தொடரும்



மகாராஜா சர்க்கஸில் எடுத்தது
படம் – ஆர்.கண்ணன்


உனக்குச் சம்பள உயர்வு தேவை என்பதைக் காட்டுவதற்கு இப்படியா செய்வது?





# இசை மேதைகள்

வாத்திய நாராணய ஐயங்கார். அபஸ்வரக் களஞ்சியமாகிய இந்த வாத்தியத்தை பயிலுவதற்குள் பைத்தியமே பிடித்துவிடும். அசாத்திய பொறுமை வேண்டும். நாராயண ஐயங்கார் இந்த சாதனையைப் புரிந்தவர். அவருடைய கீர்த்தி பரவி அவருக்கு மைசூர் சமஸ்தானத்தினை ஆஸ்தான வித்வானாக அலங்கரிக்கும் பேறு கிட்டியது.

அசப்பில் பார்ப்பதற்கு அவர் கோட்டு வாத்தியம் மாதிரி இருப்பார். நல்ல எலுமிச்சை பழ நிறம். சுண்டினால் ரத்தம் வரும். அந்த மைசூர் ஜரிகை தலைப்பாகை. இடுக்கண் வந்தாலும் கடுக்கனை கழற்ற மாட்டார். எனக்குத் தெரிந்து அவருக்கு முன்னால் இந்த வாத்தியத்தைக் கையாண்ட ஒரே ஒருவர் சகாராம ராவ். அவரை நான் பார்த்ததுமில்லை கேட்டதுமில்லை. செம்மங்குடியின் பல குருக்களில் இவரும் ஒருவர்.

1934-லோ, 1935-லோ அவர் ரங்கூன் வந்திருந்தார். இந்த வாத்தியத்தின் புதுமையும் அதில் எழும் கம்பீர நாதமும் அதை அவர் வாசிக்கும் நேர்த்தியும் அவருக்கு அமோக வரவேற்பைத் தந்தது. இந்தக் காலத்தில் பாருங்கள். 10 × 10 அறையில் பாடுவதற்கு ஒலிபெருக்கி வேண்டியிருக்கிறது. ரங்கூனில் ரெட்டியார் பள்ளிக்கூடத்தில் 'உள்ள ஆயிரம் பேர் உட்காரக்கூடிய அவையில் அவர் கச்சேரி செய்து, அதிலுள்ள ஒவ்வொரு நுணுக்கமான சங்கதியையும் பளிச்சென்று வாசித்து அவையோரை ஆனந்தக் கடலில் அவரால் மூழ்கடிக்க முடிந்தது என்றால் எவ்வளவு ஆச்சரியம் பாருங்கள்!

ஒவ்வொரு வாத்தியத்திலும் ஒரு குறையும் உண்டு நிறையும் உண்டு.

கோட்டு வாத்தியத்தில் கமகம், கார்வை, குழைவு எல்லாம் அழகாக எழிலோடு வரும். ஆனால் அதில் பிருகாக்கள் பேசவைப்பது ரொம்பக் கடினம். முயன்றால் முழங்கை வீங்கிவிடும். அவர் பேச வைத்தார். அதே மாதிரி துரிதகால ஸ்வர பிரஸ்தாரங்கள் பேசா, பேச வைத்தார்.

மைசூர் சமஸ்தானத்திற்கு தேசீய கீதம் அமைத்துக் கொடுத்தவர் அவர். அவரைப்பற்றி ஒரு குட்டி விமர்சனம் எழுதி ஆனந்த விகடனுக்கு அனுப்பினேன். அதற்கு "கலை கப்பல் ஏறுகிறது" என்று தலைப்பு கொடுத்திருந்தேன். அதில் நான் எழுதியிருந்தேன்— "எப்பொழுதுமே தாயகத்திலிருந்து வெளிநாட்டுக்கு குடிபுகுந்தவர்கள்தான் தாயகத்தின்மேல் ரொம்ப அன்பு வைத்திருப்பார்கள். அதன் கலைகளை இன்னும் ஆர்வத்துடன் கேட்டு ரசிப்பார்கள். பல் இல்லா கிழட்டு பாகவதர்களின் இசை ஒலங்களை கேட்டுக் கேட்டு காது புளித்துப்போன ரங்கூன் ரசிகர்களுக்கு நாராயண ஐயங்காரின் கோட்டு வாத்திய இசை கர்ணாமிர்தமாக இருந்தது" என்று கூறியிருந்தேன். சம்பந்தப்பட்ட பாகவதர் என்னை வைத வசைவு இன்னும் காதில் ஒலித்துக்கொண்டிருக்கிறது.

இந்த கோட்டு வாத்திய மாமேதையின் பேரன்தான் இன்று அந்த வாத்தியத்தில் கொடி கட்டிப் பறக்கிறான். மூன்று வயதிலேயே எந்த ராகம் பாடினாலும் அதை அடையாளம் கண்டுகொள்ளக்கூடிய சக்தி அவனுக்கு இருந்தது. இப்போது அவன் சர்வதேச அங்கீகாரம் பெற்ற மாபெரும் இளம் கலைஞன், அவருடைய மறு பிறவியே.

—சுப்புடு

# சொல்! சொல்! என் உயிரே!

0 — 0

அஞ்சலி புல்தரையில் அமர்ந்து ரவீந்திரநாத்திடம் அவர் வாழ்க்கையில் வளர்ந்த விதம் பற்றி கேள்வி மேல் கேள்வி கேட்டுக் கொண்டிருந்தாள். அவர் சபலக் கண்களால் அவளை அணு அணுவாக ரசித்தபடி அனுப்ப மனமில்லாமல் பேச்சை வளர்த்துக் கொண்டிருந்தார்.

வராந்தாவில் ஆரம்பித்த தண்ணிக் கச்சேரி புல்தரைக்கும் பரவியது.

புல்தரையில் நின்ற கும்பலில் விஸ்கி தம்ளர்களுடன் நாலைந்து மேல்மட்டத்து பெண்களும் தென்பட்டனர்.

மறைந்திருந்த ஸ்பீக்கர் ஆங்கில இசை பரப்பியது.

சுந்தர் ஹாலைக் கடந்து படுக்கையறைக்குள் நழுவினான்.

பக்கத்து பங்களாவின் மாடியில் ரேடியோ சாதனம் முன்னால் அமர்ந்திருந்த குருவுக்கு சுந்தரின் காலடியோசை தெளிவாகக் கேட்டது.

சுந்தர் ஹாலில் யாருமில்லை என்பதை உறுதிப்படுத்தியபிறகு பக்கத்திலுள்ள படுக்கையறைக்குள் நுழைந்தான்.

அதே சமயம் சுந்தரைப் பின் தொடர்ந்த காவலாளி சமையற்கட்டைக் கடந்து ஹாலுக்குள் சுந்தரைப் பின் தொடர்ந்தான். சுந்தர் அவனைக் கவனிக்கவில்லை. படுக்கையறைக்குப் பின்னேயிருந்த அறைக்குள் நுழைந்தான் சுந்தர்.

அந்த அறைக்குள் அரைவட்ட வடிவத்தில் பளபளப்பான மேசை

13



யும் சுழல் நாற்காலியும் ஒரு பக்கமிருந்தன.

மேசையைச் சுற்றி 'ப' வடிவத்தில் ஆசனங்கள் அமைக்கப்பட்டிருந்தன. மூலையில் மார்வாடி கடையில் இருப்பதைப்போன்ற முரட்டு இரும்பு கஜானாப் பெட்டி. அரை ஆள் மட்டத்துக்கு, பக்கத்தில் ஒரு நிலைக் கண்ணாடி.

குரு ரேடியோ சாதனம் மூலமாகக் கேட்டான். "எங்கே நிற்கிறே மச்சான்?"

"நீ சொன்ன அறைக்கு வந்து சேர்ந்துட்டேன் குரு."

"இரும்புப் பெட்டி மூலையில் இருக்கா?"

"இருக்கு."

"அதுக்குள்ளேதான் அர்ஜுனின் உத்தரவு இருக்கும். அதைத் திற."

"என் கிட்டேயிருக்கிற 'மாஸ்டர் கீ'யால் திறக்க முடியாது குரு."

"ஏன்?"



தயிர்வடை தேசிகனைத் தெரியும். நடிகைகளில் தயிர்வடை தேசிகி ஒருவர் இருப்பது பலருக்குத் தெரிய வாய்ப்பில்லைதான்! உடம்பு பூசினாற்போல் சதை போட வேண்டும் என்றால் தயிரோடு வடையைச் சேர்த்து வெளுத்துக் கட்டு என்று சத்யராஜ் அறிவுரை கூறினாராம் கௌதமிக்கு. நாள் ஒன்றுக்கு டஜன் வடையை அரைலிட்டர் தயிரில் ஊற வைத்துச் சாப்பிடுகிறார் கௌதமி.





தன்னுடைய வாழ்க்கைச் சரித்திரத்தை எழுதி, அதை புத்தகமாக வெளியிடத் திட்டமிட்டிருக்கிறார் சிவாஜிகணேசன்.

கேள்வி.– கதாநாயகியாக நடிப்பதற்கு வாய்ப்புகள் வந்தால் கவர்ச்சி நடனத்தை விட்டு விடுவீர்களா?

குயிலி.– கதாநாயகி வேஷமா? யாருக்கு வேண்டும் அந்த பிச்சாத்து வேஷம். ஹீரோயினியாக நடிப்பதற்கு முகம் மட்டும் அழகாக இருந்

"இதில் சாவித்துவாரமே ல்லே. டெலிபோன் டயல் மாதிரி ட்டமா நம்பர்கள் இருக்கு. இதைத் றக்கறதுக்கு ரகசிய கோட் நம்பர் ருக்கும்னு நினைக்கிறேன். கோட் ம்பரை சுழற்றினால்தான் லாக்கர் றக்கும்."

"கோட் நம்பர் அங்கேதான் ங்கேயாவது இருக்கும் மச்சான். ந்த மாதிரி அயல்நாட்டு ரக ாக்கர்களுக்கு கோட் நம்பர் னசில் தங்காத அளவுக்கு நீளமா ருக்கும். அதனால் பெட்டிக்குப் பக்கதிலேயே சுவரில் குறிச்சு வெச்சிருப்பாங்க. நல்லா பார்."

"சுவரில் வால் பேப்பர் இருக்கு குரு."

"வால்பேப்பரில் நல்லா உத்துப் பார். இருக்கும்."

"ஸீனரி இருக்கு குரு. மலை அருவி ஓடையெல்லாம் இருக்கு குரு. இதில் நம்பர் எழுத முடியாது."

"மேசையில் என்ன இருக்கு?"

"பேப்பர் வெய்ட் இருக்கு. மலையாள பத்திரிகை ஒண்ணு கிடக்கு."

மொழிக்குத் தகுந்தவாறு பெயரை செட்டப் செய்து வைத்துக் கொண்டு வெற்றியடைந்து வருகிறார் நிழல்கள் ரவி. மலையாளப் படங்களில் நடிக்கும்பொழுது 'காகா ரவி' என்றும், தெலுங்குப் படங்களில் நடிக்கும்பொழுது 'ரவி பாபு' என்றும் பெயர் மாற்றம் செய்து கொள்கிறார் ரவி.



நுங்கம்பாக்கம் டிராவல் ஏஜன்ஸி ஒன்றில் வேலை பார்த்துக் கொண்டிருந்த அனிதா சுரேஷ், அதை விட்டுவிட்டு மீண்டும் தன்னுடைய பழைய தொழிலுக்கே கணவரின் அனுமதியுடன் சென்று தெலுங்கில் நுழைந்து, புயல் வேகத்தில் ஐம்பது பின்னணிப் பாடல்களைப் பாடி முன்னணிக்கு வந்து கொண்டிருக்கிறார்.



தால் போதும்! ஆனால் கவர்ச்சி நடனம் ஆடுவதற்கு உச்சந்தலை முதல் உள்ளங்கால்வரை மற்றவர்களை கவர்ந்திழுக்கக்கூடிய உடல்வாகு வேண்டும். நான் விரும்பினால் ஹீரோயினியாக நடிக்க முடியும். ஆனால் இப்பொழுதுள்ள ஹீரோயினிகளால் கவர்ச்சி நடனம் ஆட முடியுமா?

–வேலு



"அப்புறம்?"

"டேபிள் காலண்டர் ஒண்ணு இருக்கு."

"அந்தக் காலண்டரை கையில் எடுத்துப் புரட்டிப் பார்."

சுந்தர் குரு சொன்னபடி செய்தான்.

காலண்டரில் இருந்த பன்னிரண்டு தாள்களையும் புரட்டிப் பார்த்தான்.

டிசம்பர் மாதத் தாளின் பின்பக்கத்தில் 28.8.1954 என்றிருந்தது.

28.8.1954 என்பது அர்ஜுனின் பிறந்த தேதியா அல்லது லாக்கரின் கோட் நம்பரா?

முயற்சி செய்து பார்ப்போம் என்று சுந்தர் இரும்புப் பெட்டியின் கதவில் இருந்த டயலில் விரல் வைத்து 2881954 என்ற எண்களைச் சுழற்றிவிட்டு கைப்பிடியைப் பிடித்து முழு பலத்தையும் திரட்டி இழுத்தான்.

"நம்பர் கிடைச்சுதா மச்சான்?"

"ஒரு நம்பர் காலண்டரில் இருந்துச்சு. அந்த நம்பரைச் சுழற்றி





முன்னாள் பிரதமர் மொரார்ஜி தேசாய் நேரம் தவறாமைக்குப் பெயர் போனவர். எவ்வளவு பிசியாய் இருந்தாலும் சொன்ன நேரத்தில் குறிப்பிட்ட இடத்தில் இருக்க வேண்டும் என்றால் அங்கு அதே நேரத்தில் எப்படியோ இருந்து விடுவார்! அதேபோல் டைம்பீஸ்கள்மீது அவருக்கு ஏகக் காதல்! மொரார்ஜி பம்பாயில் இதற்குமுன் குடியிருந்த வீட்டைக் காலிசெய்ய வேண்டும் என்றும் அவர் முடியாது என்றதும், வீட்டுச் சொந்தக்காரர் வழக்கு போட்டதும் தெரிந்த விஷயங்கள். இப்பொழுது தேசிய முன்னணி ஆட்சிக்கு வந்ததும் முன்னாள் பிரதமருக்கு தெற்கு பம்பாயில் ஒரு வீடு ஒதுக்கிக் கொடுத்திருக்கிறது. அந்த வீட்டில் குடியேறியுள்ள தேசாய் படுக்கையில் சாய்ந்தபடி தமது பாக்கெட் கடிகாரத்தைக் கூர்ந்து நோக்கும்போது எடுத்த படம் இது. அருகே அவருக்குப் பிடித்த ஒரு பெரிய அலாரம் கடிகாரமும் குஷனில் குஷியாய்ச் சாய்ந்துகொண்டிருக்கிறது பாருங்கள். — பகவான்ஜி

இழுத்துப் பார்க்கிறேன். திறக்க மாட்டேங்குது."

"அப்படீன்னா அந்த கோட் நம்பரில் வலது கோடியில் இருக்கிற நாலை முதலில் சுழற்று. அப்புறம் வரிசையா வலமிருந்து இடமா எல்லா எண்களையும் சுழற்று. நான் சொல்றது புரியுதா?".

"புரியுது. டிரை பண்ணிப் பார்க்கிறேன்."

சுந்தர் குரு சொன்னவாறு 4591882 என்ற வரிசையில் எண்களைச் சுழற்றினான்.

'கடக் கடக்' என்று விட்டுக் கொடுத்தது லாக்கர்.

இழுப்பதற்காக கைப்பிடியில் கை வைத்தான்.

அப்போது பக்கத்து படுக்கை யறையில் அமைதியாக சுந்தரையே பார்த்துக்கொண்டு நின்ற காவலாளியின் உருவம் பக்கத்திலிருந்த நிலைக் கண்ணாடியில் தெரிய —

திடுக்கிட்ட சுந்தர் யோசிக்காமல் எழுந்து 'திருதிரு'வென்று ஓடிப் போய் 'டமால்' என்று அறையின்

கதவைச்சாத்தி உட்பக்கம் தாழிட்டுக் கொண்டான்.

"என்ன மச்சான் சப்தம்? லாக்கர் திறந்திடுச்சா?"

"திறந்திடுச்சுன்னு தான் நினைக்கிறேன். ஆனா பெரிய ஆபத்தில் மாட்டிக்கிட்டேன் குரு."

"என்ன சீக்கிரம் சொல்லு."

"நான் உள்ளே வந்ததை எப்படியோ ஒரு வாட்ச்மேன் கண்டுபிடிச்சிட்டான். பக்கத்து பெட்ரூமுக்குள்ளே அவன் வந்து நிக்கிறான். நான் கதவைச் சாத்தி உள்பக்கம் தாழ் போட்டுக்கிட்டேன்."

"என்ன மச்சான்! மிஸ்டேக் பண்ணிட்டயே! உன்னை நீயே சிறை வெச்சிக்கிறதா? இப்ப என்ன பண்றது? அவன் ரவீந்திரநாத்தையும் மற்ற ஆட்களையும் கூட்டிட்டு வந்திருவானே. அந்த அறையிலேயிருந்து வெளியேற வேற வழி இருக்கா?"

"வழி எதுவும் கிடையாது."

"டைம் வேஸ்ட் பண்ணாம சீக்கிரமா லாக்கரைத்திறந்து பார்."

சுந்தர் இரும்புப் பெட்டியிடம் ஓடினான். கைப்பிடியைப் பிடித்து இழுத்தான்.

திறந்தது.

மேல்தட்டில் ஒரே ஒரு நீண்ட சதுர ஆபீஸ் கவர் இருந்தது.

கீழ்த்தட்டில் கட்டுக் கட்டாக புத்தம் புது 500 ரூபாய் நோட்டுக்கள். ஒரு செக் புத்தகம்.

செக் புத்தகத்தை எடுத்துப் புரட்டிப் பார்த்துவிட்டு எடுத்த இடத்தில் போட்டான்.

மேல் தட்டில் இருந்த ஆபீஸ் கவரை எடுத்துப் பார்த்தான். கவர் மேல் 'ஆபரேஷன் எக்ஸ்' என்று ஆங்கிலத்தில் ரப்பர் ஸ்டாம்ப். நல்ல வேளையாக கவர் ஒட்டப் படாமலிருந்தது.

"திறந்திட்டேன் குரு. உள்ளே ஒரு கவர் இருக்கு. மேலே ஆபரேஷன் எக்ஸ்னு போட்டிருக்கு."

"அதேதான். அதைப் பிரிச்சு உள்ளேயிருக்கிற காகிதங்களை வெளியே எடுத்து மளமளன்னு

எல்லா பக்கங்களையும் படம் பிடிச்சுடு."

"அந்த வேலையை ஆரம்பிச் சிட்டேன். வெளியே நிற்கிற காவலாளி என்ன பண்ணப்போறான்னு தெரியலயே."

சுந்தர் கவருக்குள்ளேயிருந்து எடுத்த காகிதங்களைப் பிரித்து வாசித்துப் பார்த்தான் புரியவில்லை.

ஆங்கில எழுத்துக்களுடன் எண்களையும் கலந்து வாசிக்க முடியாத வகையில் ரகசிய சங்கேத பாஷையில் டைப் பண்ணப்பட்டிருந்த பக்கங்களை மேசை விளக்கினடியில் வைத்து தன் காமிராவால் படம் பிடித்தான். காகிதங்களை பழையபடி மடக்கி கவருக்குள் திணித்து கவரை இரும்புப் பெட்டிக்குள் வைத்துச் சாத்தி டயலை தாறுமாறாக சுழற்ற இரும்புப்பெட்டி பூட்டிக் கொண்டது.

அடுத்து என்ன செய்யலாம் என்று யோசித்தபோது அறையின் கதவு 'படபட' வென்று தட்டப்பட்டது.

கதவைத் திறந்து காவலாளியை அடித்துப்போட்டுவிட்டு புல் தரைக்குப்போய் அஞ்சலி இருந்தால் அவளருகே போய் அவளை அழைத்துக்கொண்டு பங்களாவின் தலைவாயில் வழியாக கௌரவமாக வெளியேறி விடலாமா?

ரிவால்வர்கூட கையில் இல்லையே. வெளியில் நிற்பவனிடம் என்ன ஆயுதம் இருக்கிறதோ?

வெளியில் எத்தனை பேர் நிற்கிறார்கள் என்று தெரியவில்லையே.

கதவு 'டம டம' வென்று பலமாக இடிக்கப்பட்டது.

திறக்கவா வேண்டாமா என்று சுந்தர் திகைத்தபோது குரு சொன்னான் – "எவ்வளவு பலமா இடிச்சாலும் கதவைத்திறக்காதே. நான் சொல்றவரைக்கும் அசையாம உள்ளேயே இரு."

–தொடரும்.

# காதல் ஒத்திகை

உயிருக்குயிராக காதலித்துவிட்டு பெற்றோர் திட்டியவுடன் பயந்து மனதை மாற்ற முயல்பவர்கள் காதல் ஒத்திகை தொடரை படித்தால் நிச்சயம் தம் காதலை மதிப்பார்கள்.

–எஸ்.எச்.ஷேக்தாவுத், திருச்சி-8

ப.கோ.பி.யின் 'காதல் ஒத்திகை' தொடர்படித்தேன். அசோக்போன்ற கோழைகள் என்றும் காதலில் இறங்கக்கூடாது. உஷா போன்ற தைரியசாலி தைரியமாக இறங்கலாம். பத்து வாரத்துக்குள் முடிக்க வேண்டிய கதையை சவ்வு முட்டாயாக இழு இழு என்று இழுத்து எங்கள் பொறுமையைச் சோதித்து விட்டார் ப.கோ.பி.

–எஸ்.சக்திவேல், சிதம்பரம்

காதல் ஒத்திகை கதைக்கு ம.செ.யின் படம் ஒரு பிளஸ் பாயிண்ட் என்றால் அதைவிட டபுள் பிளஸ் பாயிண்ட், கதை சம்பவத்திற்கு தகுந்தாற்போல் ஒவ்வொரு வாரமும் ப.கோ.பி. எழுதிய புதுக்கவிதை!

அசோக், உஷாவின் காதலுக்காக உயிரைப் பணயம் வைத்து செயல்பட்ட ஜனார்த்தன் ஒரு வித்தியாசமான கேரக்டர். 27 வாரங்கள் எங்களை அசர வைத்த பி.கே.பி.க்கு பாராட்டுகள்.

–வெ. இளங்கோவன், பூந்தோட்டம்

"உள்ளத்தைத் தொட்ட, ஒரு உன்னதமான காதல் ஒத்திகை தொடர்கதை எழுதிய பி.கே.பி. அவர்களுக்கு அன்புமுத்தங்கள்.

–என்.வி.அரசு, சேலம் -14


சிமிழ் – 13 பொட்டு – 8

19–25 ஜனவரி '90

அட்டையில் – ராதா

வண்ணப்படம் –

P – QR 3

பார்கவி நிலையத்தினுள், ரவீந்திரநாத்தின் அறைக்குள் சுந்தர் மாட்டிக் கொண்டு திணறினான்— குழிக்குள் விழுந்துவிட்ட யானை போல.

கதவு 'தடதட'வென்ற இடிபட்டது.

'நான் சொல்லும்வரை திறக்காதே' என்று குரு வேறு உத்தரவு போட்டுவிட்டதால் சுந்தர் பரபரப்புடன் அசையாமல் நின்றான்.

அவன் முகமெல்லாம் வியர்வை. ஆனால் துளிக்கூட அவன் அஞ்சவில்லை.

அஞ்சலி இன்றும் புல்தரையில் ரவீந்திரநாத்துடன் பேசிக் கொண்டிருப்பாளா? அல்லது வெளியேறிச் சென்றிருப்பாளா?

அவள் நினைவு வந்தபோது ஏக்கத்துடன் அவனுக்கு புதுத் தெம்பு கிடைத்தது.

திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தவனாக சுவரிலிருந்த விசையை அழுத்தி விளக்கை அணைத்து அறையை இருட்டாக்கினான்.

14

# சொல்! என் உயிரே!

இதைவிட பயங்கரமான சந்தர்ப்பங்களையெல்லாம் அவன் தன் சர்வீசில் சந்தித்திருக்கிறான். ஆனால்—

ஆயுதம் எதுவுமில்லாமல் மாட்டிக் கொள்வது அநேகமாக இதுதான் முதல் தடவையாக இருக்கும்.

"குரு! குரு!" என்று கூப்பிட்டுப் பார்த்தான். பதில் வரவில்லை.

குரு ரேடியோ சாதனமருகே இல்லையோ? அல்லது என் சட்டைப் பைக்குள் இருக்கும் டிரான்ஸ்மிட்டர் பழுதாகிவிட்டதா?

கதவை காவலாளி உதைத்து உடைத்து உள்ளே புகுந்துவிட்டால் எப்படிச் சமாளிப்பது. எப்படித் தப்பி வெளியேறுவது' என்று தீவிரமாகத் திட்டமிட்டபடி இருளில் தயார் நிலையில் நின்றான்.

"சுந்தர்! சுந்தர்!" என்று குருவின் குரல்.

"என்ன குரு?"

"தாழ்ப்பாளை ஓசைப்படாம விலக்கிட்டு கதவை விருட்னு திறந்துட்டு ஓட்டம் பிடி."

"இதைச் சொல்றதுக்கா இவ்வளவு நேரம்? இதை நான் அப்பவே செஞ்சிருப்பேனே."

"மெய்ன் ஆஃப் பண்றதுக்கு இவ்வளவு நேரம் ஆயிருச்சு மச்சான்."

"எங்கே மெய்ன் ஆஃப் ஆயிருக்கு?"

"பார்கவி நிலையத்தை இருட்டுக்குள்ளே தள்ளிட்டேன். உனக்கு தெரியலயா?"

"எனக்குத் தெரியல. நான் ஏற்கனவே ரூம் லைட்டை ஆஃப் பண்ணிட்டு இருட்டுக்குள்ளேதான் நிற்கிறேன்"

"பங்களாவில் துளிக்கூட வெளிச்சம் கிடையாது. நான் சொன்னபடி சீக்கிரம் செய். இருட்டில் உன்னை யாரும் கண்டுபிடிக்க முடியாது. எப்படியாவது தப்பிச்சு வெளியே வந்துரு. காமிரா பத்திரம். இன்னும் ரெண்டு நிமிஷத்தில் மறுபடியும் விளக்கெரிய ஆரம்பிச்சுரும். லேட் பண்ணாதே."

சுந்தர் துணிச்சலாக தாழ்ப்பாளை விலக்கி கதவை சரேலென்று இழுத்தான். டார்ச்சுடன் நின்ற வாட்ச்மேன் எதிர்பாராமல் கதவு திறந்ததும் திகைப்புடன் சுந்தரைப் பார்த்து ஸ்தம்பிக்க, சுந்தர் மின்னல் வேகத்தில் அவனிடமிருந்த டார்ச்சைப் பறித்து அவன் தலையில் தாக்க 'அம்மே' என்று அலறிக்



கொண்டு அவன் சாய்ந்தான். அவனைத் தவிர அங்கு வேறு யாரும் இருக்கிற மாதிரித் தெரியவில்லை.

சுந்தர் இருளில் 'திடு திடு' வென்று ஓடி படுக்கையறையைக் கடந்து ஹாலுக்குள் சாடினான். உத்தேச மாக சமையற்கட்டின் திசையில் ஓடினான். ஆனால்-

கொல்லைப்புறக் கதவு அவன் தப்பி வெளியேற முடியாத வகையில் பூட்டி வைக்கப்பட்டிருந்தது.

கரங்களால் துழாவிப் பார்த்தான். தாழ்ப்பாள் இருக்குமிடம் தெரியவில்லை. மீண்டும் ஹாலுக்குள் வந்து தலைவாயில் பக்கமாக ஓடினான். வராந்தாவில் தண்ணியடித்துக்கொண்டு நின்றவர்கள் மீது விழுந்து, ஒரு முரட்டு முழங்கையால் இடித்துத் தள்ளப்பட்டு, நாலைந்து பாதங்களை மிதித்துச் சவட்டிக் கொண்டு, வராந்தா விளம்பில் ஏடா கூடமாக கால் வழுக்கிக் கொண்டு செல்ல, தோட்டத்துச்சேற்றுக்குள் விழுந்தான்.

"எவண்டா அவன் மாடு மாதிரி..."

"சீக்கிரமா மெழுகுவர்த்தி கொண்டாப்பா..."

"பவர் கட் இல்லே பக்கத்து வீடுகளில் லைட் எரியுதே..."

என்று பல குரல்கள். "ஆ!" என்று ஒரு பெண்ணின் அலறல். கண்ணாடித் தம்ளர் தரையில் நொறுங்கும் சப்தம்.

திடீரென்று ஆங்கில இசையுடன் பிரகாசமான விளக்குகள் எரிய சுந்தர் குரோட்டன்ஸ் பாத்திக்குள் தோள் மட்ட செடிகளுக்கிடையே நின்றான்.

விருந்தினர் பார்வை அவன் மீது விழுவதற்கு முன் அவசரமாக செடிகளை விலக்கிக்கொண்டு வெளியே வந்தான்.

கருப்புத் தகரமடிக்கப்பட்ட உயரமான மெய்ன்கேட் சாத்தப்பட்டு ஓரத்தில் இன்னொரு காவலாளி.

இவன் கதவைத் திறந்து விடுவானா?

பங்களாவின் பின்புறத்துக்குச் சென்று உள்ளே வந்த மாதிரியே சுவரேறிக் குதித்து வெளியேறி விட்டாலென்ன?

ஒரு டாபர்மேன் நாய் மயக்கம் தெளிந்து உலவத் தொடங்கி யிருந்தது.

சுவரேற முற்பட்டால் இந்த ஜந்து சும்மா விடாது.

என்ன செய்யலாம் என்று யோசித்தபோது வெய்ட்டர் தட்டை அவனெதிரே நீட்ட, அவன் மதுக்கிண்ணத்தையும் குச்சியில் செருகப்பட்ட வாட்டிய இறைச்சித் துண்டையும் எடுத்துக் கொண்டு நகர்ந்தான். எதிரே-

ரவீந்திரநாத்திடம் பேசியவாறு நடந்து வந்த அஞ்சலியைப் பார்த்து விட்டு கையிலிருந்தவைகளுடன் ஒரு கணம் தடுமாறினான். அப்பக்கமாக வந்த வேறொரு வெய்ட்டரின் காலித்தட்டில் கையிலிருந்தவை களை உதறிவிட்டு அஞ்சலியைப் பார்த்துச் சிரித்தான். "முடிச்சுட்டியா? போகலாமா?" என்று கேட்டான்.

"போகலாம்" என்ற அஞ்சலி ரவீந்திரநாத்தைப் பார்த்து "அடுத்த ஞாயிறு மீட் பண்றேன் சார். ஸீ யு" என்றவாறு விடைபெற்றுக்கொண்டு விலகி சுந்தரிடம் வந்து சேர்ந்து



எஸ்.பி. பாலசுப்பிர மணியம் தான் ஆஸ்திரேலியா செல்வதை ஒட்டி ஒரே வாரத்தில் 90 பாடல்களை பாடிவிட்டுச் சென்றாராம்.

—ராம்கே

கொண்டு. "நீங்க எப்ப வந்தீங்க?" என்று கேட்டாள்.

"இப்பத்தான். உன்னை அழைச்சிட்டுப் போகலாம்னு வந்தேன்."

"வாங்க போகலாம்."

இருவரும் கேட் நோக்கி நடந்தனர்.

காவலாளி 'கேட்'டைத் திறந்த போது சுந்தர் ஓரக்கண்ணால் பின் பக்கம் பார்க்க, முதுகைக் காண்பித்துக்கொண்டு புல்தரையில் நடைபோட்ட ரவீந்திரநாத்திடம் சற்று முன் சுந்தரிடம் அடிவாங்கிய காவலாளி டார்ச்சுடன் தள்ளாடியவாறு வந்து ஏதோ சொன்னான். உடனே ரவீந்திரநாத் திரும்பிப் பார்த்தார்.

சுந்தர் சட்டென்று முகத்தைத் திருப்பிக்கொண்டு அஞ்சலியின் கரத்தைப் பிடித்து இழுத்துக் கொண்டு 'கேட்'டைக் கடந்து வெளியே வந்தான். 'கேட்' சாத்தப் பட்டது.

நடைபாதை இருளில் இருவரும் விரைந்தனர்.

"ஏன் விழுந்தடிச்சு ஓடறீங்க?" என்று அஞ்சலி கேட்டாள்.

"ஒண்ணுமில்லே. பசிக்குது. எங்கேயாவது சாப்பிடப் போகலாம். ஆட்டோ! ஆட்டோ!"

பக்கத்தில் வந்து நின்ற ஆட்டோவுக்குள் இருவரும் தாவினர்.

சில நிமிடங்களுக்குப் பிறகு இருவரும் திறந்தவெளி சீன உணவகத்தில் ஒதுக்குப்புறமாகக் கிடந்த மேசை நோக்கி நடந்தனர்.

முன்னிரவு நேரத்தில் அங்கே கும்பல் அதிகமாக இருந்தது.

டீனேஜ் பறவைகள் கார்மீது சாய்ந்துகொண்டு பானட்மீது அமர்ந்து கொண்டும் ஐஸ்க்ரீம் சுவைத்துக்கொண்டு கான்வென்ட் ஆங்கிலத்தில் அரட்டையடித்துச் சிரித்து ஏக அமளி.

"ஆச்சரியமா இருக்கு" என்று அஞ்சலி உட்கார்ந்தும் உட்காராததுமாகச் சொன்னாள்.

"எது?"

"சுந்தர் என்னைத் தேடி வந்தது" என்றுவிட்டு அவன் கண்களையே

பாரதிராஜா படைக்கும் பாத்திரங்கள் 'பளிச்'சிடக் காரணம் என்ன? –69ம் பக்கம் பார்க்கவும்



பார்த்துக்கொண்டு புன்னகை விரித்தாள்.

"You are so beautiful Darling. I love your eyes" என்றான் சுந்தர்.

"கட்டில்களை இன்னிக்கு சேர்த்துப் போட்டிரலாம்னு நினைக்காதீங்க. அது நீங்க டெல்லி போறவரைக்கும் தனித்தனியாத் தான் கிடக்கும்."

"டில்லிக்கு நீ என்கூட வரலியா?"

"வரணுமா?"

"ஆமா"

"எதுக்கு

"நீ வராம நான் போகமாட்டேன்."

"அப்படீன்னா நீங்க பர்மனென்ட்டா மெட்ராசில்தான் இருப்பீங்க" என்றவள் மெனுகார்டைப் பிரித்தாள். "என்ன சொல்ல? நூடில்ஸ்?"

"எது வேணாலும் சொல். உன் இஷ்டம்."

இருவரும் விம்பிள்டன் கோர்ட்டின் பத்தாவது மாடிக்குச்சென்று ஃபிளாட் கதவைத் திறந்தபோது இரவு மணி பத்தரை.

"ரவீந்திரநாத் என்ன சொன்னார்?" என்று சுந்தர் கேட்டான்.

"இன்டர்வியுவுக்கு தேதி கேட்டேன். அடுத்த ஞாயிறு சாயந்தரம் நாலு மணிக்கு வரச்சொல்லியிருக்கார்."

அஞ்சலி நேராக குளியலறைப் பக்கம் சென்றாள். வெளிப்பக்க மிருந்த மின்விசையை அழுத்திவிட்டு கதவைத் திறந்தாள்.

உள்ளே பிரகாசமாக விளக் கெரிந்தது.

வாஷ்பேசினுக்கு மேலேயிருந்த கண்ணாடிக்குள் தன் முகத்தைப் பார்த்தாள். தன் விழிகளைப் பார்த் தாள். "I Love your eyes" என்று சுந்தர் சொன்னது அவள் காதில் ஒலித்தது.

"என் விழிகள் உண்மையிலேயே அழகாகவா இருக்கின்றன! ஐஸ் வைப்பதற்காக சொல்லியிருக்கிறான் என்று தனக்குள் பேசிக் கொண்ட வள் தன் அடர்ந்த கருமையான கூந் தலை வலது தோளுக்கு மேல் விரித் துப்போட்டுவிட்டு அதன் அழகை ரசித்தாள். மினுமினுக்கும் அந்த கூந்தலின் உன்னதமான அழகைத் தவிர உலகில் வேறு எதுவுமே அவ ளுக்கு உறுதியாகத் தெரியவில்லை.

காலணியைத் களைந்து கொண் டிருந்த சுந்தர் வாசலோரம் கிடந்த சதுர தேங்காய் நார் மிதியாயை உற்றுப் பார்த்தான்.

எழுந்து ஓடிப்போய் தன் டார்ச்சை எடுத்து வந்தான். விசேஷ ஸெலு லாய்ட் ஃபில்டர் பொருத்தப்பட்ட டார்ச் லைட் அது.

ஹால் விளக்கை அணைத்துவிட்டு இருட்டில் டார்ச் வெளிச்சத்தை தரையில் அடித்தான். 'தகதக' வென்று தங்க ஆரஞ்சு நிறத்தில் காலடித் தடங்கள் ஒளிர்ந்தன. ஒன்பது சைஸ் கான்வாஸ் காலணி அணிந்த மனிதனின் பாதச்சுவடுகள் ஹாலின் குறுக்காக குளியலறை வரை மின்னின.

சுந்தர் இதயம் படபடக்க பர பரப்புடன் குளியலறை நோக்கிப் பாய்ந்தான். அஞ்சலி அரைகுறை யாக சாத்தி வைத்திருந்த கதவைத் தள்ளிக்கொண்டு உள்ளே ஓடினான்.

உடைகளைக் களைந்துவிட்டு நைட் கவுன் மாட்டிக்கொண்டிருந்த அஞ்சலி வெறித்தனமாக சுந்தர் உள்ளே பாய்ந்ததும் 'வீலெ'ன்று அலறினாள்.

சுந்தர் அவளைக் கட்டிப்பிடித்து வெளியே இழுத்து வந்தான். "கொஞ்ச நேரம் இங்கேயே நில்" என்றுவிட்டு அவன் மட்டும் குளியலறைக்குள் புகுந்தான்.

மேற்கத்திய பாணி ஃபிளஷ் அவுட் கமோடுக்கு மேலேயிருந்த சதுர செராமிக் தண்ணீர் டாங்க்கை ஜாக்கிரதையாகத் திறந்தான்.

உள்ளே தண்ணீர் அதிகமில்லை.

பிளாஸ்டிக் கவருக்குள் பொதியப்பட்டிருந்த அன்னாசிப் பழ வடிவ 'கிரெனேட்' வெடிகுண்டு உள்ளேயிருந்தது. கிரெனேடின் 'பின்'னிலிருந்து புறப்பட்ட ஒயர் தண்ணீர் டாங்க்கின் கைப்பிடியுடன் இணைக்கப்பட்டிருந்தது.

டாய்லெட்டை உபயோகிக்கும் நபர் சுத்தம் செய்வதற்காக கைப்பிடியைத் திருகினால் கிரெனேட் வெடித்து தண்ணீர் டாங்க்கின் சிதறல்கள் பயங்கர வேகத்துடன் உடலைத் தாறுமாறாகக் கிழித்தெறியும்வகையில் கிரெனேட் உள்ளே பொருத்தப்பட்டிருந்தது.

சுந்தர் ஒயரைப் பக்குவமாகக் கழற்றி கிரெனேடை பிளாஸ்டிக் உறையுடன் வெளியே எடுத்து வந்தான்.

"என்ன இது!" ஆச்சரியத்துடன் பார்த்தவாறு அஞ்சலி கேட்டாள்.

"கிரெனேட்!"

"எதுக்கு?"

"என்னைத் தீர்த்துக்கட்ட."

"எங்கே இருந்துச்சு?"

சுந்தர் சொன்னான்.

"வீடு பூட்டியிருக்கிறப்ப யார் உள்ளே வந்து இதை வெச்சிருக்க முடியும்?"

"இங்கே பார்" என்ற சுந்தர் தரையில் டார்ச் அடித்தான். காலடித் தடங்கள் தகதகவென்று மின்னியதை அஞ்சலி விரிந்த விழிகளுடன் பார்த்தாள்.

ஓ...! இப்படி நன்றாகத் துலக்குவதால்தானோ!



கற்பனை – ஜெனிபர்

"காலடித் தடம் தெரியுதா?"

"தெரியுது! எப்படி?" என்று அஞ்சலி கேட்டாள்."

"வாசலோரம் ஃபாஸ்ஃபொரசன்ட் தூளை நான் தூவி வெச்சிருந்தேன். அந்தத் தூள்தான் இப்படி மினுமினுக்குது."

"எதுக்காக நீங்க தூவி வெச்சிருந்தீங்க?"

"அந்நியன் இந்த வீட்டுக்குள்ளே நுழைவான்னு நான் எதிர்பார்த்தேன். நான் எதிர்பார்த்தபடியே நடந்திருக்கு."

"இப்ப உங்க மேலேயே எனக்கு சந்தேகம் வந்திருச்சு. உண்மையிலேயே டி.வி.ஸ்கிரிப்ட் எழுதத்தான் நீங்க இங்கே வந்தீங்களா?"

"கொஞ்சம் இரு" என்ற சுந்தர் மீண்டும் குளியலறைக்குள்ளே ஓடினான். வாஷ்பேசினுக்கு மேலேயிருக்கும் கண்ணாடிக்கும் சுவருக்குமிடையே மறைவாக வைத்திருந்த தன் ரகசியக் குறிப்பேட்டை தேடிப்பார்த்தான். அது அங்கே இல்லை.

தன் சூட்கேஸ் இருக்கும் அறைக்கு ஓடினான்.

சூட்கேஸ் திறந்து துணிமணிகள் வாரியிறைக்கப்பட்டிருந்தன. பயணப்பை வாய் திறந்து சிரித்தது. அவனுடைய டயரியும் வேறு சில முக்கியமான காகிதங்களும் காணாமல் போயிருந்தன.

அதிர்ச்சியுடன் பார்த்தான். அவன் மனதில் படபடப்பு.

அர்ஜுன் என்மீது குறி வைத்து விட்டான்!

இனி நான் மட்டுமல்ல அஞ்சலியும் இங்கே இருப்பது ஆபத்துதான்.

இந்த நள்ளிரவில் எங்கே செல்வது?



இவர்கள் அனைவரும் பல படங்களில் நீதிபதி பாத்திரமேற்று நடித்தவர்கள்.

படங்களுடன் தொகுப்பு.–
எஸ்.விஜயன்.

தொலைபேசி கிணுகிணுத்தது. அஞ்சலி அதை எடுக்க ஓடினாள்.

-தொடரும்



நடிகை ஜெயப்ரதா இதுவரை சுமார் நூற்றைம்பது படங்களுக்கு மேல் நடித்திருக்கிறார். ஆனால் இப்போதுதான் முதன் முதலாக ஒரு இந்திப்படத்தில் இரட்டை வேடத்தில் நடிக்கிறார். படத்தை டைரக்ட் செய்பவர் கே.விஸ்வநாத்.

–'சுவாதி'

# சொல் சொல் என் உயிரே!

**Kt- B4**

அஞ்சலி தொலைபேசியை எடுத்து, "யார் வேணும்?" என்று கேட்டாள்.

"மிஸ்டர் சுந்தரோடு பேசமுடியுமா?" என்று ஒரு ஆண் குரல் பணிவாகக் கேட்டது.

"நீங்க யார்?"

"அவர் ஃபிரெண்டு"

"ஒன் மினிட் பிளீஸ்" என்றவள் தொலைபேசியை சுந்தரிடம் நீட்டினாள்.

சுந்தர், "எனக்கா! .... குருவா?" என்று கேட்டவாறு தொலைபேசியை வாங்கி காதில் பொருத்தி, "எஸ், சுந்தர்" என்றான்.

"இன்னும் நீ உயிரோடுதான் இருக்கியா?"

"உன் புண்ணியத்தில் நல்லபடியா இருக்கேம்பா. உனக்கு என்ன வேணும்?"

"நீ சீக்கிரமா டில்லி புறப்படணும்."

"டிரை பண்றேன்."

"நீயா புறப்படலேன்னா நான் உன்னை அனுப்பி வைப்பேன். வேற இடத்துக்கு."

"டிரை பண்ணு" என்று அமைதியாகச் சொல்லிவிட்டு தொலைபேசியை வைத்தான். மனசுக்குள் குழம்பினான்.

யார் இவன்! அர்ஜுனின் கைக்கூலியா! குரல் எங்கேயோ கேட்ட மாதிரி மிகவும் பரிச்சயமானதாகத் தெரிகிறதே!

"யார் சுந்தர்?" என்று அஞ்சலி கேட்டாள்.

"பழைய ஃபிரெண்ட்."

"என்னவாம்?"

"ஒண்ணுமில்லே..... அவனுக்கு டி.வி.யில் வேலை வேணுமாம்" என்று சமாளித்தான்.

"நான் கேட்டதுக்கு பதில் சொல்லலியே."

"நீ என்ன கேட்டேப்பா? ஸாரி நான் கவனிக்கலே..." என்றவன் அவளிடம் நெருங்கினான். மிகவும் உரிமையுடனும், மிகவும் நேசத்துடனும் அவளுடைய சூடான தளிர் கரங்களைப் பற்றிக்கொண்டு, "வெடிகுண்டை பார்த்த ஷாக்கில் நீ கேட்டது எதுவும் என் காதில் விழலே" என்றான்.

"மெட்ராசுக்கு எதுக்காக வந்தீங்க?"

"சொல்றேன். முதலில் நீயும் நானும் இந்த இடத்திலேயிருந்து

கிளம்பணும்."

"மணி பதினொண்ணு ஆகுது. இந்த ராத்திரியில் எங்கே போகிறது?"

"குரு வீட்டுக்கு."

"நீங்க போங்க."

"ஏன் நீ வரமாட்டியா?"

"நான் இங்கேயே இருக்கேன். எனக்கு என் உயிரைப் பத்தி கவலை இல்லே."

"நம்ம ரெண்டு பேர் உயிரைப் பத்தியும் எனக்கு கவலை இருக்கு. சீக்கிரமா கிளம்பு."

"குரு வீட்டைத் தவிர வேற எங்கே வேணாலும் வர்றேன்."

"இதுகூட குருவோட பத்திரிகைக்குச் சொந்தமான ஃபிளாட் தான்."

"அவனை டிவோர்ஸ் பண்ணின பிறகும் நான் இங்கே தங்கியிருக்கிறது வேற சில காரணங்களுக்காக."

"நான் தெரிஞ்சுக்கலாமா?"

"நீங்க ரொம்ப உயர்வா நினைச்சுக்கிட்டிருக்கிற உங்க நண்பரைப் பத்தி உங்ககிட்டே தப்பா சொல்ல எனக்கு இஷ்டமில்லே."

"பரவாயில்லே சொல்லு."

"சொல்றேன். சொல்ல வேண்டிய சமயம் வரும். உங்களுக்கு வேண்டிய துணிமணிகளை எடுத்துக் கொடுங்க. என் பெரிய சூட்கேசுக்குள்ளே வெச்சு

# 15





"தலைவி ஆணையிடுங்கள்... பகைவர்களை முறியடித்து பரணி பாடவா.. எதிரிகளின் இடுப்புகளை முறித்துப்போட்டு எக்காளமிடவா... என்ன செய்ய வேண்டும்? ஆணையிடுங்கள் தலைவி..."

"இதெல்லாம் இருக்கட்டும். முதலில் என் உயிர்த் தோழியின் புடவைகளை அயர்ன் பண்ணிக் கொண்டு வாரும்."

– சித்தமல்லி ஜெகந்நாதன்

அதை மட்டும் எடுத்திட்டுப் போவோம்."

மாருதி டாக்சிக்குள் ஏறி அமர்ந்ததும் சுந்தர் வாயைத் திறப்பதற்குள் அஞ்சலி டிரைவரிடம் சொன்னாள். "நேரா பட்டினப்பாக்கம் போங்க."

"பட்டினப்பாக்கம் ஏரியாவில் ஓட்டல் இருக்கா?" என்று சுந்தர் கேட்டான்.

"கொஞ்சம் பேசாம வாங்க" என்றாள் அஞ்சலி. டாக்சி டிரைவரை வைத்துக்கொண்டு அவள் எதுவும் பேச விரும்பவில்லை. அவ்வப்போது அவள் டிரைவருக்கு 'லெப்ட் ரைட்' என்று வழி சொல்லிக் கொண்டிருந்தாள். மற்றபடி டாக்சிக்குள் மௌனம் நிலவியது.

இருபது நிமிட ஓட்டத்துக்குப் பிறகு டாக்சி பட்டினப்பாக்கத்துக்குப் பின்புறத்தில் குறுகிய கடலோரச் சாலையில் ஓடியது.

கடல்காற்று 'சில்'லென்று தாக்கவே அஞ்சலி புடவைத் தலைப்பால் முக்காடிட்டுக் கொண்டாள்.

'உங்க நண்பரைப் பத்தி உங்க கிட்டே தப்பா சொல்ல எனக்கு இஷ்டமில்லே' என்று அஞ்சலி சொன்னது சுந்தரின் மனதில் மீண்டும் மீண்டும் ஒலித்தவண்ணமிருந்தது.

டாக்சி இரண்டு வேகத்தடைகள்மீது ஏறி இறங்கி மீனவர் குப்பத்தைக் கடந்து ஏறத்தாழ ஒரு மைல் தூரம் ஓடி கடற்கரையில் தனியாக இருண்டுகிடந்த ஒரு சிறிய வீட்டின் முன் நின்றது.

சுந்தர் பணம் கொடுத்து டாக்சியை திருப்பி அனுப்பினான்.

அஞ்சலி காம்பவுண்டு 'கேட்'டில் தொங்கிய பூட்டைத் திறந்தாள்.

'டமால் டமால்' என்று அலைகளின் இரைச்சல். காற்று அவர்களுடைய தலை மயிரைப் பிய்த்தது.

இருண்ட வீட்டுக்குள் அஞ்சலி துணிச்சலாக நுழைந்து மின் விசைகளை 'பட் பட் பட்' என்று அழுத்த ஹால் விளக்குகள் எரிய ஆரம்பித்தன.

ஆங்கிலோ இந்தியர்களின் வீடுகளைப் போல மேற்கத்திய பாணி உள் அலங்காரம். தரைவிரிப்பில் ஏகப்பட்ட தூசி. ஒட்டடை அதிகமில்லை.

ஒரு குட்டி பியானோவின் மீதிருந்த புகைப்பட பிரேமை எடுத்து வந்து சுந்தரிடம் காண்பித்த அஞ்சலி, "மம்மி டேடி" என்றாள்.

அப்பா வெள்ளைக்காரர்போல இருந்தார்.

"இவுங்கள்ளாம் எங்கே இருக்காங்க?"

"எங்கேயோ இருக்காங்க. இந்த வீட்டை அனாதையா விட்டுட்டு..." என்ற அஞ்சலியின் குரலில் சோகம் தொனித்தது.

திருமணம் என்ற அமைப்பில் இவளுக்கு நம்பிக்கை இல்லாமல் போனதில் வியப்பில்லை என்று சுந்தர் எண்ணிக் கொண்டான்.

"அந்த ரூமை நான் சுத்தப் படுத்திர்றேன். அதுவரைக்கும் நீங்க இங்கேயே இருங்க" என்றாள் அவள்.

"நானும் ஹெல்ப் பண்றேன்" என்ற சுந்தர் உடைகளைக் களைந்துவிட்டு லுங்கி பனியன் தலைப்பாகையுடன் கோதாவில் இறங்கினான். அவனுடைய தோற்றத்தைப் பார்த்து அஞ்சலி குழந்தைபோல விழுந்து விழுந்து சிரித்தாள்.

சுந்தர் வேறு பக்கம் வீட்டைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்த போது அஞ்சலி இணைந்து கிடந்த கட்டில்களைப் பிரித்துப்போட்டு

விட்டு படுக்கையறை சன்னல்களைத் திறந்துவிட்டாள். கடற்காற்று 'குபுகுபு' வென்று உள்ளே பாய்ந்தது.

படுக்கையில் விழுந்ததும் சுந்தர் கேட்டான்.

"மெட்ராசுக்கு எதுக்காக வந்தீங்கன்னு எதுக்காக கேட்டே? திடீர்னு உனக்கு என்ன சந்தேகம்?"

"டி.வி. சீரியல் எழுத வந்ததா நீங்க சொன்னீங்க."

"அதை நீ நம்பலயா?"

"நம்பினேன். பாத்ரூமுக்குள் வெடிகுண்டைப் பார்க்கிறவரைக்கும். நிச்சயமா அது எனக்காக வைக்கப்பட்ட குண்டு இல்லே."

"நான்தான் சொல்லிட்டனே, அது எனக்காக வெச்சதுதான்னு. எங்க குடும்பத்தில் சொத்து தகராறு நிறைய இருக்கு அஞ்சு. அதையெல்லாம் விவரமா உனக்கு சொல்லணும்னா விடிஞ்சிரும்" என்று பொய் சொன்ன சுந்தர் தன்னைக் கூர்மையாகக் கண்காணித்து தக்க தருணத்தில் சந்தேகக் கேள்வியெழுப்பிய அஞ்சலியின் கூரிய அறிவை எண்ணி வியந்தான். குரு, பார்கவி நிலையத்துக்கு பக்கத்து வீட்டில் எனக்காகக் காத்திருப்பானோ? ரவீந்திரநாத்தின் கோட்டையிலிருந்து பத்திரமாகத் தப்பியதை அவனிடம் தெரிவிக்கவில்லையே! நாளைக்கு சந்திக்கும்போது நிச்சயம் திட்டுவான். இனி எந்த உதவியும் உனக்கு செய்ய மாட்டேன் என்பான். அர்ஜுனின் 'ஆபரேஷன் X' திட்டம் புரியாத ரகசிய மொழியில் அல்லவா இருக்கிறது! அதை எப்படி 'டீகோட்' பண்ணி அவனுடைய திட்டங்களைக் கண்டுபிடிப்பது. கண்டுபிடிக்க முடியாவிட்டால் என்ன செய்வது?

விடியும் வேளையில் சுந்தர் கண்விழித்தபோது சன்னலுக்கு வெளியே கண்கொள்ளாக் காட்சி. கடலுக்குள்ளிருந்து தகதகவென்று நெருப்பு நிலாவாக சூரியன் தலைதூக்கியது.

காலடியோசை கேட்டு புரண்டு பார்த்தான்.

அஞ்சலி சூரிய ஒளியை வாங்கி

**தங்க மோதிரத் தொடர்கதை**
**சொல் சொல் என் உயிரே!**

தொடர்கதையை எழுதும் எழுத்தாளர் யார் என்பதை கண்டுபிடித்து விட்டீர்களா? இங்கே உள்ள கூப்பனை நிறைவு செய்து அனுப்புங்கள். சரியான விடையைக் கூறியிருப்பவருக்கு தங்க மோதிரம் பரிசு உண்டு. அதிர்ஷ்டசாலிகள் குலுக்கல் மூலம் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

**ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது**

1) தொடர்கதையை எழுதும் எழுத்தாளர் யார்?

....................................................

2) எழுத்தாளர் இவர்தானென்று கண்டுபிடிக்க நீங்கள் கையாண்ட வழி (மூன்று வரிகளில்)

....................................................

....................................................

....................................................

3) கண்டுபிடித்தவர் பெயரும் முகவரியும்

....................................................

....................................................

....................................................

கூப்பனை குங்குமம் முகவரிக்கு அனுப்பி வையுங்கள். உறையில் **'தங்க மோதிரத் தொடர்கதை'** என்று குறிப்பிடவும். கூப்பனில் வெளிவருகிற விடையே பரிசுக்கு உரியதாகும். அஞ்சலட்டையில் எழுதி அனுப்புவது கூடாது.



## திருவாளர் பொன்னம்பலம்

*பாண்டிச்சேரி பதர்தலுக்காக பணம் வாங்க சோட்டானிக்கரைக்கு போகலாம் என்கிறார்களே! கும்பகோணத்திலே இடி இடித்தால் கோடம்பாக்கத்தில் மழை பெய்யும் என்பது உண்மை ஆகிவிட்டதே!*

---

தங்கமாக ஜொலித்திடும் பவுர்ணமி போல காலை இளம் வெய்யிலுக்கு முகத்தைக் காண்பித்துக் கொண்டு கட்டிலருகே நின்றாள், கரத்தில் சூடான காபி ஏந்தி.

எழுந்து படுக்கையில் சாய்ந்த சுந்தர் "தாங்க் யு" சொல்லிவிட்டு காபியை வாங்கினான்.

கட்டிலில் அவனருகே அமர்ந்த அஞ்சலி "நல்லா தூங்கினீங்களா? என்று கேட்டாள்.

"ம்... நீ?"

"படுத்ததுதான் தெரியும்."

"கடலில் குளிச்சு ரொம்ப நாளாச்சு. இங்கே குளிக்கலாமா?"

"ஓ!"

அலைகளினூடே அஞ்சலியும் சுந்தரும் கட்டிப் புரண்டு விளையாடினர்.

கடற்கரையில் ஈ காக்கை இல்லை.

நீரில் மூழ்கி எழுந்ததும் காலை வெய்யில் அவர்களுக்கு காரமிழந்து இதமாக இருந்தது. நீருக்குள்ளேயே கிடக்க வேண்டும்போல இருந்தது.

ஒரு அலை பொங்கியெழுந்து வந்தபோது சுந்தர் நீருக்குள் மூழ்கி சிறிது நீந்தி அஞ்சலியின் முன்னே எழுந்துநிற்க, அவள் தற்செயலாக கடல் நீரை வாயில் அள்ளி வானம் பார்த்து கொப்பளிக்க, அது காற்றில் கலைந்து ஒரு குட்டி வானவில்லை ஒளிபரப்பிக்கொண்டு சுந்தரின் முகத்தின்மீது வெதுவெதுப்பான தூவானமாகச் சொரிந்து அவன் நாவில் உப்புக் கரித்தது. உடனே—

அஞ்சலி வசீகரமாகச் சிரித்தாள். அவள் சிரித்தபோது அவள்மீது அவனுக்கிருந்த ஆசை இன்னும் அதிகரித்தது. நீச்சலுடையில் அவளுடைய மார்பகங்களின் செழுமை அற்புதமாக வெளிபட்டிருந்தது.

சுந்தர் காதல் பொங்கும் கண்களால் அவளைப் பார்க்க, அவள் தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த முடியாதவளாக அவன் உடம்போடு ஒட்டிக்கொண்டாள். அவர்கள் வாய்களும் ஒட்டிக் கொள்ள, அவனுடைய நாக்கும் அஞ்சலியின் நாக்கும் இரண்டு நாய்க்குட்டிகள்போல கட்டிப் புரண்டு விளையாடின.

ஒரு முழுநிமிடம் அவர்கள் இருவர் என்ற நிலை அழிந்து ஒன்றிப்போன நிலையில் மெய்மறந்திருந்தனர். அதைப் பொறுத்துக்கொள்ள முடியாத பொறாமைக் கடல் பொங்கி எழுந்து பனைமர உயர ராட்சஸ அலையால் அவர்கள் இருவரையும் கீழே சாய்த்தது. அப்போது—

கடற்கரையோரத்துச் சாலையில் ஒரு சிவப்பு மாருதி ஜீப்சி மெதுவாக ஓடியது...

—தொடரும்

# சொல்! சொல்! என் உயிரே!

16

## B – B2

காலை ஒன்பது மணியளவில் சுந்தரும், அஞ்சலியும் வீட்டைப் பூட்டிவிட்டு வெளியேறினர். சுந்தர் ஞாபகமாக காமிராவிலிருந்து பிலிம் ரோலைக் கழற்றி எடுத்துக்கொண்டான்.

வீட்டைச் சுற்றி மனித வாடையற்ற பாலைவன மணல் பிரதேசம். கடல் நீருக்கும், வீட்டுக்கும் இடையே குறுக்கு வசத்தில் பழுப்பு பாறைக் கூட்டங்கள். நெய்தல் பூமிக்குச் சொந்தமான குத்துச் செடிகள். கடலுக்குள் ஒரு விசைப்படகு 'உய்ங்' என்று இரைச்சல் எழுப்பிக் கொண்டு வட்டமடித்து மீன் பிடித்தது.

மணலில் வெகுநேரம் நடந்தனர். அஞ்சலியின் மேல் சாய்வாக அடித்த முற்பகல் வெய்யில் அவள் கன்னத்தைப் பொசுக்கியிருக்க வேண்டும்.

சற்று மேடாக இருந்த திறந்த வெளிப் பிரதேசத்தைக் கடந்தனர்.

சுந்தர் மௌனத்தைக் கலைத்தான். "நடக்கக் கஷ்டமா இருக்காப்பா?" என்று கேட்டேன்.

"டேடி, மம்மியோடு இதே பாதையில் நான் எத்தனை ஆயிரம் தடவை நடந்திருக்கேன் தெரியுமா?"

அஞ்சலியின் குரலில் மாமூலாகத் தொனிக்கும் சோகம்.

"பசிக்குது" என்று விட்டு சுந்தர் அவளைப் பார்த்து பல்வரிசை காண்பித்தான்.

"கடலில் ஒரு மணி நேரம் குளிச்சா பசிக்காம இருக்குமா?" என்றாள் அஞ்சலி.

"பெட் காபி எனக்கு எப்படிக் கொடுத்தே?"

"காலையில் நீங்க எழுந்திரிச்சதும் கருப்புக் காபி கொடுக்கணுங்கறதுக்காக நைட் விம்பிள்டனிலிருந்து கிளம்பினப்ப ஞாபகமா காபித்தூளையும், சர்க்கரையையும் எடுத்து என் சூட்கேசில் வெச்சுக்கிட்டேன்"

"பக்கத்தில் இங்கே கடையே கிடையாதா?"

"பட்டினப்பாக்கம் போகணும். பாத்ரூமில் வெடிகுண்டு இருந்ததை நீங்க ஏன் போலீசுக்குத் தெரிவிக்கக் கூடாது?"

"வேண்டாம். குழப்பம் அதிகமாகும்"

"அந்த வெடிகுண்டை விம்பிள்டனிலேயே விட்டுட்டு வந்துட்டீங்களா?"

"அப்படிச் செய்வனா?"

"என்ன பண்ணினீங்க அதை?"

"விடிஞ்சதும் முதல் வேலையா கடலுக்குள் எறிஞ்சிட்டேன்."

சிறிது தூரம் மௌனமாக நடந்தனர்.

உப்புக்காற்று அஞ்சலியின் உடைகளைப் படபடக்கச் செய்ததினால் ஏற்பட்ட சப்தம், மணலில் அவர்கள் பாதங்கள் இயந்திரகதியில் பள்ளம் பதித்துக்கொண்டு சென்றதால் எழும்பிய 'சரக் சரக்' சப்தம், 'கீய் கீய்' என்றலறியவாறு தலைக்கு மேலே பறந்த கடல் பறவையின் சப்தம் ஆகியவற்றுக்கிடையே நிசப்தம் இரட்டித்தபோது சுந்தர் அளவற்ற காதலுடன் கரத்தை அவளுடைய இடுப்புப் பகுதிக்கு வீசி அவளை இழுத்துச் சேர்த்துக்கொண்டு நடந்தான். அவள் உடம்பின் உஷ்ணத்துடன் வெய்யிலின் வெப்பமும் சேர்ந்து வளவளப்பான இடுப்பு கொதித்தது. ஆனால் அவன் உடம்போடு ஒட்டிக்கொண்டு மணலில் நடைபோட அவளுக்குச் சிரமமாக இருந்ததால் தன் விரல்களால் அவன் கரத்தை மெல்லி விலக்கித் தள்ளிவிட்டு சுதந்திரமாக நடந்தாள். பேருந்து ஓடும் சாலை நெருங்கி வந்தது.

லஸ்ஸில் ஒரு விஹாருக்குள் நுழைந்து காலைச் சிற்றுண்டியை இருவரும் முடித்தனர்.

சுந்தர் தற்காலிகமாக அஞ்சலியைப் பிரிந்து ஆட்டோவில் ஏறினான். அண்ணா மேம்பாலம் பக்கம் இறங்கினான். பொதுத்தொலைபேசி கூண்டுக்குள் புகுந்து சில நிமிடம் பேசிவிட்டு ...திலிருந்த 'டிரைவ்



அடுத்த
இலவச இணைப்பு
'கிலுகிலு' கதைகள்
16 பக்கம்

இன்' உணவக வளாகத்துக்கு நடந்தான். மரத்தடியில் காத்திருந்தான். முக்கால் மணி நேரத்துக்குப் பிறகு அஞ்சலக சீருடையில் ஒருவர் சைக்கிளில் வந்து சுந்தரின் அருகே இறங்கி, "குட்மார்னிங் மகேஷ் சார்" என்றார்.

சுந்தர் பிலிம் ரோலை சுற்று முற்றும் பார்த்துவிட்டு அவரிடம் ஒப்படைத்தான். 'பிரிண்ட் காபினட் சைஸ் போட்டுக் கொடுங்க. இன்னிக்கே வேணும்."

"நாலரைக்கு வந்திருங்க."

"மாமூல் இடத்துக்குத்தானே?"

"ஆமா"

பிலிம் ரோலைப் பெற்றுக்கொண்டவர் சைக்கிளில் ஏறிச்சென்று விட்டார்.

குருவின் பத்திரிகை அலுவலகத்துக்குள் சுந்தர் நுழைந்தபோது அஞ்சலி ஒரு மூலையில் அமர்ந்திருந்தாள். எலெக்ட்ரானிக் தட்டச்சு இயந்திரத்தில் அவள் விரல்கள் நடனமாடின. சுந்தரை பார்த்ததும் தலைநிமிர்ந்து புன்னகைத்துவிட்டு கவனத்தை இயந்திரத்தின் பக்கம் திருப்பினாள். அந்தப் புன்னகை அவன் நெஞ்சின் இடப்புறத்திலிருந்து எதையோ பெயர்த்துச் சென்றுவிட்ட மாதிரி உணர்ந்தான்.

குறுந்தாடி மூக்குக் கண்ணாடியுடன் சாய்ந்திருந்த சப் எடிட்டர் மகேஷ் சுந்தருக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு "போங்க, உள்ளே இருக்கார்" என்றான்.

ஹாலைக் கடந்து குருவின் தனியறைக்குள் சுந்தர் நுழைந்தான்.

"காரியம் முடிஞ்சதும் சொல்லாமக் கொள்ளாம ஓடிப் போயிடறதா மச்சான்? என்ன ஏதுன்னு என்கிட்டே சொல்ல வேண்டாமா? பார்கவி நிலையத்துக்கு வெளியில நான் உனக்காக எப்படி தவிச்சுக்கிட்டு நின்னேன் தெரியுமா?"

"நீ மெய்னை ஆஃப் பண்ணலே, என்னால் தப்பிச்சு வெளியேறியிருக்கவே முடியாது. எப்படிரா செஞ்சே?"

"அதான் என் லோகல் செல்வாக்கு மச்சான்."

"வாட்ச்மேன் என்னை அடையாளங்காட்டி ரவீந்திரநாத்கிட்டே ஏதோ சொன்னான். அதனால் அந்த ஏரியாவில் இருக்கவே பயமா இருந்துச்சு."

"அஞ்சலி வேறே கூட இருந்தா. எனக்கு கடுக்காய் குடுத்துட்டு ஓடிட்டே. அதெல்லாம் போகட்டும். 'ஆபரேஷன்×ஐ' படம் பிடிச்சிட்டயா?"

"புடிச்சிட்டேன். ரோல் பிலிமையும் டெவலப்பில் பிரிண்டிங்க்கு குடுத்துட்டேன். ஆனா அது எந்த அளவுக்கு பயன்படும்னு தெரியலே. எல்லாமே ரகசிய சங்கேத பாஷையில் இருக்கு."

"நீ அதையெல்லாம் உடைச்சிருவே மச்சான். எங்க இலாகாவிலேயே நான்தான் 'பெஸ்ட் ஸைஃபர் மேன்'னு அன்னிக்கு பெருமையடிச்சியே, உன் திறமையால் கண்டுபிடி. அந்த விஷயத்தில் என்னால் எதுவும் செய்ய முடியாது. ஸாரி."

"கண்டுபிடிச்சிருவேன்னு நினைக்கிறேன். முடியலேன்னா டெல்லிக்கு அனுப்ப வேண்டியதிருக்கும். அஞ்சலி மூலமா அனுப்பலாம்னு பாக்கறேன்."

"அவளை நீ எப்படி வேணாலும் உபயோகிச்சுக்கலாம். அதுக்காகத்தான் உனக்கு அறிமுகம் செஞ்சு வெச்சேன். அதுசரி நேத்து நைட்.

## முன்கதை

கல்லூரி நாட்களில் இணை பிரியா நண்பர்களாக இருந்த சுந்தரும், குருவும் ஐந்தாண்டு காலப் பிரிவுக்குப் பிறகு மீண்டும் சென்னையில் சந்திக்கின்றனர்.

சுந்தர் இப்போது டில்லியில் பணியாற்றும் மத்திய அரசின் உளவுத்துறை அதிகாரி. குரு சென்னையில் ஆங்கில வாரப் பத்திரிகை நடத்திக் கொண்டிருக்கிறான்.

'தீக்கண்ணன் என்கிற அர்ஜுன்' என்ற பயங்கரவாதியைத் தேடிக் கண்டுபிடிப்பதே ரகசியமாக சென்னை வந்திருக்கும் சுந்தரின் நோக்கம்.

குரு தன் முன்னாள் மனைவி அஞ்சலியை சுந்தருக்கு அறிமுகம் செய்து வைக்கிறான். அஞ்சலி விவாகரத்துக்குப்பிறகும் குருவின் பத்திரிகையில் பணியாற்றுபவள்.

அஞ்சலியின் பேரழகிலும், அவள் பேச்சுக்களில் தட்டுப்படும் வசீகரமான சோகத்திலும் சுந்தர் மனதைப் பறிகொடுக்கிறான். தன் சதுரங்க ஆட்டத் திறமையால் அஞ்சலியின் இயதத்தில் இடம்பிடிக்கிறான். இருவருக்குமிடையே நட்பு அரும்பி காதலாக மலர்கிறது. இருப்பினும் சுந்தர் தன் சென்னை விஜயத்தின் நோக்கத்தை அஞ்சலிக்கு தெரிவிக்க

---

விம்பிள்டனுக்கு போன் பண்ணினேன். ரெண்டு பேரும் அங்கே இல்லையே. சினிமாவுக்கு போயிட்டீங்களா?"

"அர்ஜுனைப் பிடிக்கிற வரைக்கும் அந்த ஃபிளாட் பக்கம் தலைவெச்சு படுக்க மாட்டேன்."

"காரணம்?"

"நேத்து நைட் பாத்ரூமுக்குள்ளே வெடிகுண்டு இருந்தது."

"வெடிகுண்டா?"

"ஆமா. கிரனேட்."

"காற்று நுழைய முடியாத இடத்தில்கூட அர்ஜுனோட அடியாட்கள் நுழைஞ்சிருவாங்க. இனிமேல்தான் நீ ரொம்ப ஜாக்கிரதையாக இருக்கணும் மச்சான். இப்ப எங்கே, அஞ்சலியோட கடற்கரை வீட்டில் தங்கியிருக்கீங்களா?"

"ஆமா. அஞ்சலி சொன்னாளா?"

"அவகிட்டே நான் இன்னிக்கு பேசவே இல்லே."

**மா**லை நாலரை.

டாக்சியை அண்ணா மேம்பாலம் அருகேயுள்ள சர்ச் எதிரே சுந்தர் நிறுத்தச் சொல்லி இறங்கினான்.

கருப்புக் கண்ணாடியணிந்து பின் ஸீட்டில் அவனருகே சாய்ந்திருந்த அஞ்சலி "நான் வரக்கூடாதா?" என்றாள்.

"ஒரு நிமிஷம் இரு. வந்திர்றேன்" என்ற சுந்தர் வெள்ளைக்காரன் காலத்தில் எழுப்பப்பட்ட அந்த பிரம்மாண்டமான சர்ச் கோபுரம் நோக்கி விரைந்தான்.

ஆலயம் விரியத் திறந்திருந்தது. உள்ளே ஆசனங்கள் காலி. ஆல்டரில் உயரமான சிலுவை.

சுந்தரின் பார்வை நாலாபக்கமும் சுழன்றது.

தூண் ஓரத்தில் ஒரு மனிதர் முழங்கால்களை ஊன்றி தியானத்தில் இருந்தார்.

சுந்தர் அவரை நோக்கி நடந்தான். அவரை நெருங்கி அவர் அருகே அவனும் முழங்கால்களை ஊன்றி நின்றான்.

அந்த மனிதர் இப்போது அஞ்சல் அலுவலகச் சீருடையில் இல்லை. சட்டைக்குள் மறைத்து வைத்திருந்த அகல பிரவுன் கவரை எடுத்து சுந்தரிடம் நீட்டினார். சுந்தர் அதை வாங்கி தன் சட்டைக்குள் மறைத்துக் கொண்டு எழுந்தான்.

டாக்சிக்குள் சுந்தர் ஏறியபோது அஞ்சலி கேட்டாள்.

"என்ன திடீர்னு பக்தி? ஏதாச்சும் வேண்டுதலா?"

"ஆமா. நேத்து வெடிகுண்டு ஆபத்திலேர்ந்து நீ தப்பிச்சதுக்காக காணிக்கை செலுத்தினேன்."

வில்லை. ஆனால் குரு வற்புறுத்தி தெரிந்துகொள்கிறான்.

அர்ஜுனைத் தேடும் பணியில் சுந்தர் அஞ்சலியை அவளுக்குத் தெரியாமலேயே ஈடுபடுத்த, அவள் அர்ஜுனின் ஆட்களால் கடத்திச் செல்லப்படுகிறாள். ஆனால் குரு அவளை சுலபமாக மீட்டுவிடு கிறான். இச்சம்பவத்துக்குப்பிறகு குருவின் உள்ளூர் செல்வாக்கை சுந் தர் பயன்படுத்திக்கொள்ள முடிவு செய்கிறான்.

குரு, அர்ஜுன்பற்றி ஏராளமான விவரங்களைச்சேகரித்துக்கொடுத்து உதவுகிறான் குருவின் உதவியால் பயங்கரவாதி அர்ஜுனின் அடுத்த படுகொலைத் திட்டமான 'ஆபரேஷன் எக்ஸ்' பற்றிய விவரங்கள் சுந்தருக்குக் கிடைக்கின்றன.

சுந்தர் விரைவில் தன் வேலை களை முடித்துவிட்டு டில்லி புறப் படப் போகிறான் என்று எண்ணி அஞ்சலி கலங்குகிறாள். அவள் உள்ளம் கனக்கிறது. டில்லிக்கு அவளையும் அழைத்துச் செல்லப் போவதாக சுந்தர் சொல்லுகிறான். ஆனால் அஞ்சலி ஏனோ தன் ஏக் கத்தையும், கலக்கத்தையும் தனக் குள்ளேயே அழுத்திக் கொள்கிறாள்.

அர்ஜுனுடன் சுந்தர் மோதும் நாள் நெருங்கி வருகிறது.

"இதை கட்டாயம் நம்பியே ஆகணுமா?"

"உன் இஷ்டம்."

இரவுச் சாப்பாட்டுக்காக பூரி, புலாவ் ராய்தா எல்லாம் வாங்கிக் கொண்டு இருவரும் கடற்கரை வீட்டை அடைந்தபோது மாலை மணி ஆறு.

அலைகளைப் பார்த்தபடி பாறை மீது நெருக்கமாக அமர்ந்து நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தனர்.

ஒரு சிவப்பு மாருதி ஜிப்சி அவர் களைக் கடந்து சென்றதை அவர்கள் இருவரும் கவனிக்காமல் ஒருவரை யொருவர் பார்த்தவாறு இருந்தனர்.

"குருவைப் பத்தி சமயம் வரும் போது சொல்றேன்னு சொன்னே..." என்றான் சுந்தர்.

"நல்ல நேரத்தில் அவனை ஏன் இழுக்கறீங்க?"

"அவன் உனக்கு என்ன கெடுதல் பண்ணினான்?"

"என்ன கெடுதல் பண்ணலேன்னு கேளுங்க. கிளியோபாட்ரா இறந்தப் பறம் பழைய எகிப்திய சடங்காச் சாரப்படி அவ உடம்பு மூன்று நாட்கள் அடக்கம் பண்ணப்படல யாம். அந்த மூன்று நாட்களில் கிளியோபாட்ரா பலமுறை கற்பழிக் கப்பட்டதா சரித்திரம் சொல்லுது. பெண் செத்தப்புறம்கூட கற்பழிக்கிற ஆம்பிளை இருப்பானான்னு அதிர்ச்சியடையாதீங்க. உங்க நண் பர் குரு அந்த ரகத்தைச் சேர்ந்தவர் தான்..." என்று வேதனையோடு சொன்னாள்.

"அப்புறம் ஏன் அவனோட பத் திரிகையில் வேலை பார்க்கிறே?"

அஞ்சலி மௌனமாக இருந்தாள்.

"இந்தக் கேள்வியை நான் பல தடவை உன்கிட்டே கேட்டுட்டேன்."

அஞ்சலியின் மௌனம் நீடித்தது. அவள் கன்னங்களில் இருந்து கண் ணீர் வழிந்தது.

"ஸாரி. நல்ல மாலை நேரத்தை ஸ்பாயில் பண்ணிட்டேன்" என்ற சுந்தர் விரலால் அவள் கண்ணீரைத் துடைத்தான்.

நள்ளிரவில், அஞ்சலி உறங்கிய பிறகு சுந்தர் ஓசைப்படாமல் எழுந் தான். ஹாலுக்கு சென்றான். விளக் கைப் போட்டு சர்ச்சில் வாங்கிய பிரவுன் கவரைப் பிரித்து உள்ளே யிருந்த புகைப்படங்களை வெளியே எடுத்தான். அப்போது–

ஆந்தையின் பயங்கர அலறல் கேட்டு திடுக்கிட்டு கண்விழித்த அஞ்சலி புரண்டு பார்த்தாள். சுந்த ரின் படுக்கை காலி! எழுந்து ஹாலுக்கு நடந்தாள்.

–தொடரும்

# சொல்! சொல்! என் உயிரே!

17

## P-K 5

முதுகுக்குப் பின்னே அஞ்சலி வந்து நின்றதை சுந்தர் கவனிக்கவில்லை.

விளக்கு வெளிச்சத்தில் சுந்தர் பரப்பி வைத்திருந்த புகைப் படங்களை அஞ்சலி விழி விரித்துப் பார்த்தாள்.

ஒவ்வொரு புகைப்படத்திலும் தட்டச்சு வரிகள்.

அஞ்சலி சற்று குனிந்து சுவாசத்தைக் கட்டுப்படுத்திக்கொண்டு புகைப்படங்களைக் கூர்ந்து பார்த்தாள்.

வாசிக்க முடியவில்லை. 'M X 8 B4KK..' என்று ஆங்கில எழுத்துக்களும் எண்களும் கலந்த சங்கேத மொழி.

'எதுவாக இருந்தால் எனக்கென்ன' என்று ஓசைப்படாமல் பின் வாங்கினாள்.

படுக்கையில் புரண்டபோது அவளுக்குள் மழைக்குப் பின் தோன்றும் காளான்களாய் கேள்விக்குறிகள்.

இவையெல்லாம் என்ன படங்கள்!

இவன் நள்ளிரவில் இந்த படங்களை வைத்துக்கொண்டு என்ன ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறான்!

சர்ச்சுக்குள் இவனுக்கு என்ன வேலை?

கிரனேட் வெடிகுண்டை பாத்ரூமிற்குள் வைத்தது யாராக இருக்கும்?

இவன் எழுதுவதாகச் சொல்லிக் கொண்டிருக்கும் டி.வி. ஸ்கிரிப்டுக்கும் இவன் செய்யும் வேலைகளுக்கும் சம்பந்தமிருப்பதாகத் தெரியவில்லையே!

பலவாறாகச் சிந்தித்தபடி தூங்க முயற்சித்தாள். ஒரு மணி நேரத்துக்குப் பிறகு, தூக்கத்தால் கனத்திருந்த இமைகளை மேலேற்றி சுந்தரின் படுக்கையைப் பார்த்தாள். காலியாகவே இருந்தது. 'தடால் தடால்' என்று இடைவிடாமல் அலையோசை. குப்புறக் கவிழ்ந்து படுத்து தலையணையைக் கட்டியணைத்துக் கொண்டு பெருமூச்சை வெளியேற்றினாள். அவள் விழிகள் ஏனோ கசிந்தன. அதே சமயம்–

சுந்தர் அகராதி போன்ற ஒரு புத்தகத்தை விரித்து வைத்துக் கொண்டு புகைப்படங்களில் தென்பட்ட வரிகளின் அர்த்தத்தைக் கணிப்பதில் தீவிரமாக ஈடுபட்டிருந்தான்.

கடலுக்குள்ளிருந்து தங்கத் தாம்பாளம் எழும்பும் நேரத்தில் அர்

ஜானின் ரகசிய மொழி சிறுகச் சிறுக கலகலத்துத் தகர்ந்தது. அவனுடைய 'ஆபரேஷன் எக்ஸ்' திட்டம் அரை குறையாக சுந்தருக்கு புலப்பட்டது.

குருவை அவனுடைய இருப்பிடத்தில் சுந்தர் சந்தித்தபோது முற்பகல் 11.30.

அஞ்சலி அலுவலகப் பகுதியில் ஏதோ எழுதிக் கொண்டிருந்தாள்.

சுந்தரும் குருவும் அறையைத் தாழிட்டுக்கொண்டு விவாதித்தனர்.

"என்ன மச்சான், டீகோட் பண்ணிட்டயா?"

"பண்ணிட்டேன் குரு. ஆனா சரியா புரிபடலே. அர்ஜுன் திட்டத்தின் முக்கியமான வரிகள் இதுதான்" என்று ஒரு காகிதத்தை நீட்டினான், சுந்தர்.

குரு வாங்கி வாசித்துப் பார்த்தான்.

"ஐந்து நண்பர்களுக்கும் அவசர சுற்றறிக்கை–

நண்பர் 'ஏ' நண்பர் 'பி' மூலமாக ஒரு லாரி தயார் செய்ய வேண்டும். லாரி ஞாயிறு இரவு நண்பர் 'சி'யிடம் ஒப்படைக்கப்பட வேண்டும்.

நண்பர் 'சி' அந்த லாரியை திங்கள் காலை 7.00 மணிக்கு செங்கல்பட்டுக்கும் மாமண்டூருக்கும் இடையிலுள்ள மிக நீளமான பாலத்தினருகே தயார் நிலையில் வைத்திருக்க வேண்டும்.

நண்பன் 'டி' அதே சமயம் சென்னை விமான நிலையத்துக்கு வெளியே காத்திருக்க



வேண்டும். விமான நிலையத்திலிருந்து இறங்கும் 'எக்ஸ்' வெளியே வந்து அவருக்காகக் காத்திருக்கும் வெள்ளை 'பென்ஸ்' வண்டியில் ஏறுவார். அவர் பின்சீட்டின் வலப்புறம் ஜன்னல் ஓரமாகத்தான் சாய்வார்.

பென்ஸ் விமான நிலையத்தை விட்டு வெளியேறும்போது நண்பர் 'டி' செங்கல்பட்டின் தெற்கு எல்லையில் காத்திருக்கும் நண்பர் 'ஈ' க்கு ரேடியோ தகவல் அனுப்ப வேண்டும்.

பென்ஸ் செங்கல்பட்டைக் கடக்கும்போது நண்பர் 'ஈ' பாலத்தினருகே லாரியில் காத்திருக்கும் நண்பர் 'சி' க்கு தகவல் தெரிவிக்க வேண்டும்.

நண்பர் 'சி' பைனாகுலர் மூலமாக பின்பக்கம் பென்ஸ் வரும் திசையில் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். பென்ஸ் கண்ணில் பட்டதும் லாரியைக் கிளப்ப வேண்டும். பாலத்தில் மிகவும் மெதுவாகச் செலுத்த வேண்டும்.

பென்ஸ் வண்டியும் வேகத்தைக் குறைத்து லாரிக்குப் பின்னே ஊர்ந்து வரும். நடுப்பாலத்தில் லாரி சற்று வலப்புறமாகத் திரும்பி பாலத்தை அடைக்கும் வகையில் உடன் பிரேக் போடவேண்டும்.

'எக்ஸ்' பயணம் செய்யும் பென்ஸ் எக்காரணத்தைக் கொண்டும் முன்னேறிச் செல்ல இடமளிக்கக்கூடாது.

செலவுகளுக்கு 25 ஆயிரம் சாங்ஷன் செய்யப்படுகிறது.

–அர்ஜுன்.

வாசித்து முடித்த குரு தீவிர யோசனையுடன் சுழல் நாற்காலியில் சாய்ந்து கூரையைப் பார்த்தான். தொலைபேசி 'ணங ணங'வென்று அழுகுரல் எழுப்ப, குரு அந்தைத் தாயின் மடியிலிருந்து எடுத்து தனியாக வைத்தான்.

சுந்தர் குருவையே ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தான். "என்ன குரு பேசமாட்டேங்கறே? ஏதாச்சும் புரிஞ்சுதா?"

"உன்கூட பேசவே எனக்குப் பயமா இருக்கு மச்சான்!"

"ஏன்?"

"அர்ஜுனோட அடுத்த பிரம்மாண்டமான கொலைத் திட்டத்தையே வெற்றிகரமா கைப்பற்றி கொண்டு வந்திட்டயே! நீ இங்கே வர்றது போறது அர்ஜுனுக்கு தெரிஞ்சா என் வீட்டுக்கும் குண்டு வெச்சுருவான் அந்தக் கொலை பாதகன்."

"எதுக்காக மாமண்டூர் பாலத்தில் லாரியை நிறுத்தி வழியை பிளாக் பண்ணச் சொல்லி தன் நண்பர்களுக்கு உத்தரவு போட்டிருக்கான்?"

"மாமண்டூர் பக்கத்தில் ஒரு ரெட்டைப்பாலம் இருக்கு. ரயில்

## அட்டையில்...

குங்குமம் இதழில் வெளிவந்த அறிவிப்பைப் பார்த்து, அழகிய இளம்பெண்கள் நிறையப்பேர் ஆர்வத்தோடு தங்கள் வண்ணப் புகைப்படங்களை அனுப்பியுள்ளனர். தேர்ந்தெடுக்கப்பட்ட முதல் படம் இவ்விதழ் அட்டையில் இடம் பெற்றுள்ளது. மேலும் இதுபோல் பலரது படங்கள் தொடர்ந்து அவ்வப்போது வெளியாகும். அப்படி வெளியாகும் அட்டைகளில் உள்ள சிறந்த அழகியார் என்று ஆண்டு இறுதியில் வாசகர்களே தேர்வு செய்வார்கள். சிறந்த அழகிக்கும், தேர்வு செய்த வாசகருக்கும் பரிசு உண்டு. குங்குமம் அட்டைப் படத்தில் இடம்பெற விரும்பும் அழகிய பெண்கள் தங்கள் வண்ணப் படங்களை அனுப்பலாம்.

இந்த இதழ் அட்டையில்......

### செல்வி ரத்னமாலா பிள்ளை.

பெங்களூரைச் சேர்ந்த வாசகர். அப்பா குதிரைப் பந்தயக் குதிரைகளுக்கு பயிற்சியளிக்கிறார். ரத்ன

தண்டவாளம் மாதிரி இரண்டு பாலமும் ஒட்டினாப்பல இருக்கும். ஒரு பாலத்தில் லாரியால் பென்ஸ் வண்டியைத் தடுத்து நிறுத்தச் சொல்லியிருக்கான்."

"எதுக்கு?"

"பென்ஸ் நிற்கறப்ப அர்ஜுன் பைக்கில் அடுத்த பாலத்தில் பறந்து போவான். போகிற போக்கில் ஜெனரல் வைத்யாவை சுட்டமாதிரி பென்ஸ் வண்டியின் பின்பக்கத்தில் சாய்ந்திருக்கும் 'எக்ஸை' சுட்டுத் தள்ளிட்டுப் போயிடுவான்."

"யார் அந்த எக்ஸ்?"

"விவேக் பிரபு?"

"யார் அவன்?"

"இந்தியன். என்.ஆர்.ஐ. அயல் நாட்டில் வசிக்கும் இந்தியன்."

"அவன்மேல் அர்ஜுனுக்கு என்ன கோபம்?"

"விவேக்பிரபு மேல் அர்ஜுனுக்கு எந்த கோபமும் இருக்காது. விவேக் பிரபுவை காலிபண்ணினா குறைஞ்சது ஒரு கோடியாவது இவனுக்கு கிடைக்கும்."

"யார் ஒரு கோடி கொடுத்து..."

"கம்னு இரு. முழுசையும் சொல்லிர்றேன். மெட்ராசுக்கு தெற்கே மாமண்டூர் பக்கத்தில் 'பிரம்மா' மோப்பெட் மற்றும் பைக் தொழிற்சாலை இருக்கு. தெரியுமா?"

"ஆமா இருக்கு"

"அந்த 'பிரம்மா'வை 'டேக் ஓவர்' என்கிற பெயரில் விழுங்கத் திட்டம் போட்டிருக்கான் விவேக் பிரபு. இந்தியாவில் தனக்கிருக்கும் செல்வாக்கை பயன்படுத்தி ரிசர்வ் பாங்கிற்கு கடுக்காய் கொடுத்துட்டு அந்நியப் பணம் 90 கோடியை இறக்குமதி பண்ணி 'பிரம்மா'வின் கணிசமான ஷேர்களை விலைக்கு வாங்கிட்டான். பிரம்மா நிறுவன சேர்மனும் போர்ட் அஃப் டைரக்டர்களும் இந்த சட்ட விரோத 'டேக் ஓவர்' திட்டத்தை முறியடிக்க எல்லா வழிகளிலும் முயற்சி பண்ணி தோத்துப்போயிட்டாங்க. கடைசியில், டேக் ஓவரைத் தடுக்க ஒரே வழி விவேக்பிரவுவை இல்லாமப் பண்றதுதான்னு பிரம்மா கம்பெனி சேர்மனுக்கு தோணியிருக்கும். அந்த வேலையை முடிக்க அவர் தன் தம்பி ரவீந்திரநாத் மூலமா..."

"எந்த ரவீந்திரநாத்!"

"பார்கவி நிலையத்தில் நீ பார்த்தியே அதே ரவீந்திரநாத் மூலமா அர்ஜுனை என்கேஜ் பண்ணியிருப்பார். இதை உடனே நீ போலீஸ் கமிஷனருக்கு தெரிவிச்சிர்றதுதான் முறை. இல்லேன்னா விவேக் பிரபுவோட உயிருக்கு நீதான் பொறுப்பேற்கணும்."

"நான் பொறுப்பேற்கிறேன் குரு. திங்கள் காலை அர்ஜுனா நானான்னு பார்த்திர்றேன்."

"என்னை எதுலயும் மாட்டி விட்டுராதே மச்சான்."




மாலா கர்நாடகா என்.சி.சி.யில் முதலாவதாகவும், இந்தியாவில் மூன்றாவது நபராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டு பரிசு பெற்றிருக்கிறார். இவரது தந்தைக்கு பூர்வீகம் திருச்சி. பரதநாட்டியம், வீணை ஆகியவற்றில் பயிற்சிபெற்ற இவர் பத்தாம் வகுப்பு படிக்கிறார்.



"உங்க பெண்ணைக் காணோம் என்றால் போலீஸ் ஸ்டேஷனுக்குத் தானே ஃபோன் பண்ணணும். நீங்கள் ஃபயர் சர்வீஸ் ஸ்டேஷனுக்குப் ஃபோன் பண்றீங்களே?"

"என் எதிர்வீட்டில் குடியிருந்த ஃபயர் சர்வீஸிலே வேலை பார்த்த பையனையும் காணோம் சார்!"

– சித்தமல்லி ஜெகந்நாதன்

"ஐந்து நண்பர்களுக்கு அறிக்கைன்னு இருக்கே!"

"ஆமா. இப்போ அர்ஜுனை பின்பற்றுகிறவங்க அஞ்சே பேர் தான்னு தெரியுது. அதுலகூட ரெண்டு பேர் பெண்கள்னு நினைக்கிறேன்."

"எதை வெச்சுச் சொல்றே?" என்று சுந்தர் கேட்டான்.

"அஞ்சலியை ரெண்டு பெண்கள் தானே கடத்திட்டுப் போனாங்க. மறந்துட்டியா?" சிரித்தான் குரு.

பிற்பகல்.

வெய்யில் காரமிழக்கும் வேளையில் சுந்தர் ஃபியட்டை வேகமாகச் செலுத்தினான்.

"எதுக்காக இந்தப் பக்கம் போறோம்?" என்று பக்கத்தில் கருப்புக் கண்ணாடியுடன் அமர்ந்திருந்த அஞ்சலி கேட்டாள்.

குரு சொன்னமாதிரியே இரண்டு பாலங்கள் வந்தன.

சுந்தர் இடப்புறமிருந்த பாலத்தில் செலுத்தினான். வலப்புறம் சற்றுத் தள்ளி கூடவே வந்துகொண்டிருந்த பாலத்தை ஆராய்ந்தவாறு வேகத்தைக் குறைத்து மெதுவாகச் செலுத்தினான். குருவின் அபார பொது அறிவை எண்ணி மனசுக்குள் வியந்த சுந்தர், "என்ன கேட்டே அஞ்சலி?" என்றான்.

"ஒரே தடவைதான் கேட்பேன்"

"இந்தப் பக்கம் எங்கே போறோம்னுதானே கேட்டே? மாமண்டூர் போய் இளநீர் சாப்பிடப்போறோம் டியர்."

"மாமண்டூரில் மட்டுந்தான் இளநீர் கிடைக்குமா?"

"இளநீருக்காக மட்டுமில்லே"

"அப்புறம்?"

"சும்மா அஞ்சலியோடு ஜாலியா ஒரு ஜாய் ரைடு"

"உங்ககூட பேசவே எனக்கு இஷ்டமில்லே..."

"ஏன்? என்ன தப்பு பண்ணினேன்?"

"நேத்து காலையிலேயிருந்து எனக்கு ஏன் நீங்க முத்தமே கொடுக்கலே?"

"ரொம்ப அவசரம்னா சொல்லு. காரை ஓரங்கட்டிடுறேன்" என்றவன் சரசரவென்று காரை இடப்புறம் ஓடித்தான்.

"வேணாம் வேணாம். நேரா போங்க" என்று சிணுங்கியவள் அவன் கழுத்தைச் சுற்றிக் கரத்தைப் போட்டு அவன்மீது தன் உடம்பைச் சுமத்தினாள். அவள் மார்புப் பகுதி நெருப்பு மேகம்போல அவனைச் சுட்டது.

மாமண்டூரில் இறங்கி நின்றனர்.

இளநீர் விற்றவர் வித்தியாசமாக, ஒழுங்காக, கலையுணர்வோடு இளநீர் செதுக்கியதை அஞ்சலி கருப்புக் கண்ணாடியை உச்சந்தலையில் உட்கார வைத்துவிட்டு ரசித்தாள். இளநீர் சிறிது உறிஞ்சியவள், ஸ்ட்ராவை தன் இதழ்களின் பிடியிலிருந்து விடுவித்துவிட்டு, "டில்லிக்குப் போறதுக்கு முன்னால் என்கிட்டே சொல்லிட்டுப் போவீங்களா?" என்று இளநீர்க்காரருக்குப் புரியாத ஆங்கிலத்தில் கேட்டாள். அவள் விழிகளில் சோகம்.

–தொடரும்

# கெட் உடை!



நாய்களுக்கு பிஸ்கெட் தயாரிக்கும் பிரிட்டிஷ் கம்பெனி ஒன்று சமீபத்தில் புதுமாதிரியாக ஒரு விளம்பரத்தைச் செய்து இருக்கிறது. இளம் பெண்ணின் உடல் முழுவதும் நாய் பிஸ்கெட்டுகளை உடைகள்போல் தயார் செய்து அணிய வைத்து, அப்பெண்ணின் அருகில் ஒரு குட்டி நாயையும் நிற்க வைத்து படம் பிடித்து விளம்பரம் செய்து இருக்கிறார்கள்!

—மேஜர்தாசன்

நெருப்பு வைத்து, அது வெடிகுண்டாய் வெடித்ததுபோல், அந்தப் பெண்களின் தாக்குதலில் வெலவெலத்துப் போய்விட்டார்கள் இடிராஜாக்கள்.

நல்லவேளை – அடுத்த ஸ்டாப் வந்துவிட்டது. பொறிகலங்கிப் போன பெட்டைப் பையன்கள், விருட்டென்று நழுவிக் கீழே இறங்கிப் போய் விட்டார்கள்.

அந்தப் பட்டிக்காடுகளுடன் மோதினால், சண்டை, சச்சரவு, போலீஸ் ஸ்டேஷன், கேஸ், கோர்ட் என்று அலைந்து அவமானப் பட வேண்டியிருக்குமே!

நான் நிம்மதிப் பெருமூச்சுடன், இருக்கையில் சாய்ந்தேன்.

அப்பாடா! குறித்த நேரத்திற்குள் கருவூல அலுவலகம் போய்ச் சேர்ந்து விடலாம்.

அடுத்து, வெளியூர்ப் பேருந்து நிலைய ஸ்டாப் வந்தது.

விடுவிடென்று, கையில் பெட்டிகளை எடுத்துக் கொண்டு, முன் பக்கத்துப்படி வழியாக இறங்கினார்கள் பாட்ஜ் அணிந்திருந்த பெண்கள்.

வேகமாக அவர்கள் இறங்கும் போது, அந்த பாட்ஜைக் கூர்ந்து கவனித்தேன்.

'பெண்கள் உரிமைப் போராட்ட மன்றம், மாநில மாநாடு' என்று ஆங்கிலத்தில் அதில் அச்சிடப் பட்டிருந்தது. ●

விஜயா ஜெகன்!

# 18

## P–Q4

சுந்தர் இளநீர் உறிஞ்சியபோது அவன் பார்வை மட்டும் மாமண்டூர் பாலத்தின் திசையிலேயே இருந்தது. அர்ஜுனின் 'ஆபரேஷன் எக்ஸ்' திட்டத்தை எப்படி முறியடிப்பது. எப்படி அந்த பயங்கரவாதியை மடக்கிப் பிடிப்பது என்று கவலையுடன் யோசித்துக்கொண்டிருந்தான். அஞ்சலியின் கேள்வி அவன் சிந்தனையைக் கலைக்க சுயநினைவு பெற்றான். அஞ்சலியின் விழிகளை குழப்பத்துடன் பார்த்தான்.

"நான் கேட்டது உங்க காதிலேயே விழலே. என்ன கேட்டேன் சொல்லுங்க?" என்றாள் அவள்.

"சொல்றேன்" என்று சுந்தர் இளநீர்க்காரருக்கு பணம் கொடுத்தான்.

இருவரும் மீண்டும் காரில் ஏறி அமர்ந்தனர். காரை கிளப்பிய சுந்தர் சொன்னான்.

"டில்லி போறதுக்கு முன்னால் சொல்லிட்டுப் போவீங்களான்னு கேட்டே. சரிதானா?"

"ஆமா."

"டில்லி போகமாட்டேன்னு நினைக்கிறேன் அஞ்சு. என் எதிரிகள் மெட்ராசிலேயே என்னை தீர்த்துக்கட்ட திட்டம் போட்டிருக்காங்க."

"போலீசில் புகார் செய்ய ஏன் தயங்கறீங்க?"

"தயங்கலயே. அவசியம் ஏற்பட்டா புகார் கொடுப்பேன்."

மீண்டும் மாமண்டூர் இரட்டைப் பாலம் வந்தது. சுந்தர் வேகத்தைக் குறைத்து இடப்புறம் இருந்த பாலத்தில் ஏற்றினான். நடுப்பாலத்தில் நிறுத்தினான்.

"ஏன் நிறுத்திட்டீங்க?"

"ஹில் வியூ ரொம்ப அழகா இருக்கு. இறங்கி மலையைப் பார்த்திட்டுப் போவோம்."

இருவரும் இறங்கினர். அஞ்சலி அவன் கரத்துடன் தன் கரத்தைக் கோர்த்துக்கொண்டாள்.

தொலைவில் தெரிந்த குன்றையும் அதிலிருந்த கோவிலையும் அடிவாரத்தில் வளர்க்கப்பட்டிருந்த தைல மரங்களையும் அஞ்சலி பார்த்தாள். அந்த அமைதியான சுற்றுச் சூழலை ரசித்தாள். அதே சமயம் சுந்தர் வலப்புறமிருந்த பாலத்தை ஆராய்ந்தான்.

குருவின் இருப்பிடத்தை கார் அடைந்தபோது மணி ஐந்தாகி விட்டது.

அஞ்சலி இறங்கி நடைபாதையில் நின்றாள்.

சுந்தர் மட்டும் உள்ளே சென்றான்.

குரு அவசர வேலையாக வெளியே சென்று விட்டதாக அலுவலகத்தில் எழுதிக்கொண்டிருந்த மகேஷ் சொன்னான்.

சுந்தர் கார் சாவியை அவனிடம் கொடுத்தான். "குரு வந்தா குடுத்துருங்க" என்றான்.

"அவர்கிட்ட ஏதாவது சொல்லணுமா சார்?"

"நாளைக்குப் பார்க்கிறேன்னு சொல்லுங்க" என்றுவிட்டு வெளியேறினான்.

நடைபாதையில் நின்ற அஞ்சலி வெறுப்பு கலந்த குரலில் கேட்டாள்.

"இருக்கானா உள்ளே?"

"இல்லே வெளீல போயிட்டானாம்."

"ராத்திரி ஆயிடுச்சுன்னா அவனைப் பிடிக்க முடியாது."

ஆட்டோ ஸ்டாண்டில் நின்றுகொண்டிருந்த ஆட்டோவில் ஏறி அமர்ந்தனர்.



"மவுண்ட் ரோடு போப்பா" என்றான் சுந்தர்.

"மவுண்ட்ரோடில் எங்கே சார்?"

"ஸ்பென்சர்ஸ் பக்கம் போ."

பிரம்மா ஷோ ரூமுக்குள் புதிய மொப்பெட்டுகள் வரிசையாக நின்றன. ஒரு வட்டமான மேடைமீது நிறுத்தி வைக்கப்பட்டிருந்த லேட்டஸ்ட் மாடல் பைக் விளம்பரத்துக்காக மெல்ல சுழன்றது.

அஞ்சலியும் சுந்தரும் ஷோரூமைக் கடந்து லிப்டுக்குச் சென்றனர்.

"எங்கே போறோம்?" என்று அஞ்சலி கேட்டாள்.

"ஒரு சின்ன ஹெல்ப் பண்றயா?"

"சொல்லுங்க."

"நான் மேலேவரக்கூடாது. நீ மட்டும் ஏழாவது மாடிக்குப் போறே."

"போய்?"

"அங்கே பிரம்மா கம்பெனியின் ஹெட் ஆபீஸ் இருக்கு..."

"மணி ஆறாகப் போகுதே! இந்த நேரத்தில் அங்கே யார் இருப்பாங்க?"

"ஆபீசில் யாரும் இருக்க மாட்டாங்க. சேர்மன் ரூம் திறந்திருக்கலாம். சேர்மன் இருந்தார்னா பேசாம வந்திரு. இல்லேன்னா எப்போ பார்க்க முடியும்னு அங்கே இருக்கிறவங்ககிட்டே கேட்டுட்டு வா."

"என்ன விஷயமா பார்க்கணும்னு கேட்க மாட்டாங்க?"

"கேட்டா டி.வி.கவரேஜ் விஷயமா பேசணும்னு சொல்லு."

"நீங்களே வந்து கேட்கலாமே..."

"நான் மேலே வரக்கூடாது. சில காரணங்கள் இருக்கு."

"சரி நான் போயிட்டு வர்றேன்."

அஞ்சலி லிப்டுக்குள் புகுந்து மேலே சென்றாள்.

சுந்தர் காத்திருந்தான்.

சில நிமிடங்களுக்குப் பிறகு அஞ்சலி திரும்பி வந்தாள். "சேர்மன் ஜப்பான் போயிட்டாராம். வர்றதுக்கு ஒரு வாரமாகுமாம்" என்றாள்.

"சரி போகலாம்" என்றான் சுந்தர்.

"இனிமே எங்கே போகணும்?" அஞ்சலி கேட்டாள்.

சுந்தரின் மனசில் கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல்கள்.

பிரம்மா நிறுவனத்தை வெளிநாட்டில் வசிக்கும் விவேக்பிரபாகர் 'டேக் ஓவர்' செய்யப்போவது பிரம்மா சேர்மனுக்கு அதிர்ச்சியூட்டியிருக்கிறது. டேக் ஓவரைத் தடுக்க பல வழிகளில் முயன்றும் தடுக்க முடியாமல் போகவே விவேக் பிரபாகரைத் தீர்த்துக்கட்ட அர்ஜுனை செட்டப் பண்ணியிருக்கிறார். வரும் திங்கள் காலை வெளிநாட்டிலிருந்து வரும் விவேக் பிரபாகரை சுட்டுத்தள்ள அர்ஜுன் அழகாக 'ஆபரேஷன் எக்ஸ்' திட்டத்தை தீட்டிவிட்டான். இந்தச்

## கொண்டாட்டம்

பணக்காரன் பட விமரிசனத்தில் நூறு ரூபாய் (பணத்துடன்) நோட்டை பிரசுரித்து வெளியிட்டிருந்த விதம் புதுமையானது. ரிச் ஆகவும் இருந்தது.

—த. சத்தியநாராயணன், அயன்புரம்

சென்றவார 'கிலு கிலு' போனஸை நான் படிக்க விரும்பவில்லை. ஏனெனில் இது எல்லோருக்கும் ஏற்றது. வீட்டினர்க்கு கொண்டாட்டம்!

— கே.டி.வேலு, சீர்காழி

குங்குமம் வழங்கிய கிலு கிலு(ப்பை) போனஸில் தொகுக்கப்பட்ட கதைகள் யாவும் வெகு ஜோர்.

— என்.கே. வேலு, புதுவை

சமயத்தில் இந்தியாவில் இருந்தால் போலீசின் சந்தேகப் பார்வை தன் மீது திரும்பலாம் என்று இந்த சேர்மன் புத்திசாலித்தனமாக 'அலிபி' உருவாக்குவதற்காக ஜப்பான் ஓடியிருக்கிறார்!

"வரவர நான் சொல்றது எதுவும் உங்க காதுலேயே விழமாட்டேங்குதே. ஏன்?" என்று மெல்லிய ஆத்திரத்துடன் அஞ்சலி கேட்டாள்.

"ஐ'ம் ஸாரி அஞ்சு. சமாளிக்க வேண்டிய அவசரப் பிரச்சினைகள் எக்கச்சக்கமா இருக்கு."

"என்ன பிரச்சினைன்னு சொன்னீங்கன்னா என்னால் உதவ முடிஞ்சா நானும் உதவுவேன்."

"நீ என்கூட இருக்கிறதையே பெரிய உதவியா நான் நினைக்கிறேன்."

"வீட்டுக்குப் போகலாமா. இன்னும் வேறே எங்கேயும் போகணுமா?"

"அடையாறில் ஒரு சின்ன வேலை. முடிச்சுட்டுப் போயிருவோம்."

"எங்கே வேணாலும் போகலாம். நான் ரெடி."

அடையாறு.

படகு குழாம் சாலை.

பல ஏக்கர் பரப்பளவுக்குள் பதுங்கியிருந்த ஒரு பங்களாவை நோக்கி சுந்தரும் அஞ்சலியும் முன்னேறினர்.

சுந்தர் வாசல் மணியின் விசையை அழுத்தினான்.

டாங் டிங்ங்ங்....

கதவு திறந்தது.

ஒரு பெரியவர் திறந்தார். 55 மதிக்கலாம். ஒல்லியான உருவம். கருப்பு

திருச்சி தி.மு.க. மாநாடு பேரணிக் காட்சிகள் கண்கொள்ளாக்காட்சியாக இருந்தது!
– எம்.செல்லையா, சாத்தூர்

'பாதாளச் சாக்கடையில்' இறங்கிச் சுத்தப்படுத்தும் தொழிலாளருக்கு அவர்களுடைய உடலைச் சுத்தப் படுத்துவதற்கான சோப்பு போன்ற சாதனங்கள் எதுவும் கொடுக்கப் படுவதில்லையா? கொடுமை! இல்லை, பேட்டியாளர் கேட்கத் தவறி விட்டாரோ?
– எஸ். வாசுதேவன், சென்னை – 14

பணக்காரன் விமரிசனத்துக்கு இயக்குநர்வாசு பதில் அளிக்க மறுத்துவிட்டதால் இந்த இதழில் பதில் இடம் பெறவில்லை.

அடுத்த இதழில்
வாசகர் அட்டைப்படம்.

முதலில் குவார்ட்டர், அப்புறம் ஆஃப், அடுத்தது ஃபுல் தானெனும் நினைப்பில் 'போதை' விழிகளோடு காத்திருந்த எங்கள் கைகளில் 'கோன் ஐஸை' திணித்து விட்டீரே. 'கிலுகிலு' இணைப்பைத்தான் சொல்கிறேன்.
– இரா. செல்வமணி,
பாப்பாக்குடி.

வாசகர்களின் 'வெடுக்'கென்ற கேள்விகளுக்கு பராசக்தியின் 'நறுக்' கென்ற பதில்கள் அருமை!
– வே. செந்தில்குமார்,
கொங்கணாபுரம்

அப்துல் ரகுமானின் கவிதை வரிகள் இலக்கிய உலகிற்கு சிறப்பானதொரு அரண் என்பதற்கு சென்ற இதழ் சுவரில் வடித்த வரியே சான்று.
–எஸ்.சுந்தர், திருநெல்வேலி.

அட்டையில் – ரம்யா கிருஷ்ணன்
வண்ணப்படம் – யோகா

சிமிழ் – 13 – பொட்டு – 13
பிப். 23 – 1 மார்ச் 90



"உங்க வீட்டு வேலைக்காரி திருடிவிட்டுப் போய்விட்டாள் என்கிறீர்களே...! அவளின் அடையாளம் சொல்ல முடியுமா?"

"இடுப்புக்குக் கீழே ஒரு தழும்பு, தொடையில ஒரு மச்சம் இருக்கும் இன்ஸ்பெக்டர்."

–தேனி. எஸ். மாரியப்பன்

சூட் அணிந்து செவேலென்றிருந்தார்.

சுந்தரையும் அஞ்சலியையும் ஆச்சரியத்துடன் பார்த்தார்.

"யாரை பார்க்கணும்?"

"என் பேர் சுந்தர். விவேக் பிரபாகரோட காலேஜ்மேட் நான்."

"பையன் இன்னும் ஸ்டேட்ஸிலிருந்து வரலியே."

"அது விஷயமா கொஞ்சம் பேசணும்."

"உள்ளே வாங்க."

ஹாலுக்குள் கால் வைத்ததும் அஞ்சலி அசந்து விட்டாள்.

அகலமான 'ஹுசைன் பெயிண்ட்டிங்' வரவேற்றது.

உயரமான கண்ணாடிச் சுவர்கள். சுத்தமான வெள்ளியினால் படுக்கையறைக் கதவுகள்.

ஹாலின் மூலையின் செயற்கை நீரூற்று பளிங்கு நீரை கூரை நோக்கி பீய்ச்சிக் கொண்டிருந்தது.

மேம்பாலம் போல மாடிக்கு சரிவாக படிக்கட்டு ஏறியது.

"மேலே போய் உட்கார்ந்து பேசுவோம்."

பெரியவர் சுறுசுறுப்பாக இளைஞனைப் போல படியேறினார்.

சிலைகளும், சில அபூர்வ புராதன கலைப்பொருட்களும் மியூசியம் போல ஒழுங்காக காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன.

அஞ்சலியும், சுந்தரும் அவற்றையெல்லாம் ரசித்தவாறு பின்தொடரவே, பெரியவர் பெருமையுடன் சொன்னார்.

"எல்லாமே என் சொந்த கலெக்ஷன்ஸ்."

மாடியில் இருந்த விசாலமான ஹாலில் சொகுசான ஆடம்பர ஆசனங்களில் மூவரும் அமர்ந்தனர்.

அந்த மாடி ஹாலின் மூலையிலும் கீழே இருப்பதைப் போலவே ஒரு செயற்கை நீரூற்று.

அஞ்சலி அந்த நீரூற்றிலிருந்து தண்ணீர் வெள்ளி நிறத்தில் பீய்ச்சியடிக்கப்படுவதை வேடிக்கை பார்த்தாள்.

உடனே பெரியவர் மறுபடியும் பெருமையடிக்க ஆரம்பித்தார். "எல்லாமே என் ஏற்பாடுதான். கீழே இதேமாதிரி ஒரு நீரூற்று இருக்கு. பார்த்திருப்பீங்க. அதிலிருக்கும் தண்ணீர் மோட்டார் மூலமாக மாடியிலுள்ள இந்த நீரூற்றுக்கு வரும். மறுபடியும் இங்கிருந்து கீழே இருக்கும் நீரூற்றுக்கு வடிந்து விடும். ஒரு குறிப்பிட்ட அளவு தண்ணீர்தான் மேலும் கீழுமாகச் சுழன்று கொண்டிருப்பதால் தண்ணீர் வேஸ்ட் ஆவதில்லை. அது போகட்டும். பையன் விஷயமா ஏதோ பேசணும்னு சொன்னீங்க. இது யார் உங்க மனைவியா?"

பெரியவர் கேட்டதும் அஞ்சலியின் முகத்தில் கலப்பில்லாத சுத்தமான நாணம் படர்வதை சுந்தர் முதல் முறையாகக் கவனித்தான்.

"விவேக் பிரபாகர் என்னிக்கு வர்றார்?" சுந்தர் கேட்டான்.

"வர்ற திங்கள் காலை."

"அன்னிக்கு அவர் வரவேண்டாம்."

"அதைச் சொல்ல நீங்க யார்?"

"உங்க ஸன் மேல அக்கறையுள்ள ஒருத்தன்."

"ஏன் வரவேண்டாம்கறீங்க?"

"அவர் உயிருக்கு ஆபத்து ஏற்படலாம்."

"என் மகன் போட்ட திட்டங்களை யாராலும் மாற்ற முடியாதே மிஸ்டர் சுந்தரம்."

"உடனே உங்க மகனுக்கு ரகசியமா மெஸேஜ் அனுப்புங்க வரவேண்டாம்னு. மீறி வந்தா நிச்சயம் அவர் உயிருக்கு ஆபத்து."

டாங் டிங்ங்ங்....

வாசல் மணி ஒலித்தது.

"கொஞ்சம் வெய்ட் பண்ணுங்க. அவசரம் ஒண்ணுமில்லையே, கீழே யாரோ வந்திருக்காங்க. போய்ப் பார்த்துட்டு வந்திர்றேன்."

பெரியவர் கீழே இறங்கிச் சென்றார்.

அஞ்சலி தணிந்த குரலில் "யார் இவர்?" என்று கேட்டாள்.

"வெளியே போய் பேசலாம்."

"இவ்வளவு பெரிய பணக்காரங்கள்ளாம் மெட்ராசில் இருக்காங்களா! ஒரே ஒரு ஆளுக்கு இவ்ளோவ் பெரிய பங்களாவா!"

"ஏன் இல்லே. எல்லாரும் உன்னையும் என்னையும் மாதிரி இருப்பாங்கன்னு நினைச்சியா?"

பேசிக்கொண்டேயிருந்த அஞ்சலியின் முகத்தில் திடீரென்று திகில்.

சுந்தருக்கு காரணம் புரியவில்லை.

"என்ன அஞ்சலி?"

"அங்க பாருங்க." அஞ்சலி ஹாலின் மூலைப்பக்கம் கரம் நீட்டினாள்.

"என்ன அங்கே?"

"அந்த பவுண்டன் தண்ணீரைப் பாருங்க."

சுந்தர் செயற்கை நீரூற்றைப் பார்த்தான்.

சற்றுமுன் வெள்ளி நிறத்தில் கூரை நோக்கி பொங்கி எழுந்த தண்ணீர் சிறுகச் சிறுக செந்நிறமாக மாறிக் கொண்டிருந்தது.

—தொடரும்.



"ஏங்க இந்த ஆபீஸ் நைட் வாட்ச் மேனைப் பார்க்கணும்...."

"நீங்க அவரைப் பார்க்க முடியாது. அசந்து தூங்கிகிட்டு இருக்கார். காலையில வீட்டுக்குப் போனால் பார்க்கலாம்!"

—கடுவை. கோபால்சாமி

●

"சர்க்கரை வியாதியிலே செத்துப் போன உங்கப்பா வரலாறை எழுதினியாமே? என்ன பெயர் வைச்சிருக்கே..?

"ஸ்வீட் மெமரிஸ் என்று பெயர் வைச்சிருக்கேன்."

—எஸ்.ராகவேந்திரா



19

QXRP

வெள்ளி நிறத்தில் கூரை நோக்கி சீறியடித்துச் சிதறி உதிர்ந்த செயற்கை நீரூற்றின் தண்ணீர் சிறுகச் சிறுக செந்நிறமாகியதைக் கவனித்த சுந்தரின் முகத்தில் குழப்பம்.

சிறிது நேரத்துக்கு முன் பெரியவர் பேசியது அவன் காதுகளிலேயே இருந்தது.

# சொல் சொல் என் உயிரே

'கீழே இதே மாதிரி ஒரு நீரூற்று இருக்கு. பார்த்திருப்பீங்க. அதிலிருக்கும் தண்ணீர் மோட்டார் மூலமாக மாடியிலுள்ள இந்த நீரூற்றுக்கு வரும். மறுபடியும் இங்கிருந்து கீழே இருக்கும் நீரூற்றுக்கு வடிந்துவிடும்.'

சுந்தரின் மனசில் கேள்விகள் அரும்பின.

இங்கே இருக்கும் தண்ணீர் சிவப்பாவதால் கீழேயிருக்கும் நீரூற்றைச் சுற்றித் தேங்கியிருக்கும் தண்ணீரும் சிவப்பாகியிருக்க வேண்டுமே. தண்ணீர் எப்படி திடீரென்று சிவப்பாகும்? வாசல் மணி கேட்டு கீழே சென்ற பெரியவர் ஏன் இன்னும் திரும்பி வரவில்லை? கீழே பேசிக் கொண்டிருக்கிறாரா?

அஞ்சலி தண்ணீர் செந்நீராக மாறியதை ஆச்சரித்துடன் பார்த்தவாறிருந்தாள்.

"கீழே போனவர் ஏன் மேலே வரலே?" சுந்தர் கேட்டான்.

"தண்ணீர் எப்படி சிவப்பாச்சு?" என்று கேட்டாள் அஞ்சலி.

"வா, கீழே போய் பார்க்கலாம்."

இருவரும் எழுந்து படியில் இறங்கினர்.

தலைவாயில் கதவு சாத்தப்பட்டிருந்தது. ஹாலில் யாருமில்லை.

அவர்கள் மேலும் கீழே இறங்கிய போது—

ஹாலின் மூலையிலிருந்த செயற்கை நீரூற்றைச் சுற்றித் தேங்கிக் கிடந்த நீரில் பெரியவர் மிதந்தார். முகம் நீரில் முங்கிய நிலையில் முதுகுப் பக்கத்தைக் காண்பித்துக் கொண்டு. அவர் உடம்பிலிருந்து கசிந்த ரத்தம் நீரில் பரவிப் படர்ந்து கொண்டிருந்தது.

அஞ்சலி அந்தக் கோரக் காட்சியைக் காணச் சகிக்காமல் விருட்டென்று பின்வாங்கினாள். அவள் இதயம் படபடத்தது. "எப்படி உள்ளே விழுந்திருப்பார்?" என்று கேட்டாள்.

சுந்தர் ஹால் கதவைத் திறந்து கொண்டு வெளியே ஓடினான். போர்ட்டிக்கோவிலும் தோட்டத்திலும் யாருமில்லை. நன்றாகச் சுற்றியலைந்து பார்த்துவிட்டு பங்களாவுக்குத் திரும்பி வந்தான்.

வெளியே வந்துவிட்ட அஞ்சலி, "ஏன் மறுபடியும் உள்ளே போறீங்க. போய் போலீசில் புகார் கொடுத்துட்டுப் போவோம்" என்றாள்.

"கொஞ்சம் இரு வந்துர்றேன்" என்றவன் மறுபடியும் பங்களாவுக்குள்ளே போய் மாடிப்படியில் ஏறினான்.

அஞ்சலி கீழே ஹாலில் காத்திருந்தாள். பாவம், இந்தப் பெரியவர் எங்கள் கண்முன்பா சாகவேண்டும்! எவ்வளவு அருமையாகவும் பெருமை



யாகவும் பேசிக் கொண்டிருந்தார்!'

மேலே சென்ற சுந்தர், அஞ்சலியும் அவனும் அமர்ந்திருந்த ஆசனங்களின் கைப்பிடிகளில் விழுந்திருக்கக்கூடிய அவர்களுடைய விரல்பதிவுகளை கைக்குட்டையால் துடைத்தான். கீழேயிறங்கி வந்தான். "அஞ்சலி! எதிலும் கை வைக்காதே. உன்னையறியாம வெச்சிருந்தாலும் துடைச்சிரு. நம்ம ஃபிங்கர் பிரிண்ட்ஸ் இந்த பங்களாவுக்குள் இருக்கக்கூடாது!" என்றான்.

செயற்கை நீரூற்றருகே சென்று நீரில் மிதந்த உடம்பைப் புரட்டினான்.

பெரியவரின் நெஞ்சுப் பகுதி ...றை கத்தியால் குத்தப்பட்டு தொண்டைப் பகுதி ஆழமாக அறுக்கப்பட்டிருந்தது. சுவாசக் குழலில் கிழிசல் தெளிவாகத் தெரிந்தது. நனைந்திருந்த அவர் கோட்டெல்லாம் ரத்தம்.

"கொலை!" என்று சுந்தரின் வாய் முணுமுணுத்தது.

மெயின்கேட் பக்கம் இருவரும் விரைந்தனர்.

'கேட்'டை அவர்கள் நெருங்கிய சமயம் வெளியே சாலையில் ஒரு சிவப்பு மாருதி ஜிப்சி மெதுவாக நகர்ந்து அப்புறம் படுவேகமாகப் பறந்து சென்றதை சுந்தர் கவனித்தான்.

அர்ஜுனின் காரா இது!

திங்கள் காலை இந்தியா வரும் விவேக் பிரபாகரை சுட்டுக் கொலை செய்ய சதித்திட்டம் உருவாகியிருப்பதை பெரியவரிடம் நான் தெரிவித்து எச்சரித்தேன். பெரியவர் அதை அமெரிக்காவிலிருக்கும் தன் மகனுக்குத் தெரிவிக்கவிடாமல் தடுக்க பெரியவரைத் தீர்த்துக் கட்டிவிட்டான் அர்ஜுன்! விவேக் பிரபாகரின் அமெரிக்க முகவரியைக் கண்டு பிடித்து தகவல் அனுப்புவது அவ்வளவு சிரமமான விஷயமா? 'திங்களன்று வராதே' என்று விவேக் பிரபாகருக்கு எப்படியும் தகவல் அனுப்பி விடலாம். ஆனால் எத்தனை நாளைக்கு இந்தியாவுக்குள் வர விடாமல் அவனைத் தடுக்க முடியும்? அப்பா கொலை செய்யப்பட்டிருக்கும் இந்தச் சமயத்தில் எப்படி வராம லிருப்பான்? அவனைத் தடுப்பதை விட அர்ஜுனை நிரந்தரமாக செயலிழக்கச் செய்வதுதான் அடுத்த படியாக நான் செய்யவேண்டிய காரியம்.

பங்களா காம்பவுண்டைக் கடந்து போட் கிளப் சாலையில் விரைந்தனர். அவர்களைக் கவனிக்க அந்தச் சாலையில் யாருமில்லை.

சுந்தர் அஞ்சலியின் கரம் பற்றிய போது அவள் உடம்பின் நடுக்கத்தை அவனால் உணரமுடிந்தது.

"நேரே போலீஸ் ஸ்டேஷன் போவோம் சுந்தர். நடந்ததைக் சொல்லிருவோம்."

"வேண்டாம். அதில் சில சிக்கல்கள் இருக்கு" என்றான் சுந்தர். சாலையோரமிருந்த பொதுத் தொலைபேசிக் கூண்டுக்குள் புகுந்தான். காவல் துறைக்கு பெரியவரின் கொலை பற்றிய முதல் தகவலை அனுப்பினான்.

"உங்க பேரையும் அட்ரசையும் சொல்லுங்க" என்று காவல்துறை அவனிடம் கேட்க, சுந்தர் பதில் சொல்லாமல் தொலைபேசியை வைத்துவிட்டு வெளியே வந்தான்.

கடற்கரை வீட்டை அவர்கள் அடையும்போது இரவு மணி ஒன்பது.

வீட்டைத் திறந்து உள்ளே நுழைந்ததும் அஞ்சலி கேட்டாள். "சுந்தர்! நீங்க ஏதோ ஒரு மர்மமான காரியத்தில் ஈடுபட்டிருக்கீங்க. நீங்க மெட்ராஸ் வந்த நோக்கமென்ன? மறைக்காம உண்மையைச் சொல்லுங்க."

"டி.வி.க்கு ஸ்கிரிப்ட் எழுத."

"ஒரே பொய்யை திரும்பத் திரும்பச் சொன்னா உண்மையாயிடும்னு நினைக்கிறீங்க. அப்படித்தானே?"

"ஒரே உண்மையை திரும்பத் திரும்பச் சொல்லும்போது பொய்யாயிடுமோன்னு பயமா இருக்கு" என்று சிரித்தான் சுந்தர்.

"அந்தப் பெரியவரை எவன் அப்படிக் குரூரமா கொலை பண்ணி தண்ணியில் தூக்கிப் போட்டிருப்பான்? மேலேயிருந்த நமக்கு எந்தச் சப்தமும் கேட்கலியே."

"லோக்கல் போலீஸ் தில்லாடிங்க. எப்படியும் கொலையாளியை கண்டுபிடிச்சுருவாங்க."



"உங்க மகன் அமெரிக்காவில வேலை செய்யறானே. உங்களுக்கு அங்கேருந்து என்னென்ன வாங்கி அனுப்பினான்?"

"முதல் வருஷம் கலர் டி.வி., அடுத்த வருஷம் வி.சி.ஆர்., இந்த வருஷம் அழகான அமெரிக்க மருமகள்."

-என்.வி.ரமணி

அஞ்சலி உடைகளைக் களைந்து விட்டு ஷவரின் அடியில் வியர்வை நீங்க உடலைக் கழுவினாள். இரவு உடையை மாட்டிக்கொண்டு ஹாலுக்கு வந்தாள். சுந்தர் அமர்ந்திருந்த நாற்காலியின் பின்னே நின்றாள். கரங்களை அவன் தொண்டைப் பகுதிக்குச் செலுத்தி அவன் முகத்தை மேல் பக்கமாக நிமிர்த்தி குனிந்து அவன் உதட்டில் முத்தமிட்டாள். தணிவாகச் சொன்னாள்.

"இன்னிக்கு தனியா படுக்க எனக்கு பயமா இருக்கு."

"ஏன்?" என்று சுந்தர் அவள் கரங்களைப் பற்றினான்.

"அந்தப் பெரியவர் முகம் என் கண் முன்னால் வந்துக்கிட்டேயிருக்கு."

"நீ படுத்திருக்கிற அறையிலேயே தான் நானும் படுத்திருக்கேன். அப்புறம் உனக்கென்ன பயம்?"

"விலகிப் படுத்திருந்தா பயமா இருக்காதா?"

"நீதானே ரெண்டு கட்டிலையும் தனித்தனியாப் பிரிச்சுப் போடச் சொன்னே."

"இன்னிக்கு சேர்த்துப் போட்டுர லாம் சுந்தர்."

"வேண்டாம். நாளை உன் பயம் நீங்கினதும் பழையபடி பிரிச்சுப் போடச் சொல்லுவே... சொல்ல மாட்டியா?"

அஞ்சலியிடமிருந்து பதில் வர வில்லை.

"கட்டில்களை ஒருதடவை ஒண்ணா சேர்த்துப் போட்டா அப்புறம் என்னிக்கும் பிரிச்சே போடக் கூடாது. இந்த கண்டிஷனுக்கு நீ சம்மதிச்சேன்னா சேர்த்துப் போட்டுர லாம்."

அஞ்சலி மௌனமாக இருந்தாள். ஏறத்தாழ இரண்டு நிமிடங்கள் அமைதியாக இருந்தபிறகு சொன்னாள்.

"என்னை உங்களுக்குப் பிடிக் கலே."

"ஆமா."

"ஆமாவா!"

"ஆமா. திங்கட்கிழமை வரைக்கும் உன்னை எனக்குப் பிடிக்காது."

| FORM-IV | RULE-8 |
|---|---|
| KUNGUMAM | |
| 1. Place of Pulication | : 93-A, Kodambakkam High Road, Madras-34. |
| 2. Periodicity of the publication | : Weekly |
| 3. Printer's Name | : S. Selvam |
| Whether citizen of India (If Foreigner state the country of origin.) | : Indian |
| Address | : 93-A, Kodambakkam High Road, Madras-34. |
| 4. Publisher's Name | : S. Selvam |
| Whether citizen of India (If Foreigner state the country of origin.) | : Indian |
| Address | : 93-A, Kodambakkam High Road, Madras-34. |
| 5. Editor's Name | : Parasakthi |
| Whether Citizen of India (If Foreigner state the country of origin.) | : Indian |
| Address | : 93-A, Kodambakkam High Road, Madras-34. |
| 6. Name & Address of individual who own the newspaper & Partners or shareholders holding more than one percent of the total capital | : (a) Kungumamam Publications (P) Ltd., 93-A, Kodambakkam High Road., Madras-34. : (b) Sumangali Publications (P) Ltd., 93, Kodambakkam High Road., Madras-34. |

I S. Selvam, hereby declare that the particulars given above are true and to the best of my knowledge and belief.

S/d- S. Selvam,
Signature of Publisher.

Madras
24.2.90

"காரணம்"

"திங்கட்கிழமை ஒரு பிரச்னையை சமாளிக்கணும்."

"அப்புறம்?"

"நம்மை யாரும் பிரிக்கமுடியாது."

"பகலிலயா, ராத்திரியிலயா" என்றுவிட்டு, 'களுக்'கென்று சிரித்தாள்.

"ஆயுசு பூராவும்" என்றான் சுந்தர்.

அஞ்சலி நகர்ந்துபோய் விளக்கை அணைத்தாள். 'ட்ஸீரோ வாட்'டை எரியவிட்டாள். 'டீ' இன் ஒன்'னை இயக்கிவிட்டாள். சுந்தர் அமர்ந்திருந்த நாற்காலியின் முன்னால் தரையில் அமர்ந்தாள். அவனுடைய



"இது உங்களுக்கே நல்லா இருக்கா?"

"எது?"

"நாம பார்க்கறதுக்கு முன்பே அம்மாவோடு அந்தப் புதுப் படத்தை நீங்க பார்த்துட்டீங் களாமே!"

–சின்னராஜா

முழங்கால்களுக்கிடையே அவளுடைய உடம்பு. தலையைப் பின்பக்கமாகச் சாய்த்தாள். சுந்தரின் கரம் அவளுடைய வளவளப்பான கழுத்துப்பகுதியை வருடிக் கொடுத்தது.

'பூஜ்ய வாட்'டின் வெளிச்சம் இரவின் இருளுடன் சிநேகமாக இருந்த அந்த வேளையில் எல். சுப்ரமண்யம் சில வெள்ளைக்காரர்களுடன் சேர்ந்து இனிமையாக வயலின் இசைத்தார். சுந்தரும் அஞ்சலியும் அசையாமல் மௌனமாக இருந்தனர். காலடியில் அமர்ந்திருந்த அஞ்சலியின் கண் இமைகளின் சின்னஞ்சிறு பட்டு மடிப்புக்களின் மீது தன் பெருவிரலை ஓடவிட்டான். அந்த இடத்தின் மீது முத்தமிடவேண்டும்போல இருந்தது, அவனுக்கு.

"தூக்கம் வருது. படுக்கப் போலாமா?" என்றாள் அஞ்சலி.

"நீ போய் தூங்கு"

"செஸ் ஆடலாமா?"

"வேண்டாம். உனக்குத் தூக்கம் வருது. போய்ப்படு எனக்கு கொஞ்சம் எழுத்துவேலை இருக்கு."

காலையில் காலண்டரைப் பார்த்த சுந்தருக்கு 'திக்' என்றிருந்தது.

திங்கட்கிழமைக்கு இரண்டே நாட்கள்தான் இருந்தன.

பெரியவரின் மரணச் செய்தி அமெரிக்காவில் இருக்கும் அவருடைய மகன் விவேக் பிரபாகருக்கு அனுப்பப்பட்டுவிட்ட போதிலும் அவன் இந்தியா வரும் தேதியில் எந்த மாற்றமும் இல்லை என்பது சுந்தர் சென்னையில் பல இடங்களில் விசாரித்ததில் தெரியவந்தது.

சென்னை வரும் விவேக் பிரபாகர் அவனுடைய ஒரிஜினல் திட்டப்படி விமான நிலையத்திலிருந்து நேராக மாமண்டூர் பிரம்மா தொழிற்சாலைக்கு செல்ல வாய்ப்பில்லை. தந்தையின் பூத உடம்பைப் பார்க்கத்தான் செல்வான்.

மாமண்டூர் பாலம் பக்கம் விவேக் பிரபாகர் செல்லாவிட்டால் அர்ஜுன் தன்னுடைய திட்டத்தை எப்படி நிறைவேற்றுவான்?

சுந்தருக்கு குழப்பமாக இருந்தது.

இரண்டு நாட்களில் முடிக்க வேண்டிய காரியங்கள் நிறைய இருந்ததால் குருவின் ஃபியட் வண்டியைத் தன் உபயோகத்துக்காகக் கேட்டு வாங்கிக் கொண்டான்.

அமெரிக்க தூதரகத்துக்கு அருகேயிருந்த 'சர்ச்' வாசல்முன் காரை நிறுத்திய சுந்தர், "கொஞ்சம் காரிலேயே இரு அஞ்சு. ரெண்டு நிமிஷத்தில் வந்துர்றேன்" என்று அஞ்சலியிடம் சொல்லிவிட்டு இறங்கினான்.

சர்ச் காம்பவுண்டுக்குள் நுழைந்தான். கோபுரத்தை அண்ணாந்து பார்த்தவாறு நடந்தான்.

'டும்மீல்!'

முதுகுக்குப் பின்னே நூறு பீரங்கிகள் ஒன்றாக வெடித்த மாதிரி பயங்கர சப்தம்!

சுந்தர் அதிர்ச்சியுடன் திரும்பிப் பார்த்தான்.

கரும் புகையுடன் இரண்டு ஆள் உயரத்துக்கு ஜுவாலை எழுப்பிக் கொண்டு குருவின் ஃபியட் வண்டி எரிந்து கொண்டிருந்தது.

–தொடரும்

20

# சொல்! சொல்! என் உயிரே!

B-Kt 5

ஆரஞ்சு நிறத்தில் ஜுவாலையும், சுருள் சுருளாக கரும்புகையும் ஒரு பனை உயரத்துக்கு எழுப்பிக் கொண்டு ஃபியட் வண்டி தீக்குளித்து சாம்பலாகிக் கொண்டிருந்தது.

சுந்தர் மனம் பதைபதைக்க தேவாலயத்தின் 'கேட்' நோக்கி ஓடினான்.

அஞ்சலி!

அவன் மனம் ஓலமிட்டு அழுதது.

அஞ்சலி! எனக்காக வைக்கப்பட்ட வெடிகுண்டுக்கு எந்தப் பாவமும் அறியாத நீ பலியாகிவிட்டாயா! காருக்குள்ளேயே உன்னை உட்கார வைத்து அநியாயமாக உயிரோடு கொளுத்தி விட்டேனே!

வேகமாக ஓடிய சுந்தர் 'கேட்'டின் அருகே தயங்கினான்.

அசாத்திய வெப்பமும் காற்றினால் அலைக்கழிக்கப்பட்ட கரும்புகையும் அவனை மேற்கொண்டு ஒரு அடிகூட எடுத்து வைக்கவிடாமல் தடுத்தன.

காருக்குள் பாய்ந்து சினிமா கதாநாயகன் பாணியில் அஞ்சலியை உயிரோடு மீட்பது என்பது முற்றிலும் இயலாத காரியம் என்பது அவனுக்கு தெளிவாகப் புரிந்தது.

புகைக்கும் ஜுவாலைக்குமிடையே கூர்மையான பார்வையைச் செலுத்தியவாறு சிலையாக நின்றான். அவனுடைய அடிவயிற்றில் திரண்ட சோகமும், வேதனையும் தொண்டையில் அடைத்தன.

சில மாதங்களுக்கு முன் சோவியத் டால் கிளப்பில் செஸ் ஆட்டத்தில் அஞ்சலியை சுந்தர் தோற்கடித்த தினத்தன்று அவள் தோல்வியை சோகமுகத்துடன் ஒத்துக்கொண்டு கையெழுத்திட்டதும், அப்போது அவள் விழிகள் கலங்கி ஸ்கோர் ஷீட்டில் 'பொட்'டென்று கண்ணீரை உதிர்த்ததும் சுந்தரின் மனக்கண் முன்னால் 'ஆக்ஷன் ரீ பிளே' போலத் தோன்றியது.

அண்ணா மேம்பாலத்தின் மேல் வாகனங்கள் ஸ்தம்பித்து எரியும் காரை வேடிக்கை பார்த்தன.

சுந்தரின் மனம் கதறியழுதபோது—

"சுந்தர்!"

அஞ்சலியின் குரல் கேட்டு ஆனந்த அதிர்ச்சியுடன் திரும்பிப் பார்த்தான்.

தன் கண்களையே அவனால் நம்பமுடியவில்லை.

அஞ்சலி!

'பீச்' நிறத்தில் 'தொள தொள' வென்று டி ஷர்ட் அணிந்து அவளோடு காரில் வந்த அதே அஞ்சலி!

சின்ன இடையை வெள்ளி பெல்ட் இறுக்க, மௌனமாக சர்ச் காம்பவுண்டுக்குள் செடிகளுக்கிடையே நின்றாள்! அவள் தோள்களைச் சுற்றி வெண்மையாக வட்டவட்டமாக இட்லியின் வடிவத்தில் பூங்கொத்துக்கள் சிரித்தன.

ஒருகணம் ஊமையாகி அவளையே பார்த்தவன், "அஞ்சலி!" என்றவாறு ஓடினான்.

மறுகணம் இருவரும் அணைப்பில் சிக்குண்டு சூழ்நிலையை மறந்தனர்.

சுந்தர் அவள் தலை, முகம், கழுத்து, காது எல்லா இடங்களிலும் இடைவிடாமல் முத்தமழை சொரிந்து தள்ளினான். அஞ்சலி கலங்கிய விழிகளுடன் தணிந்த குரலில் பேசினாள்.

"நீங்க காருக்குள்ளேயே இருக்கச் சொல்லிட்டுத்தான் போனீங்க. கீழ்ப்படியாததுக்கு என்னை மன்னிச்சிடுங்க."

"நான் ஒரு மடையன். இனிமே என் பேச்சை என்னிக்குமே நீ கேட்க வேண்டாம். எனக்கு நீ கீழ்ப்படியவே வேண்டாம்."

"நீங்க எப்படி சர்ச்சில் 'பிரே' பண்றீங்கன்னு பார்க்கணும்போல இருந்துச்சு. நீங்க இறங்கிப்போனதும், நானும் பின்னாலேயே இறங்கிட்டேன். நீங்க திரும்பி என்னைப் பார்த்துரக்கூடாதுங்கறதுக்காக பாதையைவிட்டு இறங்கி தோட்டத்துக்குள்ளே செடிகளுக்கு நடுவில் நடந்துவந்துக்கிட்டிருந்தேன். அப்பத்தான் பயங்கரமான சப்தம் தலைமேல் இடிவிழுந்த மாதிரிக் கேட்டுச்சு. ஒரு நிமிஷம் எனக்கு ஒண்ணும் புரியலே. நீங்க ஓடினதைப் பார்த்தப்புறம்தான் கார் எரியறதையே பார்த்தேன்."





"நான் உங்க பெண்ணை எட்டு மாசமா காதலிக்கிறேன்."

"கல்யாணமெல்லாம் பண்ணி வைக்க முடியாது..."

"சரி! சீமந்தமாவது பண்ணி வைங்க."

– வி. சாரதி டேச்சு

"இன்னும் ரெண்டு நாளைக்கு என்கூட நீ வராம இருக்கிறது உனக்கு நல்லது அஞ்சு. வா போகலாம். இங்கே நின்னா போலீஸ் கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்ல வேண்டியதிருக்கும்."

"காரை இப்படியே விட்டுட்டுப் போயிரவா?"

"கார் எங்கே இருக்கு? சாம்பல் தான் மிஞ்சும். சர்ச்சுக்குப் பின் பக்கம் பாதை இருக்கா, ஓடறதுக்கு?"

"போய் பார்ப்போம்."

இருவரும் பின்பக்கம் திரும்பிப் பாராமல் சர்ச் நோக்கி விரைந்தனர். அஞ்சலி கேட்டாள்.

"அன்னிக்கு பாத்ரூமில் வெடி குண்டு இருந்துச்சு. இன்னிக்கு காரில் வெடிச்சிருக்கு. எனக்கு ஒண்ணும் புரியலே சுந்தர். உங்ககிட்டே என் மனசில் இருந்ததையெல்லாம் நான் கொட்டிட்டேன். ஆனா நீங்க பல விஷயங்களை மறைக்கிறீங்க."

"என்னை நம்பு. நான் எதையும் மறைக்கலே."

சர்ச்சுக்குள் இருவரும் நுழைந்தனர்.

அஞ்சலி ஒருகணம் தன்னை மெல்லிய நீராவி போன்ற 'வெய்ல்' துணியால் அலங்கார முக்காடிட்ட கிறித்தவ மணப்பெண்ணாகவும், சுந்தரை சூட் அணிந்த மணமகனாகவும் மனசுக்குள் ரகசியமாக கற்பனை செய்து மகிழ்ந்தாள்.

சந்நிதியருகே தூண் ஓரத்தில் சுந்தர் எதிர்பார்த்த நபர் வாடிக்கையாகக் காத்திருக்கும் இடத்தில் முழங்கால்களை ஊன்றி பயபக்தியுடன் நின்றார்.

சுந்தர் அவரிடம் செல்ல விரும்பவில்லை.

இப்போது இவரிடம் சென்று தகவல்களைப் பரிமாறிக்கொண்டால் அஞ்சலியின் கேள்விகளுக்கு பதில் சொல்ல வேண்டியதிருக்கும். இப்போது இவரை சந்திக்காமலேயே நழுவிவிட வேண்டும்.

இருவரும் சிறிது நேரம் ஆலய பெஞ்சில் அமைதியாக அமர்ந்தனர். அஞ்சலியின் கரம் அவனுடைய கரத்தைப் பற்றியவாறே இருந்தது.

'இனி எக்காலத்திலும் இது போன்ற மடத்தனமான தவறுகளைச் செய்து அஞ்சலியை ஆபத்தில் மாட்டி வைக்க மாட்டேன்' என்று சுந்தர் மனசுக்குள் சபதமெடுத்தான்.

இருவரும் எழுந்து சந்நிதியின் வலப்புறமிருந்த வேறொரு வாசல் வழியே வெளியேறினர்.

தகவல் சுமையுடன் சுந்தருக்காகக் காத்திருந்த நபரும் ஓரக் கண்ணால் சுந்தருடன் ஒரு பெண் இருப்பதைப் பார்த்துவிட்டு அசையாமலிருந்தார்.

சர்ச்சுக்குப் பின்னேயிருந்த கல்லறையைக் கடந்தனர். ஒரு கருங்கல் சிலுவைமீது புதிதாகப் போடப்பட்ட செவ்வந்தி மாலை.

பின்பக்கமிருந்த குறுகிய வாசல் வழியாக வெளியேறினர். சந்தில் நடந்து சுரங்கப் பாதைக்குள் இறங்கி சஃபையர் தியேட்டர் பக்கம் சென்றனர்.

சுந்தர் தொலைபேசிக் கூண்டுக்குள் புகுந்து குருவுடன் தொடர்பு கொண்டான்.

"என்ன மச்சான் எங்கேர்ந்து பேசறே?" என்று குரு கேட்டான்.

"ஒரு bad news. உன் கார்..."

"அக்சிடென்டா?"

"இல்லே. அர்ஜுன குண்டு வெச்சிட்டான்."

"என்னது!"

"ஆமா குரு. நுங்கம்பாக்கம் ஹைரோடில் 'ஆன் தி ராக்ஸ்' ரெஸ்டாரெண்ட்டில் நானும் அஞ்சலியும் சாப்பிட்டுக்கிட்டிருந்தோம். வண்டியை ரெஸ்டாரெண்ட் காம்பவுண்டுக்குள்ளேதான நிறுத்தியிருந்தேன். அந்தச் சமயத்திலதான் டைம் பாம் வைச்சிருக்கணும்."

"குண்டு எப்ப வெடிச்சுது?"

"சர்ச் வாசலில் காரை நிறுத்திட்டு நானும் அஞ்சலியும் இறங்கி சர்ச் காம்பவுண்டுக்குள்ளே நடந்துக்கிட்டிருந்தோம். அந்தச் சமயத்தில் வெடிச்சது."

"நல்லவேளை ரெண்டு பேரும் காரில் இல்லே..."

"ஆமா குரு..."

"கார் போனா போகுது மச்சான். இனிமேத்தான் நீ ரொம்ப ஜாக்கிரதையாகவும், சுறுசுறுப்பாகவும் செயல்படணும். இன்னும் ரெண்டே நாள்தான் இருக்கு நீ தேடிக்கிட்டிருக்கிற பார்ட்டியை சந்திக்கிறதுக்கு. போற இடத்துக்கெல்லாம் ஸ்டெப்னி மாதிரி அவளையும் தூக்கிக்கிட்டுக் அலையாதே...."

"எனக்கு ஒரு ஹெல்ப் பண்ணணும் குரு."

"என்ன பண்ணணும் சொல்லு"

"சர்ச் வாசலில் உன் வண்டி எரிஞ்சுக்கிட்டிருக்கு. போலீசார் காரோனரைத் தேடுவாங்க. அதனால் உடனே நீ அங்கே போய் அவங்க கேள்விகளுக்கு பதில் சொல். என் கிட்டே கார் இரவல் கொடுத்த சமாச்சாரத்தை வெளியில யார்கிட்டேயும் சொல்லாதே."

"கவலைப்படாதே மச்சான். நான் பாத்துக்கறேன். அஞ்சலி பக்கத்தில் நிற்கிறாளா?"

"இல்லே. வெளீல நிக்கிறா..."

"திங்கள் காலையில் என்ன செய்



'பாலம்' படத்தில் அறிமுகமாகும் இந்த ரேகா குரூப் டான்ஸில் ஆடிக்கொண்டிருந்தவர்.
– பவளக்கொடி

யப்போறே?"

"நேரில் வந்து சொல்றேன் குரு. போனில் பேசற சமாச்சாரமில்லே."

முற்பகலில் கிடைத்த அதிர்ச்சியை மறக்க சுந்தரும் அஞ்சலியும் சாந்தம் தியேட்டர் சென்று மேட்னி காட்சியில் ஆங்கிலப்படம் பார்த்தனர்.

படம் முடிந்ததும் அஞ்சலியை கடற்கரை வீட்டுக்கு அனுப்பிவிட்டு சுந்தர் மட்டும் தனியாக குருவைச் சந்திக்க எல்லோஸ்டோன் சென்றான்.

"என்ன மச்சான் என்ன செய்றதா அபிப்ராயம்? விவேக் பிரபாகர் தன் ஒரிஜினல் புரோக்ராம்படி திங்கள் காலை மெட்ராஸ் வந்து சேர்றான். விமான நிலையத்திலேயிருந்து அவன் டேக் ஓவர் செய்ய திட்டமிட்டிருக்கிற மாமண்டூர் பிரம்மா தொழிற்சாலையை பார்வையிடப் போறான். மாமண்டூர் பாலத்தில் அவனை சுட்டுக்கொல்ல அர்ஜுன் அங்கே வரப்போறான்."

"நான் விவேக் பிரபாகரை காப்பாத்தப் போறேன். அர்ஜுனை மடக்கிப் பிடிக்கப் போறேன்."

"எப்படி?"

"செஞ்சப்பறம் சொல்றேன் குரு."

"திமிரா பேசாதே. எங்கேயாவது மாட்டிக்கிட்டு என்னை உதவிக்கு கூப்பிட்டா நான் வரமாட்டேன். போலீஸ் உதவி கேட்டிருக்கியா?"

"இல்லே. ரகசியமா செய்யப் போறேன்."

"உதவிக்கு அடியாள் வேணும்னா சொல். புளியந்தோப்பில் நமக்கு ஒரு பட்டாளமே இருக்கு."

"யாரும் தேவையில்லே குரு. நாளை நைட்டே நான் மாமண்டூர் போயிடுவேன். சுந்தர் யாருங்கறதை இனிமேல்தான் நீ தெரிஞ்சுக்கப் போறே."

சுந்தர் கடற்கரை வீட்டை அடைந்த போது இரவு பத்தாகி விட்டது.

அஞ்சலி சப்பாத்தி தக்காளி ரெய்தா செய்து மேசையில் தயாராக வைத்துக்கொண்டு அவளும் சாப்பிடாமல் காத்திருந்தாள்.

"நீ ஏன் சாப்பிடலே?"

"நீங்க வந்தப்புறம்தான் எனக்கு பசியும் வருது."

"காலையில் கார் எரிஞ்சதைப் பார்த்து ரொம்ப பயந்துட்டேல்ல?"

"காலையில் நாம வீட்டைவிட்டுக் கிளம்பினப்ப இப்படி நடக்கும்னு நாம நினைக்கவா செஞ்சோம்."

சுந்தர் உடை மாற்றிவிட்டு சாப்பிட வந்து அமர்ந்தான். அஞ்சலி சோகக் குரலில் பேசினாள்.

"என் வாழ்க்கையில் சாதாரண நாட்களில்தான் அசாதாரண சம்பவங்கள்ளாம் நடந்திருக்கு. என் வாழ்க்கையில் நடந்த அதிர்ச்சியூட்டும் சம்பவங்கள்ளாம் பத்திரிகையின் முதல் பக்கத்தில் வரலே. ரேடியோவில் நியூஸ் புல்லெட்டின் வாசிக்கலே. சரித்திர பாடப் புத்தகங்களில் அதெல்லாம் வ்ராது."

"நீ என்ன சொல்றேன்னு எனக்குப் புரியலே அஞ்சலி.

"சாப்பிடுங்க. வாக்கிங் போகும் போது சொல்றேன்."

"இனிமேல் வாக்கிங் போகணுமா? மணி பத்தரையாயிடுத்து. தூக்கம் வரலியா?

"இல்லே சுந்தர். சாப்பிட்டதும் கடலோரமா உங்க கையைப் புடிச்சிக்கிட்டு நடக்கணும்போல இருக்கு. என் மனசில் என்னையறியாம ஏதோ ஒரு பயம் உருவாகிக்கிட்டிருக்கு. கொஞ்ச தூரம் நடந்துட்டு வந்து படுத்தாத்தான் மனசிலேயிருக்கிற பாரம் இறங்கும்னு தோணுது."

–தொடரும்

இருண்ட சாம்பல் நிறத்தை இரவு உடுத்தியிருந்தது.

11.15 இருக்கும்.

கடற்கரை ஈரத்தில் அஞ்சலி சுந்தருடன் கரம் கோர்த்து நடந்தாள்.

வேகமின்றி ஒவ்வொரு அடியாக எடுத்து வைத்து காலடித் தடங்களைப் பதித்துச் சென்றனர்.

கடல் இரைந்தது.

கடலின் மறு விளிம்பை அடிவானத்து இருள் தின்றிருந்தது.

வானத்தில் மின்மினிகளின் மாநில மாநாடு. நிலவின் கீற்று.

காற்று சுந்தரையும், அஞ்சலியையும் சில்லென்று வருடியது.

அஞ்சலி குளிர்காற்றை வரவேற்கும்விதத்தில் சுவாசத்தை நீளமாக இழுத்து, ஆழமாக உள்வாங்கி அப்புறம் நிதானமாக அந்தக் குளுமையை ரசித்து அனுபவித்து வெளியேற்றி சுகம் பெற்றாள்.

மௌனத்தில் வெகுதொலைவு நடை போட்டனர்.

அவனுக்குத் துணையாக அவள். அவளுக்குத் துணையாக அவன். இருப்பினும் இருவரும் இருவர் என்பதை மறந்த நிலையில், ஒன்றாக ஒன்றிக் கலந்துபோன நிலையில் விசித்திரமான, அற்புதமான, மகத்தான தனிமையை ருசித்துத் திளைத்தவண்ணம் நடந்தனர்.

சுந்தர் கேட்டான்.

"என்ன யோசிச்சுக்கிட்டே வர்றே?"

"நிஜமாவே என்னை டில்லிக்கு அழைச்சுக்கிட்டு போகப்போறீங்களா?"

"ஏன் அடிக்கடி இப்படி கேட்கிறே. என்மேல் உனக்கு நம்பிக்கை இல்லையா?"

"நம்பிக்கையில்லாம நான் கேட்கலே..."

"அப்புறம்?"

"எனக்கு ஒரு சந்தேகம்"

"என்ன சந்தேகம்?"

"..........." அஞ்சலி மௌனம்.

"என்ன சந்தேகம். கேளு.?"

"நான்... நான் உங்களுக்கு எதுக்கு சுந்தர்?"

சுந்தரின் பாதங்கள் வேலைநிறுத்தம் செய்ய, அவன் நின்றான்.

அவன் நின்றதும் அவளும் நின்றாள்.

அவன் திரும்பி அவள் விழிகளைப் பார்த்தான்.

வானத்திலிருந்து' வந்த மங்கிய வெளிச்சத்தில் அவள் விழிகள் பளபளத்தன. அவளுடைய இடுப்பை கரங்

# சொல்! சொல்! என் உயிரே!





(21)

களால வளைத்து இழுத்து தன்னுடம்புடன் சேர்த்து இறுகக் கட்டிக்கொண்டு பெருமூச்சை வெளியேற்றினான். "என்ன கேட்டே?"

அவள் சோகத்தையும், ஏக்கத்தையும் சுமந்த பார்வையால் அவன் கண்களையே பார்த்தாள்.

"நான் உங்களோடு இருக்கணும்னு உண்மையிலேயே விரும்பறீங்களா?"

"இல்லே"

"விருப்பம் இல்லேன்னா எதுக்காக என்னை டில்லிக்கு அழைச்சுக்கிட்டுப் போறீங்க?"

"நீ என்கூட இருக்கணும்னு விரும்பலே அஞ்சலி. நான் உன் பக்கத்திலேயே இருக்கணும்னு விரும்பறேன். நான் உன் பக்கத்தில் இல்லேன்னா வாழ்நாள்பூராவும் நான் இருட்டில்தான் இருக்க வேண்டியதிருக்கும்"

"ஏன் டில்லியில் மின்சாரம் இல்லையா?" சோகத்திலும் சிரித்தாள்.

"விளக்குச் சுடரைச் சுற்றி வெளிச்சம் இருக்கிறமாதிரி உன்னதமான காதல் வெளிச்சம் உன்னைச் சுற்றிச் சூழ்ந்துகிட்டிருக்கிறதை நான் உணர்றேன் அஞ்சலி... அந்த வெளிச்சம் நான் உயிர் வாழறதுக்கு எனக்குத் தேவைங்கறதையும் உணர்றேன். அது என்னைத் தவிர வேற யாருக்கும் கிடைக்கக்கூடாதுங்கற கெட்ட புத்தியும் எனக்கு இருக்கு. நான் உன் பக்கத்துலே இல்லேன்னாலும் வெளிச்சம் நிரந்தரமா உன்னுடனேயே இருக்கும். இந்தக் கடலும், அலையும், மணலும் உன்கிட்டேயிருந்து பரவுகிற நேச வெளிச்சத்தில் நனைஞ்சுக்கிட்டேயிருக்கும். கடலும், மணலும் மறைஞ்சு போனாக் கூட உனக்கு எந்த பாதிப்பும் இல்லே. உன்னைச் சுற்றியிருக்கிற வெளிச்சம் இருந்துக்கிட்டேதான் இருக்கும்."

"எனக்குப் புரியலே."

"வாசனையை வெளியேற்றுகிற பூ அந்த வாசனையை முகர்ந்து அனுபவிக்கிற சக்தி காற்றுக்கு இருக்கறதா, இல்லையான்னு கவலைப்படறதில்லே. வெளிச்சத்தைப் பரப்புகிற சுடர் அந்த வெளிச்சத்தை ரிசீவ் பண்ணி பயனடையறதுக்கு ஒரு ஜீவன் இருக்குதான்னு கவலைப்படறதில்லை. அதேமாதிரிதான் உன் வெளிச்சத்தில் இருந்தாலும் இல்லேன்னாலும் உனக்கு பாதிப்பு இல்லே. ஆனா நான் இருட்டுக் கடலில் 'ஆயுள் பூராவும் மூச்சுத் திணறி சாகவேண்டியதிருக்கும். அதை நீ விரும்பினேன்னா என்கூட நீ டில்லி வரவேண்டாம்."

"நான் ஒரு சாதாரணப் பெண். என்னை ரொம்ப உயர்த்தாதீங்க. அப்புறம் நான் நடிச்சுக் கஷ்டப்பட வேண்டியதிருக்கும்" என்று சிரித்தாள்.

சுந்தரின் விரல்கள் அவளுடைய கீழ் இதழை வருடி விளையாடின.

"I need you! I love you! I cannot help it dear!"



"நேற்றிரவு திருடப்போன இடத்தில் புது அனுபவம்!"

"என்ன அண்ணே?"

"அந்த வீட்டு மருமகள் தன் மாமியார் மேல உள்ள கோபத்தினால் வீட்டில் இருந்த நகை, பணமெல்லாம் மூட்டை கட்டி என்கிட்டே கொடுத்துட்டா!"

—மணியன் தர்மலிங்கம்.



"ரொம்பத் தூரம் வந்துட்டோம் சுந்தர்."

"இன்னும் ரொம்பத் தூரம் போகணும் அஞ்சு."

"பாதி ராத்திரியிலயா!"

"நடந்துக் கிட்டேயிருந்தோம்னா விடிஞ்சுரும். அது சரி. மனசில் என்னமோ பயம் உருவாகிக்கிட்டிருக்குன்னு சொன்னியே..."

"ஆமா. காலையில் கார் எரிஞ்சதிலேயிருந்து எம்மனசு சரியில்லே சுந்தர். இன்னும் ரெண்டு நாள் வீட்டிலேயே என்கூடவே இருங்க. எங்கேயும் போக வேண்டாம்."

"முடியாது. எனக்கு ரொம்ப முக்கியமான வேலைகள் இருக்கு."

"அப்படீன்னா நானும் உங்களோடு வர்றேன்."

"வேண்டாம். ஆபத்துக்களிலேயிருந்து நான் ஆம்பளை எப்படியும் தப்பிச்சிருவேன்."

"என்னால் தப்பிக்க முடியாது. பரவாயில்லே. என் உயிரைப்பத்தி எனக்கு கவலை இல்லே. கட்டாயம்

நீங்க போற இடத்துக்கெல்லாம் உங்ககூட நான் நிழல் மாதிரி வந்துக்கிட்டேயிருப்பேன்."

"பிடிவாதம் பிடிக்காதே அஞ்சு. வேணும்னா எனக்கு ஒரு உதவி பண்ணு."

"என்ன பண்ணணும்?"

"நாளைக்கு ஞாயிற்றுக்கிழமை. உன் புரோக்ராம் என்ன?"

"நாளைக்கு மத்தியானம் ரவீந்திரநாத்தை சந்திச்சு பத்திரிகைக்காக பேட்டி எடுக்கிறேன்."

"அவர்கிட்டே ஒரு தகவல் எனக்காக நீ கேட்டுச் சொல்லணும்."

"நீங்களும் என்கூட வரலாமே."

"என்னை எப்படி அவர்கிட்டே இன்ட்ரட்யூஸ் பண்ணுவே?"

"என் வுட் பி'ன்னு சொல்வேன்" என்றவள் முகத்தில் நாணம் படர்ந்தது.

"வேண்டாம். நான் அங்கே வர விரும்பலே."

"அவர்கிட்டே நான் என்ன கேட்கணும்?"

"ரவீந்திரநாத்தோட அண்ணன் மாமண்டூர் பிரம்மா பைக் தொழிற்சாலையின் சேர்மன். இப்ப பிரம்மாவை அவர்கிட்டேயிருந்து பறிக்கிறதுக்கு அமெரிக்காவிலேயிருந்து ஒரு இந்தியன் வர்றான். அவன் பேர் விவேக் பிரபாகர். அந்தக் கம்பெனியை அவன் டேக் ஓவர் பண்ணப் போறான்.."

"நான் ரவீந்திரநாத்கிட்டே என்ன கேட்கணும்?"

"திங்கட்கிழமை அதாவது நாளை மறுநாள் அமெரிக்காவிலிருந்து வரப்போகிற விவேக் பிரபாகரை திங்கள் காலையில் மாமண்டூர் தொழிற்சாலையில் உன் பத்திரிகையின் சார்பில் சந்தித்துப் பேச முடியுமான்னு கேள். அதுக்கு அவர் என்ன பதில் சொல்றார்னு கவனமா கேட்டுட்டு வந்து என்கிட்டே சொல்லணும்."

"நான் திங்கட்கிழமை மாமண்டூர் போய் விவேக் பிரபாகரை பார்க்கணுமா?" என்று அஞ்சலி கேட்டாள்.

"வேண்டாம் நான் திங்கட்கிழமை அவரை பார்க்கணும். ஆனா ரவீந்திரநாத்கிட்டே உன் பத்திரிகைக்காக கேட்கிற மாதிரி நீ கேட்கணும். டி.வி.க்காக விவேக் பிரபாகரை வெச்சு நான் ஒரு புரோக்ராம் பண்ணலாம்னு பார்க்கிறேன்."

**ஞா**யிற்றுக்கிழமை.

அஞ்சலியை ஏமாற்றி வீட்டிலேயே விட்டுவிட்டு சுந்தர் மட்டும் தனியாக வெளியேறினான்.

பாந்தியன் சாலையில் டாக்சி விட்டு இறங்கினான்.

கலீவி ஷாப்பிங் சென்டர் அருகே சென்றான்.

நடைபாதையில், வண்டியில் ஆலவள்ளி சிப்ஸ் வறுத்துக் கொண்டிருந்தவரை நெருங்கினான். ஒரு ரூபாய் கொடுத்து சிப்ஸ் பொட்டலம்



*ஆண் நர்சுகளில் சிறப்பாக பணிபுரிந்தமைக்காக குடியரசுத் தலைவரின் விருது பெற்றிருக்கிறார் தாலே கவுடா. அவர் சொன்னது.–*

**"இந்த தொழிலில் சேர வேண்டும் என்று உங்களுக்கு ஆர்வம் எப்படி ஏற்பட்டது?"**

*கவிஞர் அப்துல் ரகுமானின் எழுத்தோவியம் அடுத்த இதழில் இடம்பெறும்.*

# மறக்க முடியாத அனுபவம்...

"என் சகோதரியை ஒருமுறை மருத்துவமனையில் சேர்த்திருந்தேன். அவளை கவனித்து வந்த நர்ஸ் ஒரு தாயைப்போல அன்புகாட்டி நோயாளிகளை கவனித்து வந்தார். அவரது சுறுசுறுப்பான இயக்கம் என்னைக் கவர்ந்து என்னை இந்த தொழிலில் ஈடுபட உதவியது. நான் இத்தொழிலுக்கு வந்தபின் B.A., B.Sc., L.L.B. பாஸானேன். சில நாட்கள் போலீஸ் துறையிலும் பணிபுரிந்தேன். படிப்பிலும், வேறு துறையிலும் மாறுதல் ஏற்பட்டாலும், இறுதியில் இந்த தொழிலில் இருக்கவே என் விருப்பம் நிரந்தரமாயிற்று."

"உங்கள் தொழிலில் மறக்க முடியாதது...?"

"நான் பணிபுரிந்த மருத்துவ மனையில் வயிற்றில் அறுவை சிகிச்சை செய்யப்பட்ட ஒரு நோயாளிக்கு ரத்தம் ('ஏ' குரூப்) வேண்டி இருந்தது. அதுசமயம் அந்த குரூப் ரத்தம் கைவசம் இல்லை. எனது ரத்தம் அதே குரூப்பைச் சேர்ந்ததால் நான் கொடுத்து உதவினேன். பல மாதங்கள் கழித்து ஒரு கிராமத்திற்குப் போயிருந்த போது, டீ குடிக்க ஒரு கடைக்குச் சென்றேன். அந்தக் கடையின் சொந்தக்காரர் என்னைக் கண்டதும் கண்ணீர் மல்க என்னை வணங்கினார். எனக்கு ஒன்றும் புரியவில்லை. என் ரத்தம் பெற்று புத்துயிர்பெற்ற நபரே என்று எனக்கு நினைவுபடுத்தி, தனது நன்றியை தெரிவித்தார். இப்படி பல தடவை நான் அனுபவங்கள் பெற்றிருக்கிறேன்."

–சியாமளா நாராயண்

---

வாங்கினான். தனியாக எடுத்துச் சென்று பிரித்துப் பார்த்தான்.

உள்ளே அவன் எதிர்பார்த்த துண்டு சீட்டு!

சிப்ஸ் பொட்டலத்தை குப்பைத் தொட்டிக்குள் போட்டுவிட்டு சீட்டைப் பிரித்துப் பார்த்தான்.

'இரவு ஒரு பெண் அனுப்பவும். மிகவும் அவசரம்!'

வாசித்தவன் யோசனைகளுடன் பக்கத்திலிருந்த ஏ. சி. ரெஸ்டாரென்ட்டுக்குள் போய் அமர்ந்தான்.

பெண்ணுக்கு நான் எங்கே போவேன், இந்த சென்னையில். அஞ்சலியைத் தவிர வேறு யாரும் எனக்குப் பழக்கமில்லையே.

கண்ணாடித் தம்ளரில் இருந்த தண்ணீருக்குள் அந்த துண்டுச் சீட்டை செருகினான். எழுத்துக்கள் அழிந்து மாயமாக மறைந்தன.

பிற்பகல் சுந்தர் வீடு திரும்பிய போது பூட்டு கிடந்தது. அஞ்சலி இல்லை. ரவீந்திரநாத்தை சந்திக்கச் சென்றிருப்பாள் என்று சுந்தர் எண்ணிக்கொண்டான். அஞ்சலி கொடுத்திருந்த டூப்ளிகேட் சாவியை உபயோகித்து உள்ளே சென்றான்.

படுக்கையில் சாய்ந்து தீவிரமாக சிந்திக்க ஆரம்பித்தான்.

நாளை திங்கட்கிழமை. விவேக் பிரபாகரை மாமண்டூர் பாலத்தில் மடக்கி நிறுத்தி சுட்டுத் தள்ள பயங்கரவாதி அர்ஜுன் திட்டமிட்டிருக்கிறான். விவேக் பிரபாகரை நான் எப்படி காப்பாற்றப்போகிறேன்! அர்ஜுனை எப்படி மடக்கிப் பிடிக்கப் போகிறேன்! என் கதை நாளை முடிந்துவிடுமோ?

படுக்கையில் புரண்டு கொண்டிருந்தவன் அவனையறியாமல் உறங்கிவிட்டான்.

முன்னிரவில் அஞ்சலி வந்து மணியடித்து அவனை எழுப்பினாள். அவள் கொண்டுவந்த தகவல் சுந்தருக்கு பெருத்த அதிர்ச்சியைக் கொடுத்தது.

–தொடரும்.

22

# ஒரு சொல்! ஒரு சொல்!

இரவீந்திரநாத்தைச் சந்தித்துப் பேட்டியெடுத்துவிட்டு முன்னிரவில் வீடு திரும்பிய அஞ்சலி கொண்டு வந்த தகவல் சுந்தருக்கு பெருத்த அதிர்ச்சியையும் ஆச்சரியத்தையும் அளித்தது.

"விவேக் பிரபாகர் பற்றி ரவீந்திர நாத்கிட்டே கேட்டுட்டேன், சுந்தர்."

"எப்போ அமெரிக்காவிலேயிருந்து வர்றாராம்?"

"நீங்க சொன்னது சரிதான். நாளைக் காலைதான் வர்றாராம். ஆனா மாமண்டூர் தொழிற்சாலையில் அவரை நீங்க பார்க்க முடியாது."

"ஏன்?"

"அங்கே அவர் போகவே மாட்டாராமே. அந்தக் கம்பெனியின் ஷேர்களை எப்படியோ தில்லுமுல்லு பண்ணி வாங்கிட்டாராம். ஆனா 'டேக் ஓவர்'ங்கறது, இந்த ஜென்மத்தில் நடக்காத விஷயம்னு ரவீந்திரநாத் சொல்றார். விவேக்கோட அப்பா இங்கே மெட்ராசில் இறந்துட்டாராம். அதுக்காகத்தான் ஸ்டேட்சிலிருந்து அவசரமா வர்றாராம்."

"அப்படியா!" என்ற சுந்தர் தீவிர சிந்தனையில் மூழ்கினான்.

விவேக் பிரபாகர் நாளைக்காலை விமான நிலையத்திலிருந்து மாமண்டூர் செல்லவில்லையென்றால் எப்படி அர்ஜுன் மாமண்டூர் பாலத்தில் தன் கொலைத் திட்டத்தை நிறைவேற்ற முடியும்? அர்ஜுன் பல ஆயிரம் செலவில் பல மாதங்கள் மூளையை செலவு பண்ணி தீட்டி வைத்திருக்கும் 'ஆபரேஷன் எக்ஸ்' திட்டம் என்ன ஆகும்! அர்ஜுனை நான் மடக்கிப் பிடிப்பதும் அஞ்சலியோடு டெல்லி செல்வதும் எப்போது? எல்லாமே காலவரையறையின்றித் தள்ளிப் போகுமே.

குழப்பத்தினுள் ஒரு வினாடி மூச்சுத் திணறினான்.

"சாப்டுட்டீங்களா?"

"இல்லே. நீ வராம எப்படி சாப்பிடுவேன்?"

"வாங்க சாப்பிடலாம். சப்பாத்தி பார்சல் வாங்கிட்டு வந்திருக்கேன்" என்று கையிலிருந்த பார்சலையும் கைப்பையையும் மேசைமீது வைத்து விட்டு உடை மாற்ற உள்ளே சென்றாள் அஞ்சலி.

ஆல்வள்ளி சிப்ஸ் பொட்டலத்துக்குள்ளிருந்து எடுத்த சீட்டும் அதிலிருந்த வாசகங்களும் சுந்தரின் நினைவைத் தாக்கின. 'இரவு ஒரு பெண் தேவை. மிகவும் அவசரம்' என்று உத்தரவு வந்திருக்கிறதே!. என்னிடம் சேர்க்கப்பட வேண்டிய முக்கிய தகவல் ஏதேனும் இருக்குமோ? அஞ்சலியைப் போகச் சொல்லலாமா? போவாளா? காரணங்கள் கேட்பாளே. வழக்கம்போல ஏதாவது பொய் சொல்லி ஏமாற்றித்தான் அனுப்ப வேண்டும். அவளைவிட்டால் வேறு கதியில்லை. வேறு பெண்ணை எங்கே போய் நான் பிடிப்பேன். 'மிகவும் அவசரம்' என்றிருக்கிறதே.

சாப்பிடும்போது சுந்தர் மெதுவாக ஆரம்பித்தான்.

"சாப்பிட்டதும் அமிஞ்சிக்கரை வரை போயிட்டு வரலாமா?"

"அங்கே யார் இருக்காங்க?"

# Q-K 3

## என் உயிரே!

"அங்கே ஒரு லேடீஸ் ஹாஸ்டல் இருக்கு. நான் ராத்திரி நேரத்தில் உள்ளே போகமுடியாது. கொஞ்சம் தள்ளி நின்னுக்கறேன். நீ மட்டும் உள்ளே போய் எட்டாம் நம்பர் ரூமில் தங்கியிருக்கிற ஸ்ரீ ஜாங்கற பெண்ணைப் பார்த்துட்டு வரணும்."

"யார் ஸ்ரீஜா?"

"டெல்லியில் என்னோடு வேலை பார்க்கிறவரோட தங்கை. மெட்ராசில் தங்கி பி.எச்டி. பண்ணிக் கிட்டிருக்கா."

"ரொம்ப அவசரமா இந்த ராத்திரி நேரத்துலயே சேர்க்கணுமா? நாளைக்குக் காலையில் பார்த்தா என்ன?"



"முடியாது. நாளைக்கு அவ சில சிநேகிதிகளோடு ஊட்டி போறா. திரும்பி வர பத்துப் பதினஞ்சு நாளாகும்."

"அவளைப் பார்த்து நான் என்ன பேசணும்?"

"ஒண்ணும் பேசவேண்டாம். டெல்லியில் இருக்கிற அவளோட அண்ணனுக்கு ஏதோ கொடுத்தனுப்பணுமாம்.."

"அதை அவ உங்ககிட்டே கொண்டு வந்து தரலாமே.."



"தரலாம். இந்த வீட்டை அவ தேடிப் பிடிச்சு வர்றது கஷ்டம்னு நானே வந்து வாங்கிக்கறேன்னு சொல்லிட்டேன்."

"எப்ப பார்த்தீங்க அவளை?"

"பார்க்கலே அஞ்சலி."

"அப்புறம்?"

"அவ என்னோட போனில் பேசினா. ஒரு நாலஞ்சு நாளைக்கு முன்னால."

"சாப்டுட்டு நிம்மதியா கடல் காற்றில் உட்கார்ந்து செஸ் ஆடலாம்னு பார்த்தேன்.."

"வந்து ஆடுவோம்."

**நெ**ல்சன் மாணிக்க முதலியார் சாலையில் தெரு வெளிச்சம் அதிகமில்லாத பகுதியில் சுந்தரும் அஞ்சலியும் ஆட்டோவிலிருந்து இறங்கிய போது மணி ஒன்பதரை இருக்கும்.

சினிமா முடிந்து சாலையில் கும்பல்.

இருவரும் ஆட்டோவைவிட்டு சிறிது விலகிச் சென்றனர்.

சுந்தர் அவள் செல்ல வேண்டிய பாதையைக் காண்பித்தான். "அந்த விளக்குக் கம்பத்தைத் தாண்டினதும் லெஃப்டில் ஒரு சந்து பிரியுது. அதுக்குள்ளேதான் ஹாஸ்டல் இருக்கு."

"சந்துக்குள்ளே எவ்வளவு தூரம் போகணும் சுந்தர்? ஹாஸ்டல் வரைக்கும் நீங்க வரலாமே. உள்ளேதானே வரக்கூடாது."

சுந்தர் சிறிது தயக்கத்துடன் சொன்னான்.

"நான் வர்றேன் அஞ்சலி. சந்துக்குள்ளே ரொம்ப தூரம் போக வேண்டியதில்லே. ரைட்டில் மூணாவது காம்பவுண்டு. ஸ்ரீஜாகிட்டே நீ எதுவும் கேட்க வேண்டாம். எம் பேரைச் சொன்னா அவளே எடுத்துக் கொடுத்துருவா."

**வ**றுத்த மீன்னா உயிரையே விட்டுடுவார்னு சொல்லுவியே அந்த மாமா இப்ப எப்படியிருக்கார்?"

"வறுத்த மீன் சாப்பிடும்போது முள் தொண்டைல சிக்கி உயிரையே விட்டுட்டார்!"

-வெ.சீதாராமன்

"என்ன கொடுப்பா?"

"தெரியலே. ஏதாச்சும் பார்சல் இருக்கும்."

சுந்தரும் அஞ்சலியும் காசு கொடுக்காமல் நழுவி விடுவார்களோ என்றபயத்தில் ஆட்டோ அவர்களைப் பின் தொடர்ந்து ஊர்ந்து வந்தது.

அஞ்சலி வெளிச்சம் அதிகமில்லாத சந்துக்குள் நடந்து போனாள்.

சுந்தர் சந்தின் முனையில் காத்து நின்றான். தலைக்கு மேலே சாலை விளக்கு எரிவதும் அணைவதுமாக இருந்தது.

ஏழெட்டு நிமிடங்களுக்குப் பிறகு அஞ்சலி விடுதியைவிட்டு வெளியே வந்தாள். பிரவுன் காகிதம் சுற்றப்பட்ட சதுர பார்சல் அவள் கையில்.

சாலையில் சுந்தர் நிற்கிறானா

என்று பார்த்தாள். தெரியவில்லை. 'சற்று விலகி நிற்பான். எதற்காக இந்த விடுதியின் அருகே வர பயப்படுகிறான்!' என்று எண்ணிய வளாய் நடந்தாள்.

பத்தடி தூரம் நடப்பதற்குள் ஒரு ஆண் குரல் அதட்டியது. "நில்!"

அஞ்சலி நின்றாள். திரும்பிப் பார்த்தாள்.

"வா இங்கே" என்று அதட்டியது இன்னொரு பெண் குரல்.

அஞ்சலி அஞ்சாமல் இருட்டுப் பகுதியை நோக்கி நடந்தாள். கூர்ந்து பார்த்தாள்.

வெள்ளை அரை ஸ்லாக்கும் பான்ட்டும் அணிந்த நபரின் அருகே ஒரு பெண் – புடவை, பிளவுஸ்– நின்றாள்.

"எங்கே போறே இந்த நேரத்தில்?" என்று ஸ்லாக் மனிதர் அதட்டினார்.

"ரோட்டில் போறவங்களாம் போகிற இடத்தை உங்ககிட்டே சொல்லிட்டுத்தான் போகணுமா?" என்று அஞ்சலி கேட்ட பிறகுதான் ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே இருளோடு இருளாய் நின்ற புல்லெட் வண்டியைக் கவனித்தாள். ஒயர்லெஸ் ரேடியா பொருத்தப்பெற்ற வண்டி!

அஞ்சலி தயங்காமல் அவர்களிடம் நெருங்கிச் சென்றாள். தன் கைப்பைக்குள்ளிருந்து ஒரு அடையாள அட்டையை எடுத்து நீட்டினாள். "நான் பிரெஸ் ரிப்போர்ட்டர்" என்றாள்.

"அஞ்சலி நீயா!"

"சுமதி!"

"ஆமா சுமதியேதான். பேரையாவது ஞாபகம் வெச்சிருக்கியே"

"எப்படி மெட்ராசுக்கு டிரான்ஸ்ஃபர் ஆகி வந்தே?"

"ஆறு மாசமாச்சு.. இன்ஸ்பெக்டர் சார்! இவ என் குளோஸ் ஃபிரெண்ட் அஞ்சலி. எட்டு வருஷம் ஒண்ணா படிச்சோம்."

"எங்கேம்மா போயிட்டு வர்றீங்க?"

"இந்த ஆஸ்டலில் ஒரு சின்ன வேலை சார். பத்திரிகை வேலை."

"இனிமே இந்தப் பக்கம் வர வேண்டாம், நியூஸ் சேகரிக்க வந்தீங்

## வேடிக்கை மனிதர்கள்



கம்ப்யூட்டர் நிபுணர் ஒருவரின் பெயர் 'Z' என்னும் எழுத்தில் துவங்குகிறது. அவரது கணக்கில் அதிக பணம் வரும்படியாக அவர் கணக்கு வைத்திருக்கும் பாங்க்கின் கம்ப்யூட்டரில் தில்லுமுல்லு செய்தார். வங்கியின் வாடிக்கையாளர்களில் ஒவ்வொருவரின் கணக்கிலும் இருந்து 10 சென்ட்டுகளை எடுத்து பெயர்ப் பட்டியலில் கடைசியாக இருப்பவருக்குப் போடுமாறு கம்ப்யூட்டரை 'புரோகிராம்' செய்தார். இவரது பெயர் 'Z'ல் துவங்குவதால் எல்லாருடைய கணக்கிலும் இருந்து பணம் எடுத்து இவரது கணக்கில் சேர்த்தது கம்ப்யூட்டர். இதை சில காலம் யாரும் கண்டு கொள்ளவில்லை. ஆனால் 'Z' வரிசையிலேயே இவருக்குப் பிறகு பெயர் வருமாறு ZYDEL என்ற பெயருள்ள ஒருவன் கணக்கு துவங்கி விடவும், அந்த ஆளுக்கு எல்லா தொகையும் போய்ச் சேர்ந்தது. இவ்வளவு பணம் தான் போடவில்லை என்று அந்த புது ஆள் வங்கியில் புகார் செய்ய, கம்ப்யூட்டர் நிபுணர் கம்பி எண்ண வேண்டியதாயிற்று.



"நீங்க சினிமால நடிக்க வர்லைனா என்ன ஆகியிருப்பீங்க?"

"பாட்டி ஆகியிருப்பேன்!

-வி.சாரதி டேச்சு

கன்னா நீங்க எதிலயாவது மாட்டிக்க வேண்டியதிருக்கும்."

"ஏன் சார்?"

"உங்களுக்குத் தெரியாதா? இந்த ஆஸ்டலில் பிராஸ்டிட்யூஷன் நடக்கிறதா எங்க டிபார்ட்மென்ட்டுக்கும் தகவல் வந்திருக்கும்மா"

"அஞ்சலிக்கு அட்வென்ச்சர் ரொம்ப புடிக்கும் சார்."

"எல்லாருக்கும் பிடிக்கும், இடைஞ்சல்களில் மாட்டிக்காத வரைக்கும்."

"தனியாகவா வந்தே?"

"இல்லே. அவர் ரொட்டில் நிற்கிறார்."

"மிஸ்டர் குருவா?"

"அ.. ஆமா. நாளைக்கு போன் பண்ணு. நிறைய பேசணும்" என்ற அஞ்சலி தன் விசிட்டிங் கார்டை சுமதியிடம் நீட்டினாள்.

ஆட்டோவில் வீடு திரும்பியபோது அஞ்சலி சுந்தருடன் சரியாகப் பேசவில்லை.

சுந்தரின் மனசுக்குள் ஏகப்பட்ட குழப்பம், அவள் சென்ற இடம் லேடீஸ் ஆஸ்டல் அல்ல, தகவல்களைப் பரிமாறிக்கொள்ள மத்திய புலனாய்வுத் துறையினால் நடத்தப் பெறும் 'ஸேஃப் ஹவுஸ்' என்ற உண்மையைத் தெரிவித்துவிடலாமா? அப்படிச் சொல்ல ஆரம்பித்தால் ஏகப்பட்ட உண்மைகளை இவளிடம் தெரிவிக்க வேண்டியதிருக்குமே. என்னை சரியான பொய்யன் என்றல்லவா முடிவு கட்டிவிடுவாள். அப்புறம் என்னுடன் எப்படி டெல்லி புறப்பட்டு வருவாள்?

நள்ளிரவில் அஞ்சலி நன்றாக உறங்கிக் கொண்டிருந்தபோது சுந்தர் ஓசைப்படாமல் எழுந்தான். ஹாலுக்குள் நடந்து விளக்கைப் போட்டான்.

அஞ்சலி ஆஸ்டலில் இருந்து வாங்கி வந்த பார்சலைப் பிரித்தான். உள்ளே வெள்ளைக் காகிதத்தினால் அட்டை போடப்பட்ட புத்தம் புதிய பகவத் கீதை புத்தகம்.

வேறு எதுவுமில்லை.

அட்டையைப் பிரித்து எடுத்தான். மெழுகுவத்தியை ஏற்றி புகையில் அந்த வெள்ளைக் காகிதத்தைப் பிடித்தான். எழுத்துக்கள் தென்பட ஆரம்பித்தன.

'விவேக் பிரபாகர் நாளைக் காலை 7 மணி விமானத்திலிருந்து இறங்கியதும் அர்ஜுனால் கொல்லப்படுவது உறுதி. கொலை நடக்கப்போகும் இடம் மாமண்டூர் பாலம் அல்ல. நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலையில் ஸ்டர்லிங் பகுதி.'

சுந்தரின் மனசில் பரபரப்பு. படபடப்பு.

ஸ்டர்லிங்கில் எந்த இடத்தில் கொலை நடக்கப் போகிறது?

காலை ஏழு மணிக்கு சரியாக இன்னும் ஆறரை மணி நேரம்தான் இருக்கிறது! அதற்குள் கொலை நடக்கப்போகுமிடத்தை கண்டு பிடித்தாக வேண்டுமே!

செய்வதறியாமல் அவன் திகைப்பில் திக்குமுக்காடியபோது வீட்டுக் கதவு 'படபட' வென்று தட்டப்பட்டது.

-தொடரும்

விட்டான். ஆனால் அப்போதாவது அந்தக் குருவிக் குஞ்சு பேசாமல் கூண்டுக்குள்ளே இருந்ததா? இல்லை. மூன்றாவது முறையாக அது முயன்றது.

என்ன ஆச்சரியம்! இந்தத் தடவை அது கீழே விழவில்லை! ஆனந்தமாகச் சிறகடித்துப் பறந்துசென்றது.

இதைப் பார்த்த கேசவன் திகைத்தான். திகைப்பு அவனுடைய சிந்தனையைக் கிளறி விட்டது.

"முதலில் அது கீழே விழுந்தது. அப்படியிருந்தும் அது ஏன் பறக்க முயல வேண்டும்? மூன்றாவது தடவையில் அது கீழே விழவில்லையே!– ஏன்?"

–கேசவனின் சிந்தனை இந்தக் கேள்வியை எழுப்பியது.

"அட பைத்தியக்காரா, அதையும் உன்னைப் போல ஒரு மண்டு என்று நினைத்தாயா? முதலில் தோல்வி அடைந்த குருவி, மூன்றாம் முறை வெற்றி பெற்றுவிட்டது. ஒரு முறை தோற்றுவிட்டதற்காக அது சும்மா இருந்ததா? அல்லது உயிரை விட்டுவிட்டதா? வாழ்க்கையில் நமக்கு எத்தனையோ தோல்விகள்! தோல்வியைக் கண்டு மனம் தளரவேகூடாது."

–கேசவனின் இதயத்தில் எழுந்தது இம்மாதிரியான ஓர் ஒலி. உடனே, அவனுடைய மனக்கண்முன், மாமரம் ஏறிய பையனும், தாத்தா சொன்ன கதையும் காட்சி அளித்தன. அவன் தீவிரமாகச் சிந்தித்தான்.

"மாமரத்திலிருந்து விழுந்த பையன் அடிபட்டபிறகும், மரம் ஏறினான். ஏழு முறை முயற்சித்து சிலந்தி வெற்றி பெற்றது. பகைவரிடம் தோற்று ஓடி வந்த அரசன் உயிரை விட்டுவிடவில்லை! மீண்டும் போரிடாமல் சும்மா இருக்கவும் இல்லை. அப்படியெல்லாம் இருக்கும்போது, ஒரே ஒரு தடவை தோல்வி அடைந்த நான் மட்டும் எதற்காக இறக்கவேண்டும்? மீண்டும் நன்றாகப் படித்தால், மாமரத்துப் பையனைப் போல்– கூடுகட்டிய சிலந்தியைப்போல– பறக்க முயன்ற குருவியைப்போல; நானும் வெற்றி அடைய மாட்டேனா? கட்டாயம் வெற்றி அடைவேன். நான் மண்டு அல்ல. நான் இறக்கப் போவதில்லை. என் வாழ்வைப் பாழாக்கிக்கொள்ள மாட்டேன். வெற்றியால், என் தோல்வியைத் துடைப்பேன்" என்று தீர்மானித்துக் கொண்டான், கேசவன்.

அப்போது வழியில் பேரனும் தாத்தாவும் பேசிக்கொண்டு சென்றதும் அவன் நினைவுக்கு வந்தது. உடனே, அவனுடைய அருமை அம்மாவின் நினைவும் வந்தது.

"ஐயோ! அம்மா! எனக்காக நீ காத்திருப்பாயே! நான் இறந்தால், நிச்சயம் நீயும் இறந்துவிடுவாய். உனக்கு நான் ஒருநாளும் எமனாகமாட்டேன்"– கேசவன் மனதிற்குள்ளேயே பேசினான்.

தெளிவடைந்த கேசவன் குளத்தைப் பார்த்தான். அவன் கண்கள் மருண்டன.

"நான் இறக்கமாட்டேன். இறக்க முடியாது. இறக்கவும் கூடாது. கோழையல்லவா இதற்கெல்லாம் இறப்பான்? நான் இறக்கப்போவதில்லை. அம்மா! கவலைப்படாதே! நான் இறக்க மாட்டேன். இதோ வந்துவிட்டேன்" என்று கூறிக்கொண்டே வெறிபிடித்தவன்போல் வீட்டை நோக்கி ஓடினான், கேசவன்.

மரணப் பேயின் கோர வாயிலே சிக்கி மடியவிருந்த கேசவன், சிந்திக்கத் தெரிந்த ஒரே காரணத்தால் தப்பிவிட்டான்.

*'பொம்மை வண்டி'*
*சிறுகதைத் தொகுதி (வானதி பதிப்பக வெளியீடு) நூலிலிருந்து*

# சொல்! சொல்!

### நான்தாண்டா அர்ஜுன்

கதவு 'படபட'வென்று மூர்க்கத்தனமாகத் தட்டப்பட்டது. சுந்தர் தன்முன் இருந்தவைகளை வாரிச் சுருட்டி மறைத்துவிட்டு எழுந்தான். சன்னல் நோக்கி முன்னேறினான்.

இந்த நள்ளிரவில் இந்தக் கடலோரத்து வீட்டுக்கு வந்து கதவைத் தட்டுவது யார்!

குருவா!

குரு இங்கேயெல்லாம் வரமாட்டானே! வேறு யாராக இருக்கும்? திறக்கலாமா வேண்டாமா?

அவன் யோசித்து ஒரு தீர்மானத்துக்கு வருவதற்குள் 'திம் திம்' என்று காலால் கதவை உதைக்கும் சப்தம்.

அஞ்சலி எழுந்துவிடுவாளே!

கவலைப்பட்டவனாய் சன்னலின் இரண்டு கதவுகளில் ஒன்றை சற்றே பின்னுக்கிழுத்து இடுக்கி கண் பதித்துப் பார்த்தான்.

அரையிருளில் காவல் துறை ஜீப்! காக்கி உடைகள்!

இங்கே யாரைத் தேடி வந்திருக்கிறார்கள்!

போலீசைப் பார்த்ததும் சுந்தரின் பயம் ஓரளவுக்குத் தெளிந்தது.

தைரியமாக வாயிற் கதவைத் திறந்தான். "யார் வேணும்?" என்று கேட்டான்.

"யு ஆர் அண்டர் அரெஸ்ட் மிஸ்டர் சுந்தர்" என்று ஒரு காக்கி அதிகாரி 'கரகர' குரலில் அறிவித்தபோது அஞ்சலி படுக்கையிலிருந்து எழுந்து ஹாலுக்குள் நுழைந்தாள்.



சவீதா

# மீண்டும்

கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் மன்னர் ஆட்சிகள் முடிவுற்று, கம்யூனிச ஆட்சி ஏற்பட்டது. இப்போது கம்யூனிச ஆட்சிகளும் மாற்றம் பெற்று மக்களாட்சிகள் மலரத் தொடங்கி உள்ளன. இந்தச் சூழ்நிலையில், முன்பு புரட்சிகளின் போது மகுடமிழந்த அரச குடும்ப வாரிசுகள் இப்போது மக்களாட்சி முறையிலேயே ஆட்சியைப் பிடிக்க விரும்புகின்றனர். அத்தகைய அரச பரம்பரையினர் யார்?

(மேல் வரிசையில்) அலெக்சாண்டர்– 45 வயதான இவர் இரண்டாம் பீட்டரின் மகன். யூகோஸ்லாவோகிய நாட்டு இளவரசன். இவர் பிறந்ததே இலண்டன் கிலாரிட்ஜ் ஓட்டலில்.

முகம்மது ஸாசர் ஷா– ரோமில் வாழ்ந்து வரும் இவர் ஆப்கானிஸ்தானின் முன்னாள் மன்னர். வயது 75. ஆப்கானிஸ்தானிய மக்கள் விரும்புகின்ற பணியைச் செய்யக் காத்திருப்பதாக அறிவித்திருக்கிறார் ஷா.

லேகா–I- 50 வயதான இவர் அல்பேனிய அரச குடும்ப வாரிசு. தென்னாப்பிரிக்காவில் சர்வதேச வர்த்தகம் புரிகிறார். அல்பேனியாவில் ஆட்சி புரிந்து வரும் ரமீஸ் அலியாவை விரட்ட தனது ஆஸ்திரேலிய மனைவி சூசனுடன் (ராணி) கிளம்பத் தயாராக இருக்கிறார்.

(கீழ் வரிசையில்) கிரிலோவிச்– ஜார் மன்னர் பரம்பரையைச் சேர்ந்தவர். 1917–ல் இவரது பெற்றோர் ரஷ்யாவை விட்டு ஓடியபோது பின்லாந்தில் செட்டில் ஆனார்கள். தற்போது பாரீசில் வசிக்கிறார்.

ஸிமோன்–II- பல்கேரிய அரச பரம்பரையினரான இவர் தற்போது வழக்கறிஞர். 6 வயதில் புரட்சியின் போது நாட்டை விட்டு வெளியேறியவர்.

ஆட்டோவான் ஹாப்ஸ்பர்க்– வயது 77, ஹங்கேரிய அரச பரம்பரை.

மைக்கேல்– ருமேனிய முன்னாள் அரசர். வயது 68. ஜெனிவா அருகே வசிக்கிறார்.

–ராம்குமார்.

---

"நீங்க தேடி வந்த சுந்தர் நான் இல்லே."

"உன் பேரென்ன?"

"சுந்தர்".

"உன்னைக் கொண்டு போகிறதுக்காகத்தான் வந்திருக்கோம். கள்ளக் கடத்தலுக்காக. அமிஞ்சிக்கரை லேடீஸ் ஆஸ்டலிலிருந்து கடத்திட்டு வந்த ஹெராய்ன் பார்சலை எங்கே அனுப்பி வெச்சே?"

"அட நீ ஒண்ணு. ஸ்டேஷனில் கேட்க வேண்டியதையெல்லாம் இங்கே வெச்சு ஏன்பா கேட்டுக்கிட்டிருக்கே?" என்றது இன்னொரு குரல்.

சுந்தருக்குப் பின்னே நின்ற அஞ்சலி முகத்தில் குழப்பம்.

"ரெண்டு விஷயம் சொல்றேன். ஒண்ணு, கடத்தலில் நான் ஈடுபட்டலே ரெண்டு, என்னை அரெஸ்ட் பண்ண உங்களுக்கு பவர் கிடையாது."

"ஏண்டா முடியாது. நீ என்ன இந்த நாட்டு..."

'I am an I.P.S. officer from RAW. என் ஐடென்டிடி கார்டு பார்க்கணுமா?"

"உன்கிட்டே ஒரு கார்டா இருக்கும்.. சி.பி.ஐ. கார்டு வெச்சிருப்பே. கஸ்டம்ஸ் கார்டு வெச்சிருப்பே. டி.வி.சென்டர் கார்டு வெச்சிருப்பே. அதெல்லாம் யாருக்கு வேணும். முதலில் வண்டியில் ஏறு."

அஞ்சலி விழிகளில் அதிர்ச்சி.

"முடியாது. உங்க கமிஷனர்கிட்டே நான் பேசணும்" என்றார் சுந்தர்.

"கமிஷனரை இங்கே கூட்டியாரச் சொல்றான்பா" என்று ஒருவர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே சுந்தரின் இடது கன்னத்தில் 'ணங்' என்று குத்து விழுந்தது. அவன் இடப்

# ஆளமுயலும் அரச வாரிசுகள்!



பக்கம் சரிந்தான். மறுநொடி சுதாரித்துக்கொண்டு குத்து விட்டவர் மீது பாய்ந்தான். காக்கி உடையிலிருந்த இன்னொரு இளைஞன் சுறுசுறுப்பாக ஜாக்கிசான் பாணியில் மார்ஷியல் ஆர்ட்ஸ் டெமான்ஸ்ட்ரேஷனில் இறங்க சுந்தரின் முழங்காலுக்குக் கீழே கடுமையான உதை. மறுகணம் சுந்தர் தரையை முகர்ந்துகொண்டிருந்தான். அவன் முதுகில் வசதியாக இடம் பிடித்துக்கொண்ட ஒருவர் கைத்துப்பாக்கியைத் திருப்பி அதன் கைப்பிடியால் சுந்தரின் பிடரியில் அடி வைக்க உலகம் "அபவ்ட் டர்ன்" போட்டு சுந்தரிடமிருந்து பிரிந்து சென்றது. அவன் கண்கள் இருண்டன.

அஞ்சலி பீதிநிறைந்த விழிகளுடன் குறுக்கே பாய்ந்து."பிளீஸ் லீவ் ஹிம், அவரை ஒண்ணும் பண்ணாதீங்க. அவரை நான் ஸ்டேஷனுக்கு கொண்டு வந்து சேர்க்கிறேன்.அவரை விட்டுருங்க" என்று கெஞ்சினாள்.

அவளுடைய கூக்குரலைக் கேட்க காக்கி உடைகளுக்குநேரமில்லை. ஜீப் புறப்பட்டது.

தாங்கமுடியாத தலை வேதனையுடன் சுந்தர் கண்களைத் திறக்க முயன்றான். முடியவில்லை'அஞ்சலி அஞ்சலி' என்று அவன் உதடுகள் முணுமுணுத்தன.

கண்களைத் திறக்க மீண்டும் முயன்றான். சிரமத்துடன் இமைகளை மேலேற்ற, தலைக்கு மேலே தொங்கிய பல்பின் பிரகாசம் அவன் கண்களை கூசச் செய்தது. மூடிக்கொண்டான். பிடரியில் வேதனை.

நான் எங்கே இருக்கிறேன். காவல் நிலையமா இது! லாக்கப் மாதிரி

தெரியவில்லையே! அசாத்திய அன ழும் புழுக்கமுமாக இருக்கிறதே! தரை ஏன் கரடு முரடாக இருக்கிறது? ட்டாந்தரையிலா படுத்திருக்கிறேன்? ம நிச்சயமாக இது காவல் நிலைய ல்ல. நள்ளிரவில் கதவைத்தட்டி என்னை இங்கே கடத்தி வந்து டைத்துப் போட்டிருப்பவர்கள் காவலராக இருக்கமுடியாது. காக்கி அணிந்த அர்ஜுனின் அடியாட்களா அவர்கள்! எவனையும் காணோமே. வாய்விட்டு அலறலாமா?

கடற்கரை வீட்டிலிருந்து என்னை எப்போது எப்படி இங்கே கொண்டு வந்து சேர்த்தனர்? வீட்டு வாசலில் நான் தாக்குண்டபிறகு எவ்வளவு நேரம் கழிந்துபோயி ருக்கும்? செகண்டுகளா? நிமிடங் களா? அல்லது சில மணிநேரங்களா?

பல்பின் வெளிச்சம் கண்களைத் தாக்காதபடி தலையை வேறு பக்க மாகத் திருப்பி கண்களைத் திறந் தான். உலகம் புகைப்படலத்துக் குள்ளிருந்து சிறுகச் சிறுக வெளிப் பட்டது.

அவனுடைய மூக்கிற்கு மிகவும் அருகே பூமி களி மண் பூமி. எழுந்து அமர்ந்தான். தலைக்கு மேலே களி மண் பூமி. மண்வெட்டியால் சுரண் டிய மாதிரி பட்டை பட்டையாக வரிகள்.

தலையை வேதனையுடன் திருப்பி எல்லா பக்கமும் பார்த்தான். அதிர்ச்சி!

பூமிக்கடியில் ஆறடி அகலத்தில் ஏழடி உயரத்தில் தோண்டப் பட்டிருந்த மரணக் குழிக்குள் இருப் பதை உணர்ந்தான். மண் சரிவைத் தடுக்க குறுக்கிலும் நெடுக்கிலும் பலகைகள் பதிக்கப்பட்டிருந்தன. ஒரு பக்கத்தில் மட்டும் மிருகக் காட்சிச் சாலைக் கூண்டு போல இரும்பு 'கிரில்'. கம்பிகளுக்கு அப்பால் களிமண் குகை கோண லாக வளைந்து சென்றது.

பசியும் ஈர மண்ணில் நெடியும் சேர்ந்து வயிற்றைப் புரட்டியது.

கைக்கடியாரத்தைப் பார்த்தான். 6.00.

அதற்குள் விடிந்துவிட்டதா!

இன்னும் ஒருமணி நேரத்தில் விவேக் பிரபாகர் வரும் விமானம் தரையைத் தொட்டுவிடுமே. அவ னைத் தீர்த்துக்கட்ட பயங்கரவாதி அர்ஜுன் ஸ்டர்லிங்கில் காத்திருப் பானே! ஸ்டர்லிங்கில் எங்கே கொலை நடக்கப்போகிறது? விவேக் பிரபாகரின் பங்களா அடையாறில் தானே இருக்கிறது. அந்தப்பாவி ஏன் ஸ்டர்லிங் பக்கம் போய்த் தொலைய வேண்டும். அப்பக்கம் சென்றால் அவன் உயிருக்கு ஆபத்து என்று அவனிடம் சொல்லி அவ னுடைய ரூட்டை மாற்றச் சொல்ல வேண்டுமே! யார் சொல்லுவது?

உள்ளத்தில் வேதனைச் சிரிப்பு. என்னைக் காப்பாற்றவே யாரு மில்லை. நானெங்கே விவேக் பிரபா கரைக் காப்பாற்றப் போகிறேன்.

சென்னை வந்து பல மாதங்கள்





நிரோஷாவின் பேச்சு, செயல் எல்லாமே இன்னமும் அவளை குழந்தையாகத்தான் எனக்கு காட்டுகிறது. சாக்லேட்டை எங்கு வைத்தாலும் திருடித்தின்று விடுவாள். தன் புத்தகம், பேனா எல்லாவற்றையும் ஒளித்து ஒளித்து வைத்துக்கொள்வாள்.

ஷூட்டிங் இல்லாத நாட்களில் வீட்டை ஒழிக்கிறேன் பேர்வழி என என்னையும் துணைக்கு அழைத்துக் கொண்டு விடுவாள். திடீரென்று மாயமாய் மறைந்து விடுவாள். எங்கே என்று பார்த்தால் எங்காவது ஒரு மூலையில் நின்று கொண்டிருப்பாள்... சாக்லேட்டும் கையுமாக.

அவுட்டோரிலிருந்து வந்தவுடன் டிரஸ் சேஞ்ச்கூட செய்யாமல் 'ஹாய் டார்லிங்' என கொஞ்ச ஆரம்பித்துவிடுவாள். ஸ்கூபி, டூபி என்ற இரண்டு நாய்குட்டிகளும்கூட அவள் இஷ்டத்திற்கு ஆடும், பாடும்.

நிரோஷாவிற்கு மிகவும் மென்மையான மனது. படங்களில் ஏதேனும் சோகக் காட்சி வந்தாலும்கூட அழுதுவிடுவாள்.

அவளின் படங்களின் நான் மிகவும் ரசித்தது செந்தூரப்பூவே. சமீப காலங்களில் அவள் நடிப்பில் தெரியும் முதிர்ச்சி எனக்கு சந்தோஷமாயிருக்கிறது.

நான் ஏதேனும் அட்வைஸ் செய்தால் முதலில் சிணுங்கினாலும் பின்னர் மறுக்காமல் ஏற்றுக்கொண்டு விடுவாள்.

அவளை யாரேனும் பாராட்டினால் எனக்கு மிகவும் பெருமையாக இருக்கும்.

என்னைப்பற்றி 72–ம் பக்கம்

தங்கி அர்ஜுனை மடக்கிப் பிடிக்கத் திட்டமிட்டதெல்லாம் வீணாகி விட்டதே. அர்ஜுனின் நிலவறைப் பொறிக்குள் அகப்பட்டுக் கொள்வதற்கா டெல்லி என்மீது நம்பிக்கை வைத்து என்னை இங்கே அனுப்பி வைத்தது!

இந்த பயங்கரவாதி இனி என்னை உயிரோடு வெளியே விடமாட்டான். இனி அஞ்சலியை நான் பார்க்க முடியாது. அஞ்சலியோடு நான் கழித்த இனிய மாலை நேரங்கள் இனி திரும்பி வராது.

நிச்சயமான, மிகவும் எளிமையான இன்பங்களைத் தந்த கடந்த சில மாத சென்னை வாழ்க்கையை ஒரு கணம் நினைவில் ஓடவிட்டான். அஞ்சலி என்ற சோலை மலர் அறிமுகமான ஆரம்ப நாட்கள்..செஸ் காய்களை தொட்டு நகர்த்திய அவளுடைய நீண்ட விரல்கள்... அவள் முகத்தில் பெரும்பாலும் நிலைத்திருக்கும் புன்னகையின் கீற்று போன்ற ஆயிரம் சமாச்சாரங்கள் மூடிக்கிடந்த அவன் கண்கள் முன்னே வலம் வர தொண்டை அடைத்தது.

இரு தினங்களுக்கு முன் அஞ்சலி தன் மார்புடன் அவன் முகத்தை இறுகச் சேர்த்து நீண்ட நேரம் அணைத்திருந்தபோது அவள் உடல் உடை கூந்தல் மூன்றும் பரப்பிய நறு மணங்களுக்கும் இந்த ஈரக்களி மண்ணின் நெடிக்கும் எத்தனை வித்தியாசம்!

"காபி சாப்பிடறயா மச்சான்?"

திடுக்கிட்டுத் திரும்பினான் சுந்தர். 'கிரில்'லின் மறுபக்கம் வந்து நின்றது – குரு!

"குரு! நாம எங்கே இருக்கோம்?"

"நான் எங்கே இருக்கேன்னு கேளு மச்சான். நீ அடைபட்டிருக்கிற இந்த இடத்துக்கு எங்க பாஷையில் பீப்பிள்ஸ் பிரிசன். அதாவது 'மக்கள் சிறை'ன்னு பேரு."

"குரு..!"

"ஸாரி மச்சான். இந்த இடத்தில் எம் பேரு அர்ஜுன் -

–தொடரும்

# என் உயிரே!



கம்பித் தடுப்பின் மறுபுறம் நின்ற குருவை மௌனமாகப் பார்த்தான் சுந்தர்.

"என்ன அப்படி பார்க்கிறே மச்சான். நம்ப முடியலயா நான் சொல்றதை. நான்தான் தீக்கண்ணன் என்கிற அர்ஜுன். என்னைத் தவிர வேறு அர்ஜுன் இந்த உலகத்தில் கிடையாது."

உடனே சுந்தர் சொன்னான்–

"அர்ஜுனின் உண்மைப் பெயர் குரு இல்லே. குமாரசாமி. அவனோட சொந்த ஊர் திருச்சி. அவனோட அப்பா எம்.பி.பி.எஸ். டாக்டர். தமிழர். அம்மா கேரளத்துப் பெண்."

"தெரியும். நீ சொல்ற அர்ஜுனை ஒண்ணரை வருஷத்துக்கு முன்னாடியே நான் அனுப்பி வெச்சிட்டேன். அப்புறம் நான் அர்ஜுனா யிட்டேன்."

"என்ன சொல்றே?"

"கத்தியைக் கீழே போட மனசில்லாத கசாப்புக் கடைக்காரன் கௌதம புத்தராக நினைச்சா எப்படி மச்சான்? அர்ஜுன் ஒரு நாள் காலை கண் முழிச்சதும் திடீர்னு Disillusionment ஏற்பட்ட மாதிரி பேச ஆரம்பிச்சான். Annihilation, அதாவது நிர்மூலமாக்கிறது இனிமே நம் மக்கள் புரட்சி இயக்கத்தின் கொள்கையா இருக்காதுன்னான். கொள்கையை அழிக்க எனக்கு இஷ்டமில்லே. அவனை அழிச்சிட்டேன்."

"எப்படி?"

"நானும் அவனும் மலையில் ஒளிஞ்சிருந்த இடத்திலேயிருந்து எனக்கு வேண்டியதைச் சுருட்டிக்கிட்டு வெளியேறினேன். அவன் இருக்கிற இடத்தை போலீசுக்கு அனாமதேய 'போன் கால்' மூலமா தெரியப்படுத்தினேன். 'வேலூரையடுத்த மலைப்பகுதியில் போலீசாருக்கும் பயங்கரவாதிகளுக்கும் நடந்த துப்பாக்கிச் சண்டையில் அர்ஜுன் சுட்டுக்கொல்லப்பட்டான்'னு பத்திரிகைகள் புகைப்படத்தோடு வெளியிட்ட செய்தி நூத்துக்கு நூறு உண்மை. அவன் கொல்லப்பட்டதுக்கு மறுநாள் எங்க கோஷ்டியைச் சேர்ந்த பத்துப் பேருக்கும் ஒயர்லெஸ் மூலம் நான் சர்குலர் அனுப்பினேன்."

"என்னன்னு!"

"அர்ஜுனாகிய நான் இன்னும் சாகலே. பத்திரிகையில் நான் செத்ததாக வந்த செய்தி நானே பத்திரிகைகளுக்கு கொடுத்த Deliberate mis-information. யாரும் அந்தச் செய்தியை நம்ப வேண்டாம். எல்லாரும் வழக்கம்போல சுறுசுறுப்பா செயல்படுங்க. 'ஆபரேஷன் பெங்குவின்' குறிப்பிட்ட நேரத்தில் செயல்படுத்தப்படும்னு செய்தி அனுப்பினேன்."

"அதென்ன பெங்குவின்?"

"ஹெலிகாப்டரை வங்காளக் கடலுக்குள்ளே வீழ்த்தறது. ஒரிஜினல் அர்ஜுன் திட்டமிட்டபடி இம்மி பிசகாம எங்க கோஷ்டியை வெச்சு அந்த முதல் நாசவேலையை வெற்றிகரமா செஞ்சு முடிச்சேன்."

"அர்ஜுன் செத்துக்கிடக்கிற புகைப்படத்தை உங்க கோஷ்டியைச் சேர்ந்தவங்க பத்திரிகையில் பார்த்திருப்பாங்களே."

"பார்த்திருப்பாங்க."

"அப்புறம் எப்படி அர்ஜுன் சாகலேன்னு நீ அனுப்பின வயர்லெஸ் செய்தியை உன்னோட கோஷ்டி நம்பிச்சு?"

"அர்ஜுனுக்கு ரைட் ஹாண்ட், லெஃப்ட் ஹாண்ட் எல்லாமே நான்தான் மச்சான். எங்க ரெண்டு பேரையும் எங்க கோஷ்டியைச் சேர்ந்தவங்க நேருக்குநேர் பார்த்ததே கிடையாது. நான் அர்ஜுன் ஆகிறதுக்கு இந்த விஷயம்தான் ரொம்ப அனுகூலமா இருந்துச்சு. அது மட்டுமில்லே. அர்ஜுன் வெளிநாடு போயிருந்தப்ப பிளாஸ்டிக் சர்ஜரி பண்ணி சாயலை வேறு மாத்திக்கிட்டான். அதனால் பத்திரிகைச் செய்தியையும் புகைப்படத்தையும் எங்க ஆட்கள் நம்பலே."

"அப்படீன்னா எங்க இலாகாவுக்கு தகவல் கொடுத்துக்கிட்டிருந்த பொருளாதாரப் பேராசிரியர் நந்தகுமாரை..."

"டெலிபோன் பாம் மூலமாக தீர்த்துக்கட்டினது சாச்சாத் நானே

"20-ம் நம்பர் பஸ் ருட்டை கபாலி விற்கப் போறானாம். ஆயிரம் ரூபாயாம்!"
"ஆயிரமா?"
"ஆமாம். செம கலக்ஷன் வர்ற ருட்டாச்சே!"
—சின்ன ராஜா

தான். ஒரிஜினல் அர்ஜுன் பாணியில் சுருதி சுத்தமா செஞ்சு முடிச்சேன். அந்தக் கொலைதான் உன்னோட இலாகாவுக்கு ஆத்திரத்தை உண்டாக்கியிருக்கு. அர்ஜுன் உயிரோடுதான் இருக்கிறான்ங்கற சந்தேகத்தையும் ஏற்படுத்தியிருக்கு. அப்புறம்தான் உன் சென்னை விஜயம். அர்ஜுனைப் பிடிச்சு இல்லாம பண்றதுக்காக டெல்லி ஒரு அதிகாரியை அனுப்புதுங்கற விஷயத்தை நீ சென்னையில் கால் வைக்கிறதுக்கு ரெண்டு நாளைக்கு முன்னாலயே நான் மோப்பம் பிடிச்சுத் தெரிஞ்சுக்கிட்டேன் மச்சான். ஆனா நீ டி.வி. சீரியலுக்கு ஸ்கிரிப்ட் எழுத வந்ததா





என்கிட்டே புருடா விட்டே. உன் பொய்யை என் மாஜி மனைவி அஞ்சலி இன்னும் நம்பிக்கிட்டிருக்கா. உன் நடவடிக்கைகளை அப்பப்ப நான் தெரிஞ்சுக்கறதுக்காகத்தான் அஞ்சலிக்கும் உனக்கும் நட்புறவு ஏற்படுத்த திட்டம் போட்டேன். அவளோடு உன்னை செஸ் ஆட வெச்சேன். அவ தங்கியிருந்த என் பத்திரிகைக்குச் சொந்தமான விம்பிள்டன் கோர்ட் ஃபிளாட்டில் உன்னையும் தங்க வெச்சேன். நான் நினைச்சது நடந்தது. நீ தலைகுப்புற காதலில் விழுந்தே. ஆரம்பத்தில் அஞ்சலிக்குக் குழப்பம். நீ அவ மனசை நேசிக்கிறயா இல்லே சதையை நேசிக்கிறயான்னு. ஒருநாள் அவ தன் சிநேகிதியோடு இரவு ஆட்டம் சினிமாவுக்குப் போயிட்டு மாஜி கணவனாகிய என்னோடு முன்னிரவைக் கழிச்சதா உன்கிட்டே பொய் சொன்னா. என்னையும் அதே மாதிரி உன்கிட்டே சொல்லச் சொல்லி ரிக்வெஸ்ட் பண்ணினா..."

"எதுக்கு?"

"உன் மனசு பரந்ததுதானான்னு தெரிஞ்சுக்கறதுக்கு. தனக்கு இரண்டாவது கணவனாகும் தகுதி உனக்கு இருக்குதான்னு தெரிஞ்சுக்கறதுக்கு. அவ வெச்ச அந்த பரீட்சையில் நீ தேறிட்டே. அவளும் நானும் சேர்ந்து ஒரே மாதிரியா சொன்ன பொய்யை நீ உண்மைன்னு நம்பினே. ஆனா அதுக்காக அஞ்சலியை நீ வெறுக்கலே. அவளை மேலும் மேலும் நேசிக்க ஆரம்பிச்சே. ஒரு மழை பெய்யற விடியற்காலை நேரத்தில் குளிக்கறதுக்காக டவல் கட்டிக்கிட்டு நின்ன அஞ்சலியை என்னோட பெண் சகாக்கள்தான் கடத்திட்டுப் போனாங்க. அவளை நான் கடத்திட்டுப் போனதும் அப்புறம் மீட்டு உன்கிட்டே நான் ஒப்படைச்சதும் எதுக்காக?"

"எதுக்காக?"

"என் லோக்கல் செல்வாக்கை உன்கிட்டே காட்டறதுக்காக. என்னை முழுசா நீ நம்பறதுக்காக. உன் ரகசிய சென்னை விஜயத்தின் உண்மையான நோக்கத்தை உன் வாயிலேயிருந்து வரவழைக்கிறதுக்காக. என் திட்டம் வெற்றியடைஞ்சுது. அஞ்சலியை நான் மீட்டுத் தர்றேன்னு வாக்குறுதியளிச்சதும் நீ உன்னைப் பற்றிய, உன் சென்னைப் பயணத்தைப் பற்றிய உண்மைகளைச் சொல்லிட்டே. பாவம் அஞ்சலி. உன்னை மாதிரி அவளும் உன்னை உயிரை விட்டு நேசிக்க ஆரம்பிச்சிட்டா. டெல்லிக்கு அவளை நீ அழைச்சுக்கிட்டுப் போயி அவளுக்குப் புதுவாழ்வு கொடுக்கப் போறதா நம்பிக்கிட்டிருக்கா. பூமிக்கடியில் உயிரோடு

"வேலையில்லாம ஊர் சுத்தின உங்க பையன் திருமணத்துக்குப்பிறகு என்ன பண்றான்?"
"மனைவியோட ஊர் சுத்திக்கிட்டிருக்கான்..."
— மணியன் தர்மலிங்கம்

# அசலும் நகலும்

இங்கே தமிழில் மோகன், விஜயகாந்த் ஆகியோர் கமல், ரஜினியின் நகலாக கருதப்பட்டது உண்டு. அது அவர்கள் ஆரம்ப காலத்தில். அப்படி தற்போது மலையாள நடிகர் மோகன்லாலின் நகலாக மதன்லால் என்ற நடிகர் வந்திருக்கிறார். முக அமைப்பு, தோற்றம், ஸ்டைல் ஆகியவற்றில் மோகன்லாலை ஒத்திருக்கும் மதன்லால் நடிக்கும் படித்தின் பெயர் 'சூப்பர் ஸ்டார்!' இதில் மதன்லால் சினிமா நடிகராக வருகிறார். இந்தப் படத்தைப்பற்றிக்

---

உனக்கு சமாதி கட்டப்போறேங்கறது அவளுக்குத் தெரியாது. நீ அவகிட்டே ஏகப்பட்ட பொய்களைச் சொல்லி உன் உளவு வேலைக்கு அவளை நல்லா உபயோகப்படுத்திக் கிட்டே. நீ என்கிட்டேயிருந்து தப்பி டெல்லிக்கு அவளை அழைச்சுக் கிட்டுப் போனாலும் ரொம்ப நாள் அவ உன்னோடு வாழமாட்டா."

"ஏன்?"

"நீ அவகிட்டே மறைச்சு வெச்சிருக்கிற உன் உத்தியோகத்தைப் பற்றிய உண்மைகளை அவ தெரிஞ்சுக்கற நிமிஷத்தில் உன்னை உதறியெறிஞ்சிருவா. அவ காரெக்டர் அப்படி. தன்னை மாதிரியே எல்லாரும் பிளேனா இருக்கணும்னு விரும்பறவ அவ. நான் ஏகப்பட்ட விஷயங்களை மறைச்சதினால்தான் என் வாழ்க்கையிலிருந்து நடையைக் கட்டினா."

"உங்க டிவோர்சுக்கு காரணம்?"

"அஞ்சலி சொல்லலியா?"

"இல்லே."

"சாகப்போற நீ அதையெல்லாம் தெரிஞ்சு என்ன பண்ணப்போறே? சரி. கேட்டுக்கோ. அவளை அவளுக்குத் தெரியாமலேயே என் பயங்கரவாதச் செயல்களுக்குப் பயன்படுத்திக்கிட்டிருந்தேன். தாய்லாந்து போய் சில சட்டப் புத்தகங்கள் வாங்கிக்கிட்டு வரச்சொல்லி அனுப்பினேன். நான் அவளை தாய்லாந்து போகச் சொன்னது வேற விஷயத்துக்காகங்கறது அவளுக்குத் தெரியாது. மெட்ராஸ் ஏர்போர்ட்டிலேயே மாட்டிக்கிட்டா. காரணம், நான் அவளுக்கு ஏஞ்சலாங்கற கற்பனைப் பெயரில் பாஸ்போர்ட் எடுத்துக் கொடுத்திருந்தேன். அதை அவ கவனிக்கலே. உண்மைப் பெயரை விமான நிலைய அதிகாரிகள் கிட்டே உளறி எக்கச்சக்கமா மாட்டிக்கிட்டு ஒருவழியா தப்பிச்சுத் திரும்பி வந்தா. அந்த சம்பவம்தான் எங்க விவாகரத்துக்கு காரணம்."

"அப்படியா!"

"ஆமா. No woman wants to be used."

குரு இப்படிச் சொன்னதும் சுந்தரின் மனம் கடற்கரை வீட்டில் தனியாக இருக்கும் அஞ்சலியிடம் ஒரு நொடி பாய்ந்து மீண்டது.

"குரு. நீ எப்படி அர்ஜுன் ஆனேங்கறதை சொல்லிட்டே. எதுக்காக இந்த பயங்கரவாதத்தில் குதிச்சே? அதைத்தான் என்னால் ஜீரணிக்க முடியலே."

"நான் சக்தி படைச்சவனா விளங்கணும்னு ஆசைப்பட்டேன். சினிமாவிலயும் நாவல்களிலும் ரெண்டே பேர்தான் சக்தி படைச்சவங்களா இருப்பாங்க. ஓர்த்தன் ஹீரோ. இன்னொர்த்தன் வில்லன். இன்றைய சமூகம் என்னை ஹீரோவாகறதுக்கு அனுமதிக்கலே. அதனால் வில்லனாயிட்டேன்."

கேள்விப்பட்ட மோகன்லால் ரசிகர்கள் கொதித்தெழுந்து "சூப்பர் ஸ்டார்" படத்தினை திரையிட அனுமதிக்க மாட்டோம். என்று கூறியிருக்கிறார்கள். கேரளாவில் இப்படியொரு பிரச்சினை எழுவது வேடிக்கைதான்!

—எஸ்.விஜயன்


மோகன்லால்


மதன்லால்

"இந்த வாழ்க்கையினால் உனக்கு என்ன லாபம்?"

"பவர்! அதிகாரம்! அதில் கிடைக்கிற சுகமே தனி! அணுகுண்டு வீசச் சொல்லி உத்தரவு போட்டுட்டு அமெரிக்க ஜனாதிபதி ட்ரூமன் தூங்காம முழிச்சுக்கிட்டிருந்தாராம். 'இரோசிமாவும், நாகசாகியும் புகைமண்டலத்தில் மூழ்கிவிட்டன, பூமியின் வரைபடத்தில் அந்த இரு நகரங்களும் இல்லாமல் போய் விட்டன' என்ற தகவல் வந்த பிறகு தான் படுக்கைக்குப் போனாராம். மூன்றே நிமிஷத்தில் லட்சக்கணக்கான ஆண் பெண் குழந்தைகளை அணுசக்தி விழுங்கி ஏப்பமிட்ட பிறகு தான் ட்ரூமனுக்கு தூக்கம் வந்திருக்கு. மறுநாள் காலையில் அவரைச் சந்தித்த பத்திரிகை நிருபர்கள் 'மிஸ்டர் பிரசிடென்ட்! நேத்திக்கு நைட் உங்களால் நல்லா தூங்க முடிஞ்சுதா'ன்னு கேட்டாங்க. அதுக்கு அவர் என்ன பதில் சொன்னார் தெரியுமா?"

"அந்தக் கதையெல்லாம் எனக்குத் தெரியாது. சொல்."

"என்னிக்குமே இல்லாமநேத்திக்கு நைட் நான் ரொம்ப நிம்மதியா தூங்கினேன். காரணம், உலகத்திலேயே சக்தி வாய்ந்தவன் நான் தாங்கறது உறுதியாயிடுச்சு அப்படீன்னு பதில் சொல்லியிருக்கிறார். அவர்தான் true man மச்சான். 'நீ அதிகாரங்களோடு எப்போதும் இருக்க விரும்பினால் மக்களை சர்வ சதாகாலமும் அச்சுறுத்தலிலேயே வைத்திரு' அப்படீன்னு அடால்ஃப் இட்லர் தன் சுயசரிதையில் சொல்லியிருக்கார். அவர் சொன்னது கரெக்ட்னு எனக்கு தோணிச்சு..."

"கரெக்ட்தான். சில சமயங்களில் பைத்தியக்காரங்க சொல்றதுகூட கரெக்டாத்தான் இருக்கும்."

"சரி. நான் உன்னை மாதிரி இல்லே. ரொம்ப பிசி.. என்னோட அடுத்த 'ஆபரேஷன் எக்ஸ்' திட்டத்தை நிறைவேத்தணும். விவேக் பிரபாகர் வர்ற பிளேன் ஒரு மணி நேரம் லேட்டா எட்டு மணிக்கு தரையைத் தொடுது. அவனோட பென்ஸ் வண்டி எட்டே முக்காலுக்கு ஸ்டார்லிங்கைத் தொடும். அந்த நேரத்தில் என் கை ஸ்னைப்பரைத் தொடும். குண்டு அவன் மூளையைத் தொடும். இப்ப மணி ஏழே முக்கால். சரியா ஒரு மணி நேரம்தான் இருக்குது. நீ முறியடிக்க நினைச்ச கொலைத் திட்டத்தை அர்ஜுன் வெற்றிகரமா நிறைவேற்றிட்டாங்கறதை உன் ஆயுசு முடியறதுக்குள்ளே நீ தெரிஞ்சுக்கணும். பாக்கியை வந்து சொல்றேன்."

குரு விருட்டென்று திரும்பி நடந்து குகையின் திருப்பத்தில் காணாமல் போனான்.

(அடுத்த இதழில் முடியும்)

**கா**மராசர் விமானநிலையத்தில் ஒரு விமானம் ஓடுபாதையை உரசி நின்றது.

விவேக் பிரபாகர் கருப்பு 'சூட்'டில் விமானம்விட்டு இறங்கினான். மணி எட்டு.

**அ**தே சமயம் ஸ்டர்லிங் பகுதியில் 'விம்பிள்டன் கோர்ட்'டின் பத்தாவது மாடியில் –

சாலைப் பக்கத்து சன்னலருகே குரு.

ஸ்னைப்பர்ஸ்கோப் பொருத்தப் பெற்ற கொலைக்கருவியை ஏந்தி நின்றான். அதன் 'பாரல்' பகுதி சன்னலில் உட்கார்ந்திருந்தது. கைக் கடிகாரத்தையும் சாலையையும் வெறிக் கண்களால் மாறி மாறிப் பார்த்த வண்ணமிருந்தான்.

**பூ**மிக்கடியிலுள்ள சிறையில் சுந்தர் இரும்புக்கம்பிகளை பலங் கொண்ட மட்டும் அசைத்துப் பார்த் தான். கம்பிகளைப் பெயர்த்தெடுப் பதோ வளைப்பதோ இயலாத காரி யம் என்பது சந்தேகத்துக்கிடமில் லாமல் புரிந்துவிட்டது.

'கிரில்'லில் ஒரு ஆள் வெளியேறும் அளவுக்கு ஒரு கதவு இருப்பதையும் வெளிப்பக்கம் பூட்டு தொங்குவதை யும் விரல்களால் ஸ்பரிசித்து உணர்ந் தான்.

குகைக்குள் யாரோ நுழையும் காலடியோசை. யார்!

சுந்தரின் மனம் படபடத்தது.

போலீஸ் சீருடையில் ஒருவன் வந் தான். இரவு கடற்கரை வீட்டுக்கு வந்து சுந்தரைத் தாக்கியவர்களில் ஒருவன் அவன்!

சுந்தர் அவனைக் கூர்ந்து பார்த் தான்.

இரவில் அவன் அணியாத மூக்குக் கண்ணாடி இப்போது அவன் முகத் தில்.

சுந்தரின் மூளை நினைவு ஆல் பத்தின் ஏடுகளை மளமளவென்று இடமும் வலமுமாகப் புரட்டித் தள்ளி அவன் யார் என்பதை ஒரே நொடி யில் கண்டுபிடித்துவிட்டது. அவனை சுந்தர் பலமுறை குருவின் பத்திரிகை அலுவலகத்தில் சந்தித்திருக்கிறான்.

"மகேஷ்!" என்றான் சுந்தர்.

"ஆமா. ரொம்ப லேட்டா அடை யாளம் கண்டுபிடிச்சிருக்கே."

"சில மனிதர்களை உடனே அடை யாளம் தெரிஞ்சிக்க முடியலே மகேஷ். அதான் என்னோட பலவீனம்."

"என்ன வேணும் உனக்கு? நீ என்ன கேட்டாலும் வாங்கிக்கொடுக் கச் சொல்லிட்டுப்போயிருக்கார். எங்க காப்டன்."

சவீதா

சொல்! சொல்! என் உயிரே!



"யார் காப்டன்?"

"கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி பார்த்திருப்பியே."

அவன் குரு".

"உலகத்துக்கு அவர் குரு. எங்களுக்கு அவர் தீக்கண்ணன் என்கிற காப்டன் அர்ஜுன். அவர்கிட்டே உன்னை மாதிரி வாலாட்டினவங்களோட வாழ்க்கை இந்த நகரத்துக்குக் கீழே பல இடங்களில் புதைஞ்சு முடிஞ்சு போயிருக்கு. உனக்கு தன் பழைய பெண்டாட்டியையும் தன் ஃபிளாட்டையும் கொடுத்து நல்ல முறையில் மெட்ராசை விட்டுப் போயிருன்னு ஜாடைமாடையாக அவர் சொல்லிப்பார்த்தார். வெளிப் படையாகவே மிரட்டினார். அவர் பேச்சைக் கேட்டு டெல்லிக்குப் புறப் பட்டுப் போயிருந்தேன்னா பிழைச் சிருப்பே. ஆனா நீ கேட்கலே. நீ இருக்கவேண்டிய இடம் இதுதான்னு காப்டன் நேற்றிரவுதான் தீர்ப்பு எழுதினார். நல்லபடியா கொண்டு வந்து சேர்த்துட்டோம். யாருக்கும் வாடகை தரவேண்டிய கவலை உனக்கு இங்கே இல்லை. இங்கேயே நீ பல நாட்கள், பல மாதங்கள், பல வருடங்கள் இருக்கலாம். உன்னை இங்கே அனுப்பி வெச்ச உளவுத் துறை உன் 'டெட்'பாடியை உலகம் பூராவும் வலை போட்டுத் தேடும். ஆனா அவுங்களுக்குத் தெரியாது, நீ அவுங்களோட எல்லைக்குள்ளேதான் இருக்கேங்கறது".

"நான் எங்கே இருக்கேன்!"

"அமிஞ்சிக்கரை. உங்க உளவுத் துறை லேடீஸ் ஆஸ்டல்ங்கற பெயரில் நடத்திக்கிட்டிக்கிற ஸேஃப் அவுசுக்குக் கீழே. லேடீஸ் ஆஸ்டல்ங்கற பெயரால் நடத்தப்படும் மகளிர் உளவுக் கலை பயிற்சிக் கல்லூரிக்குக் கீழே. உங்க இலாகாவின் நாளைய பெண் ஒற்றர்கள் நம்ம தலைக்கு சில அடிகளுக்கு மேலேதான் உலவிக்கிட்டிருக்காங்க. ஆனா யாராலும் உன்னைக் காப்பாற்றமுடியாது."

"மகேஷ்! எனக்கு ரொம்ப ஆச்சரியமா இருக்கு. எப்படி எங்க இடத்துக்குக் கீழேயே துணிச்சலாக குகை அமைக்க முடிஞ்சுது உங்களால்?"

"காப்டன் அர்ஜுனால் முடியாதது எதுவும் கிடையாது. உங்க ஆஸ்டலுக்குள் அர்ஜுன் எங்க கோஷ்டியைச் சேர்ந்த ரெண்டு பெண்களை விதைச்சிருந்தார். அந்த ரெண்டு பேரில் ஒருத்திதான் ஷைனி. திடீர்னு கட்சி மாறி உனக்கு தகவல் கொடுக்க ஆரம்பிச்சா. உன்னை அவ ரகசியமா பிர்லா பிளானடேரியத்துக்குப் பக்கத்தில் சந்திச்சப்ப கையும் களவுமா பிடிபட்டா. அவளை அடிச்சு ரங்கராஜபுரம் வீட்டுக்குள்ளே தொங்கவிட்டோம்."

"அதெல்லாம் எனக்குத் தெரியும் மகேஷ். உனக்கும் அர்ஜுனுக்கும் தொடர்பு உண்டுங்கறதையும் நான் போன மாசமே கண்டுபிடிச்சிட்டேன்."

"புருடா வுடாதே. எப்படி கண்டு பிடிச்சே?"

"ரவீந்திரநாத் பங்களாவுக்குள்ளே நான் புகுந்து லாக்கரைத் திறந்து 'ஆபரேஷன் எக்ஸ்' விவரங்களைக் கொண்ட கவரை கடத்திட்டு வந்தேன், உனக்குத் தெரியுமா?"

"நல்லா தெரியும்."

"'ஆபரேஷன் எக்ஸ்' கவர் இருந்த லாக்கருக்குள் ஒரு செக் புத்தகம் கிடந்தது. அதில் உன் பேரில் செக்குகள் கிழிக்கப்பட்டிருந்ததைப் பார்த்தேன். ரவீந்திரநாத் உன் மூலமாகத்தான் அர்ஜுனுக்கு பணம் அனுப்பியிருக்கணும்னு ஊகிச்சேன். அது சரியா போயிருச்சு. அது போகட்டும். ஆஸ்டலுக்குக் கீழே குழி தோண்டினது எப்படி?"

"லேடீஸ் ஆஸ்டலுக்குப் பின்னால் இருக்கிற பாழடைஞ்ச பங்களாவை எங்க காப்டன் விலைக்கு வாங்கிட்டார். அந்த பங்களாவின் சமையலறைக்குள்ளே ஆழமா குழிதோண்டி இரண்டே வாரத்தில் இந்த சுரங்கச் சிறைச்சாலையை உனக்காக ஸ்பெஷலா அமைச்சோம். என்ன சாப்பிடறே? ஜின்னில் ஐஸ் பொட்டு கோனியாக் ரெண்டு சொட்டு போட்டுத் தரட்டுமா? இந்தக் காலை நேரத்துக்கு இதமா இருக்கும். விவேக் பிரபாகரைத் தீர்த்துக் கட்டிட்டு அர்ஜுன் திரும்பி வர்றவரைக்கும் தெம்பா இருப்பே."



"நானே செய்த விமானத்தை நேற்று கடலில் செலுத்தி ஒரு ரவுண்டு போய் விட்டு வந்தேன்."

"பொய் சொல்லதேடா. விமானம் தண்டவாளத்தில் மட்டும்தான் செல்லும்."

–அ.ராஜாரஹ்மான்

"ஸ்டர்லிங்கில் எந்த இடத்தில் கொலை நடக்கப்போகுது மகேஷ்?"

"இப்ப நீ தெரிஞ்சுக்கலாம். உன்னால் இனிமே எதையும் தடுக்க முடியாது. மணி இப்ப எட்டு அஞ்சு. இன்னும் நாற்பது நிமிஷத்தில் விவேக் பிரபாகரோட பென்ஸ் வண்டி ஸ்டர்லிங் திருப்பத்தைக் கடந்து நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலைக்குள் நுழையும். நீயும் அஞ்சலியும் தங்கியிருந்த விம்பிள்டன் கோர்ட் கட்டிடத்துக்கு முன்னால் நாங்கள் ஏற்பாடு செஞ்சிருக்கிற திருமண ஊர்வலம் பென்ஸ் வண்டியை பிரேக் போட்டு நிற்க வைக்கும். காப்டன் பத்தாவது மாடியிலிருந்து, காரின் பின் சீட்டில் இடப்புறம் சாய்ஞ்சிருக்கும் விவேக் பிரபாகர் மீது குண்டு மாரி பொழிவார். இதெப்படி இருக்கு?"

"நல்லாவே இருக்கு. திரும்பிப் பார்."

திரும்பிப் பார்த்த மகேஷ் அதிர்ச்சியுடனும் அச்சத்துடனும் கிறில் பக்கமாகப் பின் வாங்கினான்.

அவன் முகத்துக்கு எதிரே அஞ்சலி துப்பாக்கியை நீட்டி, இரு கரங்களாலும் இறுகமாகப் பிடித்துக் கொண்டு நின்றாள்.

"அசைஞ்சே அஞ்சாறு குண்டுகளை நீ முழுங்க வேண்டியதிருக்கும்."

"அஞ்சலி! அவன்கிட்டேயிருந்து சாவியைப் பிடுங்கி முதலில் கூண்டைத் திறந்து விடு."

"மரியாதையா திறந்து விடு" என்று உத்தரவிட்டாள் அஞ்சலி.

வேறு வழியில்லாமல் மகேஷ் சாவியை எடுத்தான். குனிந்து பூட்டைத் திறக்கிற மாதிரி பாவனை செய்தான். கழுதையைப்போல பின்னால் நின்ற அஞ்சலியை உதைத்துத் தள்ளினான்.

தாக்குதலை எதிர்பாராத அஞ்சலி மட்டமல்லாக்க பின்பக்கமாகச் சாய்ந்தாள். கைத்துப்பாக்கி அவள் பிடியிலிருந்து நழுவி விலகிப்போய் விழ, அதை எடுக்க மகேஷ் பாய்ந்தான்.

அப்போது அவசரமாக உள்ளே வந்தவனின் நைக் ஷூ மகேஷின் முகத்தை மிதித்துத்தள்ளியது.

வந்தவனை சுந்தர் ஆச்சரியத்துடன் பார்த்தான்.

வெள்ளை பேகி பான்ட். நீலச் சட்டை!

அவனை அடையாளம் தெரிந்து கொள்ள அதிக நேரம் பிடிக்கவில்லை சுந்தருக்கு. அஞ்சலியும் சுந்தரும் இருள் பரவிய ஒரு அந்தி வேளையில் கடற்கரை மணலில் நடத்து கொண்டிருந்தபோது அவர்களைப் பின்தொடர்த்து வந்தவன் அவன். சுந்தர் திரும்பி முறைக்கவே அவன் வேறு திசையில் நடையைக் கட்டி, சிவப்பு மாருதி ஜிப்சியில் ஏறி

அஞ்சலியும் சுந்தரும் சென்ற காரை விரட்டிக்கொண்டு பின்தொடர்ந்தவன்.

நீலச்சட்டைக்காரன் துப்பாக்கியை கைப்பற்றுவதற்குள் மகேஷ் அஞ்சலியைத் தன் உடம்புக்கு முன்பாக கேடயம் போல பாதுகாப்பாக நிறுத்தி அவளை கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். மகேஷின் பளபளக்கும் கத்தி அஞ்சலியின் தொண்டையில்.

நீலச்சட்டை துப்பாக்கியுடன் சிறுகச்சிறுக முன்னேற, மகேஷ் அஞ்சலியுடன் பின்வாங்க, கிரில்லுக்கு வெளியே நீண்ட சுந்தரின் கரம் மகேஷின் மணிக்கட்டைத் திருகி கத்தியைப் பிடுங்கியது.

துப்பாக்கிக்குப் பயந்த மகேஷ் கூண்டைத் திறந்துவிட்டான்.

சுந்தர் வெளியே வருவதற்கும் நீலச்சட்டைக்காரன் மகேஷைமிதித்து கூண்டுக்குள் தள்ளுவதற்கும் சரியாக இருந்தது.

அஞ்சலி பூட்டை எடுத்து கூண்டைப் பூட்டினாள்.

சிவப்பு மாருதி ஜிப்சி அமிஞ்சிக் கரையிலிருந்து கிளம்பியது. நீலச்சட்டைக்காரன் வண்டியை ஸ்டர்லிங் நோக்கி கண்மண் தெரியாமல் விரட்டினான்.

"நீ யார்?" என்று சுந்தர் கேட்டான். பூமிக்கடியில் கிடந்தவனுக்கு மேல் உலகத்தின் காற்று சுகமாக இருந்தது.

"என் பெயர் பிரகாஷ். உங்க பாதுகாப்புக்காக டெல்லியிலிருந்து வந்தவன் நான்" என்று தன் அடையாள அட்டையை எடுத்துக் காண்பித்தான்.

"எப்படி பாதாளக் குகையைக் கண்டுபிடிச்சு வந்தே?"

"காலையில் கடற்கரை வீட்டுப் பக்கம் வழக்கம்போல உங்க பாதுகாப்புக்காக வட்டமடிச்சுக்கிட்டிருந்தேன். நீங்க வீட்டுக்குள்ளே இல்லேன்னு தோணிச்சு. உங்க மிஸஸ் கிட்டே கேட்டேன்."

சுந்தர் அஞ்சலி முகத்தைப் பார்க்க அவள் முகத்தில் நாணம்.

"அப்புறம்?" என்றான் சுந்தர்.

"ரைட். உங்களை போலீஸ் பிடிச்சுட்டுப்போயிட்டதா இவுங்க சொன்னாங்க. போலீஸ் உங்களை டச் பண்ண முடியாதுன்னு எனக்குத் தெரியும். அர்ஜுனின் குகைக்குள்ளேதான் இருப்பிங்கன்னு தோணிச்சு. இவுங்ககிட்டே சொன்னேன். இவுங்க நானும் வர்றேன்னு பிடிவாதம் பிடிச்சாங்க. அழைச்சுக்கிட்டு அர்ஜுன் சிறைச்சாலைக்கு வந்தேன்."

"அர்ஜுன் பூமிக்குக் கீழே..."

"சுரங்கம் தோண்ட ஆரம்பிச்சதுமே லேடீஸ் ஆஸ்டலில் நாம வெச்சிருக்கிற ஸீஸ்மோகிராஃப் காட்டிக் கொடுத்துடுச்சு சார்."

"சரி அப்புறம் பேசிக்கலாம். வேகமா போ. எட்டு முப்பத்தஞ்சு ஆயிருச்சு" என்றான் சுந்தர்.

விவேக் பிரபாகரின் பென்ஸ் வண்டி உஸ்மான் சாலையைக் கடந்து ஜி.என். செட்டியில் திரும்பி ஸ்டர்லிங் திசையில் ஓடியது.

அதேசமயம் ஸ்டர்லிங்கில் புறப்பட்ட கல்யாண ஊர்வலம் மெல்ல விம்பிள்டன் கோர்ட்டை நெருங்கியது. விம்பிள்டன் கோர்ட் எதிரே நகர மறுத்த ஊர்வலம், சாலையை அடைத்தது. பின்னால் வந்த வாகனங்கள் முன்னே செல்ல முடியாமல் மூச்சுத்திணற, டிராஃபிக் ஜாம் ஏற்பட்டு....

ஹாடோஸ் சாலைப் பக்கமிருந்து சீறி வந்த மாருதி ஜீப்சியை விம்பிள்டன் கோர்ட்டின் வலப்புறம் டயர் தேய நிறுத்தினான் நீலச் சட்டைக்காரன்.

சுந்தர் மட்டும் வெளியே குதித்தான்.

"நீங்க யாரும் என்கூட வரவேண்டாம்" என்ற சுந்தர் அஞ்சலியைப் பார்த்து அவசரமாகச் சொன்னான். "நீ வீட்டுக்குப்போ. நாளைக்கு நாம டில்லி கிளம்பறோம். அதுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்."

அஞ்சலி "பெஸ்ட் அஃப் லக்" என்று கையசைத்தாள்.

விம்பிள்டன் கோட்டின் லிப்டை சுந்தர் நெருங்க, அது ஐந்தாறு பேருடன் மேலே கிளம்பி விட்டது. சுந்தர் நொடிகளை வீணாக்க விரும்பாமல் படிகளில் 'தபதப'வென்று ஏறி பத்துக்கு ஓடினான்.

விவேக் பிரபாகரின் பென்ஸ் வண்டி விம்பிள்டன் கோர்ட் எதிரே போக்குவரத்து நெரிசலில் சிக்கிக் கொள்ள...

பத்தாவது மாடி சன்னலோரம் நின்ற குரு பென்ஸ் வண்டியின் பின் பக்கத்து சன்னலை ஸ்னைப்பர்ஸ்





கோப் மூலமாகக் குறி பார்த்தான்.

சுந்தர் காலால் விட்ட உதையில் கதவு திறந்து கொண்டது. குருவின் மீது பாய்ந்தான். சின்ன அடிதடிக்குப் பிறகு அந்தக் கொலைக்கருவி சுந்தரின் கையில்.

குரு அச்சத்துடன் ஹாலுக்குள் நகர்ந்து கட்டிடத்தின் கொல்லைப்புற சன்னலருகே சென்றான். "எப்படி மச்சான் தப்பி வந்தே?"

"குரு! நீ அர்ஜுன் கோஷ்டியைச் சேர்ந்தவனாத்தான் இருக்கணும்னு ரொம்ப நாளைக்கு முன்னாலேயே நான் முடிவு பண்ணிட்டேன். ஆனா நீயே அர்ஜுனா இருப்பேன்னு நான் எதிர்பார்க்கலே. நானும் அஞ்சலியும் இல்லாத நேரங்களில் நீ இந்த ஃப்ளாட்டுக்குள் நுழைஞ்சு குடையறது உன் வழக்கம். அதைக் கண்டுபிடிக்கத்தான் ஃபாஸ்ஃபொரசன்ட் தூளை வாசலில் கிடந்த மிதிபாய் மேல் தூவி வெச்சேன். குளியலறையில் கிரனேடும் காரில் டைம்பாமும் வெச்சு என்னை காலி பண்ண முயற்சி பண்ணி தோற்றுப்போனே. டெலிபோனில் குரலை மாற்றி என்னை டெல்லிக்கு ஓடச் சொல்லி மிரட்டினே. மாமண்டூர் பாலத்தில் விவேக் பிரபாகரைக் கொல்ல நீ திட்டமிடலே. நீ திட்டமிட்டது என்னைக் கொல்றதுக்கு. அதுக்காக நீ தயாரிச்ச போலித் திட்டம்தான் ஆபரேஷன் எக்ஸ். விவேக் பிரபாகரைக் காப்பாற்ற நான் மாமண்டூர் போவேன்னு நீ எதிர்பார்த்து ஏமாந்தே. உன்மேல் சந்தேகம் வலுத்ததினால்தான் கடந்த நாலஞ்சு நாளா நான் உன்னை விட்டு விலகியே இருந்தேன்.

குரு! அறுபத்திநாலு கருப்பு வெள்ளைச் சதுரங்கள் உள்ள அற்புதமான சதுரங்க அரங்கத்தில் குதிரைகளையும் பிஷப்களையும் ராஜா ராணியையும் நகர்த்தி எதிரியோட புத்திசாலித்தனத்தை பலத்தை படைப்பாற்றலை தான்ங்கற அகந்தையை தகர்த்தவன் நான்! கடந்தசில மாதங்களில் நானும் நீயும் மாறி மாறி காய்களை நகர்த்தி BLIND CHESS ஆடினோம். எனக்கு உண்மையிலேயே உதவற மாதிரி சில காரியங்களைச் செஞ்சு என் நம்பிக்கையை சம்பாதிச்சு கடைசியில் என்னை வீழ்த்தப் பார்த்தே. நான் விழிப்போடு இருந்து உன்னை வீழ்த்திட்டேன். உன்னுடைய ரெண்டு கொலைத்திட்டங்களும் தூள் தூளாயிருச்சு. விவேக் பிரபாகரோட பென்ஸ் வண்டி நீ சிரமப்பட்டு ஏற்பாடு பண்ணின கல்யாண ஊர்வலத்தை ஓவர்டேக் பண்ணிட்டுப் போயிருச்சு. அவனை நான் காப்பாத்திட்டேன். ஆனா, ஐ'ம் சாரி, உன்னைக் காப்பாற்ற என்னால் முடியாது."

"சுந்தர்! காலேஜ் ஹாஸ்டலில் ஒரே ரூமில் நாம தங்கி படிச்சப்ப உனக்கு காமாலை கண்டு முண்டா பனியனெல்லாம் மஞ்சளாகி உன் உடல் நிலை கவலைக்கிடமான சமயத்தில் உன்னை எப்படி காப்பாற்றினேன்னு நினைச்சுப்பார். என்னை ரெண்டாவது தாய்னு சொன்னியே, மறந்துட்டியா?"

சுந்தர் துப்பாக்கியுடன் கண நேரம் தாமதித்தான்.

"நான் உன் கையில் மாட்டினேன்னா என்னை உன் இலாகா எப்படி விசாரிக்கும்னு உனக்குத் தெரியும். அந்த சித்திரவதைக்கு என்னை ஆளாக்காதே. நான் தப்பி ஓடறதுக்கு உன்கிட்டே அனுமதி கேட்கலே. என்னுடைய பாணியில் கணக்கை நான் செட்டில் பண்ணிக்கிறேன்."

சுந்தர் மேலும் தாமதித்தான்.

"குட் பய் மச்சான்! யாரோ வர்ற மாதிரி சப்தம் கேட்குது. போலீசை வரவழைச்சிருப்பேன்னு நினைக்கிறேன்."

சுந்தர் திரும்பிப் பார்த்தான். யாரும் வரவில்லை மறுபடியும் குருவின் பக்கம் திரும்பினான்.

விசாலமான சன்னலின் கர்ட்டன்கள் காற்று சிறிதும் இல்லாதபோதும் இடமும் வலமுமாக அசைந்து கொண்டிருந்தன.

குரு இல்லை.

சுந்தர் ஓடிப்போய் எட்டிப் பார்த்தான்.

உருவாகிக் கொண்டிருந்த பல மாடிக் கட்டிடத்துக்காக எழுப்பப்பட்டிருந்த கம்பிகளுக்கிடையே அவள் உடம்பு மாட்டிக்கொண்டு அந்தரத்தில் ஊசலாடியது. ஒரு கம்பி அவள் வயிற்றுக்குள் பாய்ந்து கம்பியில் செந்நிறம் வழிந்தது.

பகலில் சுந்தர் ஒரு இராணுவ அலுவலகத்துக்குச் சென்றான்.







மணிரத்னம் இயக்கும் 'அஞ்சலி' படத்தில் மோகன் நடிக்க மறுத்த ரோலில் இப்பொழுது பிரபு நடித்துக் கொண்டிருக்கிறார். –பவளக்கொடி

காவல் துறை ஆணையரைச் சந்தித்தான். சாஸ்திரி பவன் சென்றான். அடையாறு போய் டெல்லிக்கு தகவல் அனுப்பினான்.

சாயந்தரம் கடற்கரை வீட்டுக்குச் சென்ற போது மழை பிசுபிசுத்தது.

அஞ்சலிக்கு மிகவும் பிடித்தமான மழை.

டெல்லி புறப்பட அஞ்சலி மூட்டை முடிச்சுகளுடன் தயாராக இருப்பாள். இன்னும் விமான டிக்கெட் உறுதி செய்யப்படவில்லையே.

பஸ்ஸரை அழுத்தினான். பதில் வரவில்லை.

கதவைத் தள்ளினான். திறந்து வழி விட்டது.

"அஞ்சலீ! அஞ்சலீ!"

பதில் இல்லை.

உறங்குகிறாளா?

படுக்கையறைக்குள் நுழைந்தான். இல்லை.

நகரத்துக்குப் போயிருப்பாள், ஏதாவது வாங்கிவர. ஆனால்–

கதவைத் திறந்து போட்டுவிட்டா செல்வாள்?

சன்னல் வழியாக கடற்கரையைப் பார்த்தான்.

கருநீல நிறக் கடல் வெள்ளி அலைகளை கரைக்கு அனுப்பி வைத்த வண்ணமிருந்தது.

"அஞ்சலீ! அஞ்சலீ!"

குளியலறைகுள் கால் வைத்தவன் அதிர்ந்து உகிர்ந்து பொடிப்பொடியாகிப்போனான்.

குளியல்தொட்டியின் நீருக்குள்–

அஞ்சலி கிடந்தாள்.

கண்கள் நீருக்கடியில் விரியத் திறந்து பளபளத்தன.

அவனுக்குப் பிரியமான ரோஜா வண்ண நைட்கவுன் அணிந்திருந்தாள்.

குளியல் தொட்டிக்குப் பக்கத்தில் தூக்கமாத்திரைப் புட்டி காலியாக உருண்டுகிடந்தது.

காலையில் விம்பிள்டன் கோர்ட் அருகே அஞ்சலி 'பெஸ்ட் அஃப் லக்' சொல்லி கரம் அசைத்தது கண் முன்னே வந்தது.

மறுநாள் முன்னிரவு விமானம் வானத்துக்கு ஏறியதும் சுந்தர் கைக்கு அடக்கமான கம்ப்யூட்டர் செஸ் போர்டை எடுத்து மடியில் வைத்து கருப்புக்கும் வெள்ளைக்கும் தானே ஆடத்தொடங்கினான்.

ஆயுள் பூராவும் அவன் அப்படித்தான் ஆடிக்கொண்டிருப்பான்.

—முற்றும்—

கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் யாவும் கற்பனை. கதை, கட்டுரைகளை தபால் மூலமே அனுப்புதல் வேண்டும். அவற்றைத் திருத்தவும், சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. குங்குமம் பப்ளிகேஷன்ஸ் (பி) லிமிடெட்டிற்காக, கலையகம் அச்சகத்தில் அச்சிட்டு, 93–ஏ, கோடம்பாக்கம் நெடுஞ்சாலை, சென்னை–600034–லிருந்து வெளியிடுபவர் – எஸ்.செல்வம். ஆசிரியர் – பராசக்தி.